# வைணவ வரம்

டாக்டர். J. மனுவேல்

திருப்பதி

1997

VAINAVA VARAM

by

Dr. J. MANUEL

First Edition : January 1997

THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME, AID TO PUBLISH RELIGIOUS BOOKS.

Price : Rs. 35/-

Copies can be had from the author

Printed at :

LAKSHMI GRAPHICS

45-B, Ramanuja Iyer Street,

Chennai-600 021.

# பொருளடக்கம்



## இயல்

# அணிந்துரை

**Dr. K. சர்வோத்தமராவ்**

பேராசிரியர்
தெலுங்கு இலக்கியத்துறை
திருவேங்கடவன் பல்கலைக்கழகம்
திருப்பதி - 2: ஆ.மா.

நான் தெலுங்குத்துறையில் பேராசிரியராக இருந்தாலும் தமிழ்த்துறையில் பணியாற்றும் டாக்டர் ஜா. மனுவேல் எழுதிய 'வைணவ வரம்' என்ற புத்தகத்திற்கு அணிந்துரை வழங்குவதில் பெருமைப்படுகின்றேன். இதற்கு மூன்றுக் காரணங்கள் உள்ளன. 1. தமிழ் என்றாலும், தமிழ் இலக்கியம் என்றாலும் குறிப்பாக வைணவ இலக்கியம் என்றால் எனக்குள்ள ஆர்வம். 2. சிறந்த ஆராய்ச்சியாளராகக் கருதப்படும் இவ்வாசிரியர் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராய் இருப்பது; 3. மொழிகளுக்கு அப்பால் சிறுமை, பெருமைபாராது நல்ல புத்தகங்கள் வரவேண்டுமென திருமலை திருப்பதி தேவஸ்தானம் ஊக்குவித்தல் போன்றவற்றைக் காரணங்களாகச் சொல்லலாம்.

தமிழ் இலக்கியத்திலும், வளர்ச்சியிலும் வைணவத்தின் பங்கு போற்றுதற்குரியன ; இது இலக்கியச் சிந்தனையாளர்களின் உழைப்பே எனலாம் வைணவம் மக்களிடையே பரபரப்பையும், செல்வாக்கையும், நாகரீகத்தையும் ஏற்படுத்தியது என்பது வெள்ளிடைமலை ஆழ்வார்களின் அருளிச்செயல், வைணவக்கோயில்களில் நடைபெறும் பலவிதப் பூசை முறைகள், பக்தி நெறிகள், தத்துவங்கள் போன்றவை யாவரையும் கவர்வது, அனைவரும் அறிந்ததே தமிழகத்திலும் ஆந்திர கர்நாடக மாநிலங்களிலும் பேரரசர்கள் வைணவ மதத்தைப் போற்றி ஏற்றுக்கொண்டு ஆச்சார்ய புருஷர்களை ஆதரித்து வந்தது மட்டுமின்றி பல வைணவப் புத்தங்கள், கோயில்கள் உருவாகத்துணை நின்றார்கள்.

வைணவத்தை ஆசாரப்பரம்பரையில் விரிவாக எடுத்துரைப்பது என்பது ஒருவிதமானது. தத்துவம் பயிலும் அன்பர்களுக்கு இது பயனைத்தரும்.

வைணவத்தத்துவங்களின் அடிப்படையில் வைணவ இரக சியங்களைப் பாமர மக்களுக்கு எடுத்துரைப்பது இரண்டாவது முறையாகும். இக்காலத்திற்கு இதுதான் சிறந்த முறை டாக்டர் மனுவேல் எழுதிய வைணவ வரம் என்பது இம்முறை யில் விரிவாக தெளிவாக எழுதப்பட்ட சிறந்த நூலாகும். இப்புத்தகம் 1. இந்து மதம் 2. வாய் மொழியில் வேங்கடவன் 3. திருமாலின் திருநாமங்கள் ஆகிய மூன்று இயல்களைக் கொண்டிலங்குகின்றது. டாக்டர் மனுவேல் அவர்களின் தெளிவிற்கு சிறந்த உதாரணமாக நாட்டுப்புற இலக்கியத்தில் நாராயணன் என்ற இயலைக் குறிப்பிடலாம்.

'கோட்டி சூரியன் வெளிச்சம் போல
கிரீட்டம் உந்தன் தலமேல
மாட்டி வெச்சிருக்கும் மகிமை
வாட்டி வதைக்குது என்ன'

மேற்கண்டப்பாடலில் வைரக்கிரீடத்தின் சிறப்புப் பேசப் பார்க்கலாம் மேலும் மார்கழித் திங்களில் இம்மாவட்டத்தில் பெண்களிடையே கும்மி அடிக்கும் வழக்கம் இருக்கின்றது. கும்மிப் பாடல்களிலும் திருமால் இடம் பெற்றிருப்பது போற்றுதற்குரியது.

'கும்மியடி பெண்கள் கும்மியடி - நம்ம
வெங்கடேசு சாமிக்கு கும்மியடி
வைர மோந்திரத்த வெரலில் போட்டிருக்கும்
விஷ்ணு சாமிக்கு கும்மியடி'

பல்கலைக் கழகத்தில் பணிபுரியும் ஆசிரியர்களுக்கு போதனை, சோதனை, 'ஆறு' தன்னயில் சாதனைப்படைப்பர் மனுவேல் சிறந்த ஆசிரியராக இருப்பது மட்டுமல்லாமல் எழுத்தாளரும் ஆவர். அவரின் சிறப்பிற்குப் பல நூல்களும், கட்டுரைகளும் அணிசெய்து அமைந்தது கண்கூடு இலக்கியச் சேவைக்கும், வளர்ச்சிக்கும் அன்னாரின் ஆக்கத்தையும், ஊக் கத்தையும் தெளிவுபடுத்துகின்றது. எதிர்காலத்திலும் இத்தகு அரும்பணி தொடர வாழ்த்துகின்றேன். தொடரும் என்பதில் ஐயமும் இல்லை வாழ்க தமிழ் வளர்க வைணவ இலக்கியம்;

பேராசிரியர் : டாக்டர் டி. ஜே. இரகுபதி
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்
திருப்பதி-2. ஆந்திர மாநிலம்

# பாராட்டுரை

''காட்சிக்கு எளியர் கவின்மிகு மனுவேல்''

படைப்பாளியாக இருக்கின்ற மனிதன் உழைப்பாளியாக இருப்பதில்லை. உழைப்பாளியாக இருப்பவர் படைப்பாளியாக இருப்பதில்லை. உழைப்பாளியும், படைப்பாளியும் ஒருங்கு சேர இணைந்த உருவம் தான் டாக்டர். ஜா. மனுவேல்,

அவர் கூர்த்த மதியாளர்; நுண்மாண் நுழைபுலத்தார்; காட்சிக்கு என்றைக்கும் எளியர்; கடுஞ்சொற்கள் என்றும் அவர் அறியாதன; இனியன பேசி இதர மக்களின் இன்னலைப் போக்கும் குணம் படைத்தவர். ஆய்வு நெறி மாணவர்களிடத்தில் அவர் காட்டுகின்ற பற்றும் பரிவும் குறிப்பிடத்தக்கது. பொதுவாக மாணவர்களிடம் இனிமையாகவும், அன்பாகவும் பழகும் இயல்புடையவர்.

தமிழ் இலக்கியத்துறையில் தனக்கென தனிப்பாதை வகுத்து புகழ் பெற்று விளங்குபவர் தான் டாக்டர் மனுவேல். நன் முயற்சியும், ஆழ்ந்த நோக்கத்தையும், படைப்புத் திறனும் ஒருங்கே கொண்டு, விளங்கும் அவர் இந்த நூல் வாயிலாக பலரையும் சந்திக்க இருக்கிறார். அவருடைய உழைப்பு அவருக்கு நற்பெயரைத் தேடித் தரவேண்டுமென்று வாழ்த்துகின்றேன்.

வாழ்க தமிழ் ! வளர்க அவரின் தமிழ்த் தொண்டு.

# பாராட்டுரை

**கவிமாமணி, கு. கணேசன்**
எம். ஏ. (தமிழ்) எம்.ஏ, (பொருள்) எம்ஃபில், எம்.எட்.,
12, மூன்றாம் குறுக்குத் தெரு,
நாராயண நகர், சேலம்-15.



**'வைணவ வரம்'** என்னும் நூலைப் படிக்கும் போது கிடைத்தது.

மனிதனை நல்ல நெறிபடுத்தும் மாபெரும் வேலை எனலாம். இன்றைய விஞ்ஞான உலகில் இதயங்கள் அமைதியைத் தேடி அலைகின்ற போது ஏதோ ஒன்றை இழந்ததாகவே உணர முடிகிறது.

அந்த ஏதோ ஒன்று தான் ஆன்மீகம் என்னும் கடலுக்குள் நீந்துவதற்கு பல முனைக்கொண்ட சக்திகள் தேவைப் படுகிறது.

அந்தச் சக்திகளின் ஒரு பாகம் தான் இறைவழிபாடு மதம் போன்ற பல்வேறு முகங்கள்.

இந்நூலாசிரியர் இளைஞர் - நல்ல பேராசிரியர் - நல்ல பண்பாளர் ஆன்மீக நூலைப் படைத்தளித்துள்ளார் அவருடைய முயற்சி பெரிதும் போற்றுதலுக்கும் வழிபாட்டுதலுக்குமுரியது.

**'வைணவ வரம்'** விற்பனை உலகிலும்-பக்தி நெறியிலும் உயர்ந்து நிற்கும் என்பது உறுதி மேன் மேலும் பேராசிரியர் முனைவர் மணுவேல் அவர்களின் இறைப் பணியும், இலக்கிய பணியும் தொடர-வளர இறைவனை வேண்டுகின்றேன்.

வாழ்த்துகளோடு
**கு. கணேசன்**

# நன்றியுரை

எனது வளர்ச்சியில் தொடர்ந்து அக்கறை காட்டி என்னை நெறிப்படுத்தும் எனது வழிகாட்டி முனைவர் தானியேல் தேவசங்கீதம் அவர்களுக்கு நன்றி தன்னைப் போல் பிறரும் வாழவேண்டும் என்ற பரந்த நோக்கம் கொண்ட எனது ஆசிரியர் ஆர். மனுவேல் அவர்களுக்கு நன்றி. தன்னை நாடி வந்தோருக்கு இனிப்பு வழங்கி, இன்முகம் காட்டி, இல்லாளைக்கொண்டு இனிதே உபசரித்து இன்றைய தமிழ் வளர்ச்சிக்கு ஏற்றக் கருத்தினை இதமாக, இதயக்கனிவோடு கொடுத்துதவிய பொன். சவுரிராசன் அவர்களுக்கு நன்றி. எதிர்வரும் காலத்தே மேற்கொள்ள வேண்டிய செயல்பாடுகள், துறை வளர்ச்சிக்கான பணி திட்டங்கள் போன்றவற்றைப் பண்புடன் எனக்குரைத்த துறைத் தலைவர் தர்மா ரெட்டி அவர்களுக்கு நன்றி. அவ்வப்போது அருள்வாக்குகளை அடுக்கு மொழியில் அயராது அளித்து உதவிய டாக்டர் தா. செ. இரகுபதி அவர்களுக்கு நன்றி, இப்புத்தகம் செவ்வனே முடிவுப் பெற நல்லகருத்துக்களையும், நல்லவர்களின் நட்பையும் நல்கிய டாக்டர் மா. வரதராசன் அவர்களுக்கு நன்றி. இதுவரை என்வளர்ச்சி பாதைக்கு வெவ்வேறு காலக்கட்டத்தில் ஏணிப் படிகளாய் விளங்கிய எனதருமைப் பாண்டவர்கள், எம். மாணிக்கம், எம். விஜயன், பி. விஜயன், எஸ். செல்வராஜ் டி. கணேசன் போன்றவர்களுக்கு என்றுமே நன்றியுடையவனாக இருப்பேன் என்பதில் ஐயப்பாடில்லை.

எனது ஆய்வேடு நூல் வடிவில் வெளிவர உதவியாக இருந்த சப்தகிரி ஆசிரியர் திரு. இராமமூர்த்தி அவர்களுக்கு நன்றி. இந்நூல் வெளியிட நிதி உதவி வழங்கிய திருப்பதி திருமலை தேவஸ்தானத்திற்கு எனது நன்றி.

இந்நூலை நல்ல முறையில் அச்சிட்டும் கொடுத்த பாக்யம் குவாலிடி G. வீரபிரம்மம் அவர்களுக்கு எனது அன்பும் நன்றியும் என்றும் உரித்தாகுக. அச்சகம் செல்ல வாகனத்துடன், உதவிகளையும் செய்து கொடுத்த இருவல்லவர்கள் கே. சம்பத், இரவீந்திரன் ஆகியோருக்கு நன்றி! நன்றி !!

இரா மனுவேல்

# முன்னுரை

ஆய்வுப் பொருள் :

மனித வரலாற்றை ஆழ்ந்து நோக்கினால் வாழ்வோடு இணைந்தது சமயம் என்ற உண்மை தெளிவாகப் புலனாகும். இவ்வுலகில் உள்ள எல்லாச் சமயங்களைச் சார்ந்த மக்களும் இந்தப் பேருண்மையை நன்கு அறிவார்கள். இன்று தமிழகத்திலும், ஆந்திர மண்ணிலும் நிலவி வரும் பல்வேறு சமயங்களுள் வைணவ சமயமும் ஒன்று. இது திருமாலை முதற் கடவுளாகக் கொண்டுத் திகழ்வது; பல உயரிய கொள்கைகளையும், சித்தாந்தங்களையும், தத்துவங்களையும், தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது. இச்சமயம் பழம் பெருமை வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது. தொல்காப்பியத்திற்கு முன்பிருந்தே வழக்கிலிருந்து வருவதே இதன் பழமையை மெய்ப்பிக்கும். ''மாயோன் மேயகாடுறை உலகம்'' என்ற தொல்காப்பிய நூற்பா இப்பழமைக்கு அரணாக அமைவது குறிப்பிடத்தக்கது.

> உயிரும் உடலும் உடலாக ஓங்கித்
> தயிர் வெண்ணெய் தாரணியோடு உண்டான் பயிரில்
> களைபோல் அசுரரைக் காய்ந்தான் தன் கையில்
> வளைபோல் எம் ஆசிரியர் வாக்கு

என்பர் வேதாந்த தேசிகர்.

எம்பெருமான் ஆன்மாக்கள் உய்வு பெறவேண்டும் என்பதற்காக உலகைப் படைத்தான். அவ்வுலகத்துள் உயிர்களுக்கு இன்பத்தை வழங்கியும் துன்பத்தைக் கொடுத்தும் பக்குவப்படுத்துகிறான். இறைவன் திருவுள்ளத்தைப் புரிந்துக் கொள்ளாதவர் பலபடப் பேசுவர், சிலர் ஏசுவர். பலவித இடையூறுகளிடையே தான் அழியா சின்னம் படைத்த மதம் என்ற நிறுவனம் கற்ற, கல்லா மக்களிடையே உலா நீக்கிவிடுக வருவதைக் கண்கூடாகக் காண்கிறோம்,

வைணவ தத்துவம் தொல்காப்பியம் மட்டுமல்லாது, திருமுருகாற்றுப்படை, பரிபாடல், சிலப்பதிகாரம் போன்ற நூல்களிலும் காணக் கிடக்கின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குக் மேலாக தமிழகத்தில் இத்தத்துவம் மக்களிடையே இருந்து வந்துள்ளமையை, ஆதாரங்கள், பல வெளிப்படுத்துகின்றன.

ஆழ்வார் பாசுரங்களிலும், வேறு சில வைணவ தத்துவ கிரந்தங்களிலும் யான் கண்டறிந்தவற்றை இயன்றவரை நல்ல தமிழில், எளிய நடையில் தமிழன் பர்கடகும், சிறப்பாக வைணவ நெறிகளை அனுஷ்டி நிற்பவர்களுக்கும் ஒரு வழித் துணை நூலாக இருக்கட்டும் என்று கருதி ''வைணவ வரம்'' என்ற தலைப்பில் எழுதத் துணிந்தேன். வேண்டுவார்க் கெல்லாம் வேண்டுவன நல்கும் வேங்கட மலைத் தலைவன் இதனை வெளியிட நிதி உதவி அளித்திட வகை செய்தான். திருமலை-திருப்பதி தேவஸ்தானம் நிதி உதவியால் ''வைணவ வரம்'' அச்சுப்பொறி ஏறித் தமிழ்கூறு நல்லுலகில் நடையாடும் வாய்ப்பினைப் பெற்றது.

**ஆய்வின் அமைப்பு**

இப்புத்தகம் மூன்று இயல்களைக் கொண்டது. முதலாம் இயல் 'இந்து மதம்' என்பதாகும் இவ்வியலில் 'இந்து' என்ற சொல்லின் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. 'இந்து' என்ற சொல்லுக்குச் சொற்பொருள் விளக்கம் கொடுத்து, இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கைகளைச் செவ்வனே எடுத்துச் சொல்லப்பட்டுள்ளது.

இந்து மதத்தின் பழமை, சிறப்பு போன்றவைப்பற்றிய அயல் நாட்டவறதுக் கருத்தும் இவ்வியலில் குறிப்பிடப்பட்டுள் ளது. மேலும் அயல் நாடுகளில் இந்துமதம் - அதன் வளர்ச்சி மேனாடுகளில் இந்து மதக்கோயில்கள் இருக்கும் இடங்களும் இவ்வியலில் காணலாம்.

உலகில் சமயங்கள் தோன்றியக் காலத்தைத் தெளிவாக குறிப்பிடப்பட்டுள்ளது.

வைணவ சமயத்தில் திருமாலின் ஐந்து சொரூபங்களும் நாட்டுப் புறப்பாடல்களில் பிரதிபலிப்பதையும் இவ்வியலில் காணலாம்.

வைணவத்தோற்றம், வைணவத்தின் பொதுவானக் கருத் துக்கள், தமிழகத்தில் வைணவத்தின் நிலை வடலை, மற்றும் தென்கலை, விக்கிரக வழிபாடு, உருவ வழிபாட்டில் மானிட ருக்கு ஏற்படும் மனநிறைவு போன்றவை இவ்வியலில் ஆராயப் பட்டுள்ளன.

மூன்று வகையான பூசனைகள், கல்வெட்டுக்களில் திருமால் பற்றியக் குறிப்புகள் பல கோயில்கள் இருப்பதற்கானக் காரணங்கள், விக்கிரக வழிபாட்டின் பிறப்பும், வரலாறும் விளக்க மாகச் சொல்லப்பட்டுள்ளன.

ப்ரகிருதி, ஜீவாத்மா, பரமபத்மா போன்ற முப்பொருள் களும், மோட்சத்திற்குரிய இடையூறுகள், கடவுள் என்பதன் இலக்கணம், ஆழ்வார்கள் கொடுக்கும் பெயர்கள் யுகங்கள், பிரளயம் போன்றவை இவ்வியலில் குறிப்பிடப்பட்டுள்ளன:

'வாய்மொழியில் வேங்கடவன்' என்ற இரண்டாவது இயலில் சித்தூர் மாவட்ட நாட்டுப் புறமக்கள் வேங்கடவனுக்கு அளித்துள்ள இடம், வேங்கடவனைப் பற்றியக் கதைகள், வேங்கடவனுக்கு வழங்கும் வேறு பெயர்கள் போன்றவை ஆராயப்பட்டுள்ளன.

திருமலை தேவஸ்தான வளர்ச்சிர்கு பல்வேறு அரசர்கள் ஆற்றியத்தொண்டு, இலக்கியங்களில் திருவேங்கடவன் இடம் பெற்றுள்ளமைப் போன்றவையும் இவ்வியலில் குறிப்பிடப் பட்டுள்ளது.

இவ்வியலில் இறுதியாகப் 'பக்தி' என்பது யாது என்பதை யும், பக்தியின் வகைகளையும் சிறப்பாகச் சொல்லப் பட்டுள்ளது.

'திருமாலின் திருநாமங்கள்' என்ற மூன்றாம் இயலில் இறைவனுக்குரிய சிறப்பான 108 திருநாமங்களும், அத்திரு நாமங்கள் வழங்கி வருவதற்கானக் காரணங்களும் சொல்லப் பட்டுள்ளன. ஒவ்வொரு திருநாமத்திற்கும் சொல்லப்படும் கதைகள், விளக்கங்கள் போன்றவை இவ்வியலில் குறிப்பிடப் பட்டுள்ளன.

**ஆய்வின் நோக்கம்**

இவ்வாய்வேடு இரண்டு நோக்கங்களுர்காகவே என்பது ஆய்வாளரின் கருத்தாகும். ஒன்று சமயத்தைக் குறித்த தெளிந்த முடிவை மனித இனம் உணரும் வகை, மற்றொன்று இச்சிந்தனை வாயிலாகத் தமிழ்ப்பயிரினைத் தரணி மக்களுக்கு தந்துதவுவது என்பதாகும். எது எப்படியாயினும் தமிழ் வளர்ச்சியே ஆய்வின் நோக்கம் என்பது ஆய்வாளரின் முடி வான முடிவாகும்.

**ஆய்வின் மூலம்**

இந்த ஆய்வுக்கு மூலமாகத் திகழ்வது ஆழ்வார்களின் பாசுரங்கள், நாலாயிரத் திவ்யபிரபந்தம், நாட்டுப்புறமக்களி டையே இருந்துவரும் கதைகள் போன்றவை ஆகும்.

# முடிவுரை

1. பிற உயிர்கள் துன்பப்படுவதைக் கண்டால் அந்தத் துன்பம் தனக்கு வந்ததாகக் கருதுபவன் 'இந்து' என்பது முடிவாகக் கருதப்பட்டது.

2. சமய உண்மைகள் அனைத்திற்கும், பொதுவாகவும், நிலைக்களனாகவும் விளங்குகின்றமையே இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கை ஆகும்.

3. அறிவுக்குப் பொருத்தமானதாகவும், அலுவலகத்திற்கு ஒத்ததும் ஆன சமயம் வேறு காணவில்லை என்கிறார் அன்னிபெசன்ட் அம்மையார்.

4. உருவ வழிபாட்டால்தான் மக்களிடையே பக்தி செழிக்கும் எம்பெருமானின் உருவத்தை மனதில் நினைத்து அவனை தியானித்து அவனுடைய அருளைப் பெறுவது அர்ச்சா வதாரத்தில்தான் என்பது அறியப்பட்டது.

5. ஆலயம் வைணவம் இரண்டும் பிரிக்க முடியாத தொடர்புடையனவாயிருப்பினும், ஆகமத்தையே பெரும் பாலும் அடிப்படையாகக் கொண்ட ஆலய வழிபாடே 'வைணவம்' என்று கூறுதல் பொருத்தமுடையதாகும்.

6. ''வைணவம்'' என்ற சொல் வேதத்தில் காணப்பட்டா லும், அது அஸ்ருவோறாரு கருத்தில் பயன்படுத்தப் பட்டச் சொல்லாகும். விஷ்ணுவை மட்டும் வழிபடுவது என்பது பின்னர் வந்த சொல்லாகும்.

7. வைணவம் என்ற பிரிவில் இன்று பாரத தேசத்தில் 74 பிரிவுகள் உள்ளன என்று சுவாமி தத்வாநந்தா என்பவர் கணக்கிட்டுக் கூறியுள்ளார்.

8. நெற்றியில் திருமண் இட்டுக்கொள்வதில் காணப்படும் வேற்றுமை கருதி தமிழகத்தில் வடகலை, தென்கலை என்ற இரு பிரிவுகள் இருந்தாலும், இரு பிரிவினரும் நாத முனிகள், ஆளவந்தார், இராமானுஜர் போன்றவர் களையே தங்கள் மூல புருஷர்களாக ஏற்றுக்கொள் கின்றனர் என்பது அறியப்பட்டது.

9. பகுத்தறிவாளர்கட்கு ஏற்றார் போலவும், பொது மக்களின் அறிவு வளர்ச்சிக்கு உகந்த வழியிலும் மனித உளப்பங்கை உட்கொண்டு குறைகள் தீர்ந்து; மன நிம்மதி அடையும் வகையில் மத நூல்கள் இறைவனுக்கு வடிவம் குணம், செயல்களையும் ஆகியவற்றைக் கொடுத்தும்'

பொது மக்களை தெய்வச் சிந்தனையில் ஆழ்த்துகின்றது என்பது முடிவாக தெரியப்பட்டது.

10. நித்தியம், நைபத்தியம், காமியம் என்பன மூன்று வகை பூசனைகளாகக் கருதப்பட்டன.

11. 'அர்ச்சனை' என்பது வழிபாடு என்றும், அர்ச்சனை என்பது பொதுமக்களின் நலனைக்கருதி கையாளப்படும் ஒரு தனிவழி என்றும் அறியப்பட்டது.

12. மனிதனின் மனப்போக்குப் பல படியாக இருப்பதால் பல வடிவங்களில் பல கோயில்களில் காட்சியளித்து அவனவன் விரும்பும் வடிவில் ஆட்கொள்கிறான் என்பதைக் காட்டவே பல கோயில்கள் தோன்றியுள்ளன் என்பது தெரிய வந்தது.

13. சித்தூர் மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் திருமால் பற்றியக் குறிப்புகள், அன்னாறது மகிமை, போன்றவை காணப்படுகின்றது.

14. கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த நூலாக தொல்காப்பியம் கருதப்பட்டுள்ளது. இந்நூலிலும், சங்க இலக்கியங்களிலும் திருமலையைக் குறித்துச் சொல்லப் பட்டிருந்தாலும் அத்திருமலையில் வீற்றிருக்கும் தெய்வத் தின் பெயர் பற்றியக் குறிப்புக் காணப்படவில்லை.

15. கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் வந்த நன்னய்யா பாரதத் தில் வெங்கடேஸ்வரனை பற்றியக் குறிப்புக் காணப்பட வில்லை.

16. கி.பி. 15-வது நூற்றாண்டில் வாழ்ந்தவர்களான தாள்ள பாக்க வம்சத்தவர்களே வெங்கடேஸ்வர சுவாமியைக் குறித்து தெலுங்கு இலக்கியத்தில் குறிப்பிட்டவர்களா வர் என்பது முடிபாக அறியப்பட்டது.

17. பொருளாதாரத்தையும், ஞானத்தையும், குணங்களையும் ஆதாரமாகக் கொண்டு பக்தியை மூன்று பிரிவுகளாகப் என்பது தெறியவந்தது.

18. திருவேங்கடனுக்கு பெயர்கள் வாய்த்தாலும் சிறப்புக் குரியனவாக 108 திரு நாமங்கள் விளங்கிவருவது அறியப் பட்டது.

19. திருநாமம் விளங்க, வழங்க, ஏற்பட பல கதைகள் கூறப் பட்டுள்ளமை, அவை எவ்வாறு பொருந்துகின்றன, ஏற்கப் படுகின்றன என்பதும் முடிவாக அறியப்பட்டன.

# இந்து மதம்

வைணவம், சைவம் முதலிய பாரத நாட்டு வைதிக சமயங்களுக்குப் பொதுவான பெயர் இந்து மதம் என்பதாகும். இந்து மதம் வரலாற்றுக்கு முற்பட்ட பழமையானதாயினும், அதன் பெயராகிய இந்து என்ற சொல் அண்மைக் காலத்தது எனலாம். மேலை நாட்டு மக்கள் முதன் முதலாக இந்தியா வுக்கு வந்த போது இங்குள்ள சமயத்திற்கு ஒரு பொதுவான பெயர் இல்லாததால் அதைக் குறிப்பிட 'இந்து' என்ற சொல்லை பயன் படுத்தியிருப்பர். மேனாட்டார் முதலில் புகுந்த இடம் சிந்து நதிப்பள்ளத்தாக்கு ஆகும். சிந்து நதி யோடு தொடர்புடைய மதம் சிந்து மதம் என்றனர். சிந்து என்பது உச்சரிப்பில் ஹிந்து என மாறுவது இயல்பு. ஹிந்து மதம் வழங்கிய நாடு இந்தியா ஆனது.

### இந்து - சொற்பொருள்

இந்து என்ற சொல் புதிய வேற்றுச் சொல்லாயினும் அதற்கும் நம் முன்னோர்கள் பொருள் கண்டு பிடித்துள்ளனர் ''பிற உயிர்கள் துன்பப்படுவதைக் கண்டால் அந்தத் துன்பம் தனக்கு வந்ததாகக் கருதுபவன் 'இந்து' என்பது நம்மவர் கொண்ட பொருள். இம்-இம்சையில், து-துக்கிப்பவன் என்பது பதவுரை ஆகும்.

வட மொழியில் 'சப்த கல்பதரு' என்ற ஓர் இலக்கண நூல் உள்ளது. அதில் ''ஏயம் நிந்தாதி இதம் இந்து'' என ஓர் தொடர் காணப்பெறுகின்றது. இதன் பொருள் மனம், மொழி, மெய் ஆகிய முக்காரணங்களாலும் குற்றம் நேராமல் கவனமாக ஒழுகுபவன் இந்து. என்பதாகும்

### அடிப்படைக் கொள்கை

எந்த சமயத்தையும் எந்த நூலையும் இந்து சமயம் புகழாது, பழிக்காது, குற்றம் கணாது. பல்வேறு சமயங் களும் பேசுகின்ற உண்மைகளில் ஏற்புடையவற்றை ஏற்று கடைபிடிக்கும்.

சமய உண்மைகள் அனைத்துக்கும் பொதுவாகவும், நிலைக்களனாகவும் விளங்குகின்ற பரந்த மனப்பான்மையுள்ள சமயமும், நூலும் சிறந்தவைகளே என்பது இந்துமதத்தின் அடிப்படைக்கொள்கை,

அவரவர் தமதம தறிவறி வகை வகை
அவரவர் இறையவர் என அடி அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே''
என்றும்

நும் இன் கவிகொண்டு நும்நும்
இட்டா தெய்வம் ஏத்தினால்
செம்மின் சுடர்முடி எம்திரு
மாலுக்குச் சேருமே

என்றும் நம்மாழ்வார் வாய் மலர்ந்து இக்கருத்தை உணர்த்து கின்றார்.

**அயல் நாட்டவரால் பாராட்டு**

இந்து மதத்தின் பழமையையும், சிறப்பையும் குறித்து நாமே பேசிக்கொள்வதினால் பயனுடையதும், சிறப்புடையதும் ஆகாது. ஒரு நலல சமயம் என்றால் அச்சமயத்தைப் பிற சமயத்தைச் சார்ந்தவர்களும், ஆராய்ச்சி சிந்தனையாளர் களும், முற்போக்குக் கொள்கை உடையவர்களும் போற்றுதல் வேண்டும். அதனடிப்படையில் சிலரின் கூற்றுகளைக் காண் போம்.

''இந்து சமயம் சமயங்கள் எல்லாவற்றிலும் உள்ள நல்ல கொள்கைகளை எல்லாம் ஏற்கின்றது. அது எந்த சமயத் தையும் தாழ்த்திப் பேசுவதில்லை. ஏற்புடைய கொள்கைகளை உடன்பட்டுத் தழுவிக் கொள்கின்றது. மனிதகுலம் அனைத் துக்கும் ஏற்ற சமயம் அது. இயற்கைக்குப் பொருந்திய சமயம். உலகத்திற்கு இனியது இந்து சமயம் பிற மதங்களின் வளர்ச்சி யைத் தடுக்க எண்ணும் குறுகிய கண்ணோட்டம் இந்து மதத்தில் இல்லை'' என்று சர், மோனியர் வில்லியம்ஸ் என்பவர் கூறுகின்றார்.

''ஐரோப்பியர்களாகிய நாம் கிரேக்க, யூத உரோம தத்து வங்கள் மட்டும் படித்தால் போதாது. நம் மனம் நிறைவு உள்ளதாய், நலன்கள் பல பெற்று உலகளாவி விரிந்து உயரிய மனிதப் பண்புள்ளதாய் அமைய வேண்டுமாயின் இந்திய தத்துவ நூல்களைக் கற்பது அவசியம் என்று கூறுகிறார். மாக்ஸ் முல்லர் அவர்கள்.

கடந்த 40 ஆண்டுகளாக உலகின் பல்வேறு பெரிய சமயங்களையும், ஆராய்ந்து வந்துள்ளேன். இந்து சமயம் போல் நிறைவுடையதும், அறிவுக்குப் பொருத்தமானதும், அனுபவத்திற்கு ஒத்ததும் ஆன சமயம் வேறு காணவில்லை. இந்து சமயத்தை உணருந்தோறும் அதன்பால் நம் ஆர்வம் பெருகுகின்றது என்று கூறுகிறார் அன்னிபெசன்ட் அம்மையார்.

### அயல் நாடுகளில் இந்து மதம்

பண்டைய சீனாவில் இந்து மதம் நன்றாகத் தழைத் தோங்கி இருந்துள்ளது. மக்கள் மட்டுமின்றி ஆட்சியாளர் களும் இந்து மதத்தைப் பின்பற்றினார்கள். சீனாவின் தென் கிழக்குப் பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள பண்டைய காலத்தின் இந்துக் கோவில்களின் வழிபாடுகள் சில இக்கருத்தை உறுதிச் செய்கின்றன.

சீனாவில் கி.மு. 3-ஆம் நூற்றாண்டிலிருந்து இந்து மதம் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. அப்போது சீனாவை ஆண்டு வந்த ஹான் வம்சத்தினர் இந்து மதத்தை மிகச் சிறப்பாகப் போற்றி வந்தனர். கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் ஆண்டுவந்த 'சூ' மரபினர் இந்துக்களாகவே இருந்தனர். 9-ஆம் நூற்றாண்டினரான டாங் வம்சத்தாரும் இந்து மதத்தைப் பின்பற்றி வந்தனர்.

'சூ' மரபினர் ஆண்ட காலத்தில் சீனாவில் இந்து மதம் மிகவும் சிறப்பாக விளங்கியது. வாயில் உச்சரிக்க இயலாத பெயர்களை வைத்துக்கொள்ளும் சீனர்கள் நாராயணா என்றும், சிவதாசா என்றும் பெயர் வைத்துக்கொண்டனர்.

கனிஷ்கர் காலத்தில் இந்தியாவுக்கு வந்த சீனப் பயணி பாஹியான், சீனாவில் பல இந்துக் கோவில்களும், இந்து தெய்வங்களை வணங்கும் இந்து மதத்தினரும் பலரும் இருந்துள்ளதைக் குறிப்பிட்டுள்ளனர். ஜப்பானில் இந்து சமயக் கோவில்கள் இன்றும் உள்ளன. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் வழக்கப்பட்ட கிருஷ்ணன் சிலைகள் இன்றும் அக்கோயில்களில் பத்திரமாகப் பாதுகாத்து வரப்படு கின்றன.

நேபாளம் தற்போது ஒரு இந்து நாடாகத் திகழ்கின்றது. நேபாளத்தில் பல்வேறு இடங்களில் இந்துக் கோயில்களும், இராமன், கிருஷ்ணன் போன்ற சிலைகளும் இருப்பதைக் காணமுடிகிறது.

கம்போடியா நாட்டைச் சேர்ந்த ''அங்கோர் வாட்'' என்ற இடத்தில் மகா விஷ்ணுவுக்கு மிக மிகப் பெரிய ஆலயம் உள்ளது. அக்கோவிலில் திருமால் பாற்கடலைக் கடைவது முதலாகப் பல இந்து சமயச் சிற்பங்கள் உள்ளன.

தாய்லாந்து நாட்டில் இந்து கோவில்கள் பல உள்ளன. திருப்பாவை-திருவெம்பாவைப் பாடல்கள் பூசை செய்யும் போது சொல்லப்படும் மந்திரங்களாக இன்றும் வழக்கில் உள்ளன; பல ஊர்களின் பெயர்கள் இராமாயணத்தில் இடம் பெற்றிருக்கும் பாத்திரங்களின் பெயர்களில் உள்ளன. தாய்லாந்தின் விமானப் போக்குவரத்திற்கு ''கருடா ஏர்லைன்ஸ்'' என்றே பெயர் இடப்பட்டுள்ளது. இந்தோனேஷியாவைச் சேர்ந்த பாலித்தீவில் வசிப்பவர்கள் அனைவரும் இந்து சமயத்தைச் சார்ந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தோனேஷியாவில் வாழும் மக்களுள் பெரும் பான்மையோர் இஸ்லாமியர் இருந்தாலும் அவர்கள் சுகர்னோ, இரத்னாதேவி, போன்ற இந்து பெயர்களைத் தாராளமாக வைத்துக் கொள்கின்றனர்.

### சமயங்கள் தோன்றிய காலம்

உலகிலுள்ள பிற மதங்கள் அனைத்தும் தோன்றிய காலம் அறுதியிட்டுக் கூற இயலும்.

| | | |
|---|---|---|
| யூத மதம் | — | கி.மு. 1500 - 1200 |
| சௌராஷ்டிரம் | | |
| பார்ஸி | — | கி.மு. 660 |
| டாவோயிஸம் | — | கி.மு. 604 |
| சமணம் | — | கி.மு. 599 |
| பௌத்தம் | — | கி.மு. 560 |
| கன்பூசியம் | — | கி.மு. 551 |
| கிருத்துவம் | — | கி.பி. 4 |
| இசுலாமியம் | — | கி.பி. 570 |
| சீக்கியம் | — | கி.பி. 1469 |

என்று நிகழ்ந்தது. அனைத்தும் உணர்ந்திடும் சூழ் கலை வாணர்களாலும் இது என்று பிறந்தது என்று அறிய இயலாத இயல்பைக் கொண்டது இந்து மதம் ஒன்றே ஆகும். எகிப்து மெக்ஸிகோ, பாபிலோனியா, அசிரியா, பினீசியா, ஆசியா, கிரீஸ், ரோம் முதலிய நாடுகளில் தோன்றிய பற்பல மதங்கள் இன்று இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயின. ஆனால் காலம் காண இயலாத பழமையான இந்த சமயம் மட்டும் இன்றும் புதுப்பொலிவுடன் காலத்தை வென்று விளங்கி வருவதைக் காணலாம். இந்து சமயத்தின் பழமை கருதியே இதற்குச் ''சநாதன தருமம்'' என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

# வைணவ சமயம்

நமது நாட்டில் முதன்மையாக விளங்கும் சைவம், வைணவம், காணாபத்யம், கௌமாரம், சாகதம், சௌரம் முதலான பல சமயங்களின் விளக்கங்களை 18 புராணங்களி லும் உப புராணங்களிலும் காணமுடிகிறது. வைணவ புராணங்களுள் மிகவும் ஏற்றம் படைத்து விளங்குவது விஷ்ணு புராணம். இதிலிருந்து பல மேற்கோள்களைக் காட்டியே வைணவ சமயம் ஓங்கிவளர்கிறது. வைணவ சமயத்தில் திருமால் 5 சொருபங்களில் நிலை கொண்டுள்ளார்.

1. அந்தர்யா மித்துவம் - பூமிக்குள் மறைந்திருக்கும் நீர் போன்றது
2. பரத்துவம் - மழை நீர் போன்றது
3. வியூகம் - திருப்பாற்கடல் போன்றது
4. விபவம் - பெரும், ஆறு போன்றது
5. அர்ச்சாவதாரம் - தேங்கிய மடுக்கள் போன்றது;

**அந்தர்யாமித்துவம்** *(அருவ நிலை)*

வைணவ சம்பிரதாயத்தில் இறைவனின் ஐந்து நிலை களுக்கு நீரின் ஐந்து தன்மைகளை உவமையாகக் கூறுவர். தண்ணீர் பூமிக்குள் மறைந்திருந்து மக்களுக்குப் பயன்படும் வகையில் பகவான் எங்கும் நிறைந்து (மறைந்து) பிரம்மன் தொடங்கி ஈ எறும்புவரை அனைத்திலும் உயிருக்கு உயிராய் இருந்து செயலாற்றுகின்றார். இதனை வெளிப்படுத்துகின்ற நாட்டுப்புறப் பாடலொன்று தமிழிலும் தெலுங்கிலும் கிடைக்கப்பெற்றுள்ளன.

வெங்கட்டா ஜலபதியே எங்கள்
தீவனைகளைத் தீர்ப்பவனே
பஞ்ச பூதங்கள் பதுங்கியிருக்கும்
பலருக்கு நன்மை அளிக்கும்
நாராயாணா ஓம் நாராயணா மூர்த்தியே
ஈசன் முதல் ஈ எறும்பு வரை
காக்கின்றாய் காக்கின்றாய் தயாபரா

இது போன்ற பொருளுடையதொரு தெலுங்குப்பாட்டும் சித்தூர் மாவட்டத்தில் சேகரிப்புப் பணியின்போது கிடைக்கப் பெற்றது;

திருமலேசா திரபதி திருமலேசா
திக்கு முக்கு லேனி அண்டமுலோ
நன்னு காப்பாட எவ்வரு வேரு
பஞ்ச பூதமுலு கல்கியுன்னாவு
பாதாளமுலோ சேரியுன்னாவு
சிவுடு மொதலு சீமலு காகுலு கெத்தலு
சித்த முகா காப்பரி நீவே

"திருமலையில் எழுந்தருளி இருக்கும் பெருமாளே திக்குத் தெரியாத இவவுலகில் என்னை காப்பாற்ற யாருமில்லை. பஞ்ச பூதங்களாய் பூமியிலே மறைந்திருக்கின்றாய். சிவன் முதலாக எறும்பு, காகம், பருந்து போன்றவற்றைக் காப்பவனே" என்பது மேற்கண்ட தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

தமிழ்ப்பாடலில் பஞ்சபூதங்களைப் பற்றிய குறிப்புக் காணப்பெறுவது போன்று தெலுங்குப் பாடலிலும் பஞ்ச பூதங்களைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன தேவர் கள் முதல் ஈ எறும்புவரை எல்லா உயிர்களிடத்தில் உயிருக்கு உயிராய் இருந்து வருகிறார் என்பது இரண்டு பாடல்களிலும் காணப்படுகின்றது.

**பிரத்துவம்** *(வியாபகம்)*

இவ்வுலகத்தில் எங்கும் நிறைந்திருந்து அருள் அளித்தல். மழை நீர் போன்றது. திருநாடு என்று புகழப்படும் பரம பதத்தில் திருமாமணி மண்டபத்தில் சீரிய சிங்காசனத்தில் கொலுவீற்றிருத்தல் என்பதாகும். இதனை வெளிப்படுத்தும் வகையிலே நாட்டுப்புறப் பாடலொன்று பாடப்பெறுகின்றது.

அண்ணனுக்கு பேஞ்ச மய
தம்பிக்கும் பேஞ்சதடா
குடிகாரனுக்கு பேஞ்சமய
கொலைகாரனுக்கும் பேஞ்சதடா
தயாளனுக்கு பேஞ்ச மய
திருடனுக்கும் பேஞ்சதடா
நல்லவனுக்கு மய கெட்டவனுக்கும் மய
நாராயணா! நாராயணா நமோ நமோ

இது போன்ற பொருளைத் தரக்கூடிய தெலுங்குப் பாடல் ஒன்றும் இம்மாவட்டத்தில் வாழும் தெலுங்கு மக்களால் பாடப்பெறுகின்றது.

ஏடு ரோஜுலு வானாயே
ஏருவாக்க வச்சிந்திரோய்-பாபா
ஏமார்சே வாடிக்கி ஏளக்கு வானாயே
கூர்சோனுண்டே வாடிக்கி குதுரு வானாயே
தொங்க வாடிக்கி தொந்தரகா வானாயே
தொரகாரிக்கி தோடு வானாயே
அன்னதம்புடுக்கி அப்புடே வானாயே
அபத்தால சுப்புடுக்கி சூஸ்தானே வானாயே
அன்னிடிக்கி காரணகர்த்தா நாராயணுடே

''ஏழு நாட்களாக மழை பெய்தது. வெள்ளம் கரை புரண்டோடியது. ஏமாற்றுபவர்களுக்கு நேரத்திற்கு மழை பெய்தது, சோம்பேரிக்கு போதுமான மழை பெய்தது; திருடனுக்கு தினமும மழை பெய்தது; பெரும் புள்ளிக்குத் துணையாக நல்ல மழை பெய்தது; அண்ணன், தம்பிககு அப்பொழுதே மழை பெய்தது; பொய் பேசித்திரிபவனுக்கு வேண்டும்போதெல்லாம் மழை பெய்தது இத்தனைக்கும் காரணமானவன் நாராயணனே'' என்பது மேற்கண்ட பாடலுக்குரியப் பொருளாகும்.

நன்மை செய்தவனுக்கும், தீமை செய்தவனுக்கும் மழையானது பாரபட்சமின்றிப் பொழிகின்றது என்பதை இரண்டு பாடல்களும் உணர்த்துகின்றன. இத்தனை அருஞ் செயல்களுக்குக் காரணமாய் திகழ்பவன் 'திருமால்' என்பவனே என்று இரண்டு பாடல்களும் உணர்த்துகின்றது.

**வியூகம்** (அணிவகுத்தல்)

அணிவகுத்து நின்று அருள் பாலித்தல். திருப்பாற்கடல் போன்றது. திருப்பாற்கடலைக் கடைந்து அதில் தோன்றும் அமிழ்தத்தை அசுரர்களுக்குக் கிடைக்காதவாறு செய்த நிகழ்ச்சி போன்றவற்றை வெளிப்படுத்தும் நாட்டுப்புறப் பாடல்கள் இம்மாவட்டத்தில் தமிழிலும், தெலுங்கிலும் கிடைத்துள்ளன.

திருப்பாற்கடலை கடையும் தேவர்களே
மந்தர மலையை மத்தாக கொண்டீரே
வாசுகியை கயிறாகக் கொண்டீரே
அமிர்தம் அகப்படாமல் அசுரர்கள்
அலைந்து திரிந்தாரே • ஓம்

நாராயணா எங்னே உம் மகிமை
திருமலா திரபதி எங்கட்ட ரமணா
பால சமுத்ரமுலோ மேமு தெச்சினா
அமிர்தான்னி பஞ்ச்சி பெட்டவய்யா
கூர்ம அவதாரம் நீவே
மோகினி அவதாரம் நீவே
ராகு கேதுவுலகு அமிர்தமிச்சினாடு
மந்தாரக் கொண்டனு குத்திகா
வசுதேவினி தாடுகா - பட்டி
தேவதலு, ராட்சலு பால கடலிலோ

தமிழ்ப்பாடலில் திருப்பாற்கடலைப் பற்றியச் செய்தி, காணப்படுவது போன்று தெலுங்குப் பாடலிலும் காணப் படுகின்றது. தேவர்களும் அசுரர்களும் மந்தார மலையை மத்தாகவும், பாம்பைக் கயிறாகவும் கொண்டு திருப்பாற் கடலைக் கடைந்த நிகழ்ச்சி பற்றிய குறிப்பு இரண்டு பாடல்களிலும் காணப்படுகின்றது. கூர்ம அவதாரம் பற்றிய குறிப்பு தெலுங்குப்பாடலில் மட்டுமே உள்ளது.

**விபவம்** *(மனித உருவில் காட்சியளித்தல்)*

உலகில் அவதாரமெடுத்து அருள் அளித்தல் ஆற்று நீர் போன்றது. ஓடிக்கொண்டேயிருத்தல். துஸ்டர்களை வதித்து சாதுக்களைப் பரிபாலித்து பல வைபவம் நிறைந்த செயல் களைச் செய்ததால் விபவம் எனப் பெயர் படைத்தது. இறைவன் மனித உருவில் காட்சி அளிக்கும் போது மட்டும் பாடல்கள் தமிழிலும், தெலுங்கிலும் ஏராளமாகக் கிடைக் கின்றன.

நாராயண மூர்த்தியே நமோ நமோ
நமச்சிவாய பவனே நமோ நமோ
திருமந்திரத்தின் நாயகனே நமோ நமோ
திருமலை வாசகனே நமோ நமோ
வெண்ணெய் திருடி தின்பவனே நமோ நமோ
வெண்சங்கு ஏந்தி நிற்பவனே நமோ நமோ

இது போன்ற பொருளுடைய தெலுங்குப்பாடல் ஒன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளது.

ஓம் ஹரி ஓம் ஹரி நாராயணா
ஓங்கார நாயகுடா நாராயணா
பால கடலி நாயகுடா நாராயணா
பக்துல காப்பரி வாடா நாராயணா
திருமல திருப்பதி வாசா நாராயணா
திவ்ய பிரபந்தா மூர்த்தி நாராயணா
செங்க்கு சக்ரம் பட்டின நாராயணா
வெண்ணமுத்த வெங்கன்னா நாராயணா

''ஹரி ஓம், ஹரி ஓம் நாராயணா: ஓய்யார நாயகனே நாராயணா, பாற்கடல் நாயகனே நாராயணா; பக்தர்களைக் காத்து அருள்பவனே; திருமலையில் வாசம் செய்பவனே நாராயணா; திவ்ய பிரபந்தங்களுக்கெல்லாம் தலைவனே நாராயணா; வெண்சங்கை கையில் ஏந்தி நிற்பவனே நாராயணா; வெண்ணெய் திருடித் தின்பவனே நாராயணா'' என்பது மேற்கொண்ட தெலுங்குப் பாடலுக்குரிய பொருளாகும்.

**அர்ச்சை (சிலை உருவம்)**

கோயில்களில் கற்சிலைகளாக இருந்து அருள் பாலித்தல் அக்கோயில்களிலுள்ள குளத்து நீர் (நீர் நிலைகள்) போன்றது. மேலும் தேங்கி நிற்கும் நீர் நிலைகள் போன்றது ஆகும். அகில உலகத்திலும் வழிபாடு என்பதும் அர்ச்சாவதாரத்தில் தான் இருக்கின்றது. புண்ணிய தலங்கள் பலவற்றிலும் இறைவன் எழுந்தருளியிருக்கும் நிலை அர்ச்சவதாரமாகும். இத்தகைய நிலைகளில் பாடப்பெறும் பாடல்கள் தமிழிலும், தெலுங்கிலும் மிகுதியாக கிடைத்துள்ளன.

ஏழு மலை வாசா எம்மை
ஏற்க வேண்டும் ஸ்ரீனிவாசா
ஏழை மீது கருணை காட்டி
ஏழுமலை தாண்டி வந்து - உம்
சன்னதியில் அடி வைத்து - உம்
சரணங்கள் பல பாடிவிட்டு
சந்தோஷமா திரும்ப வேண்டும் ஐயா

இது போன்ற பொருளுடையதொரு தெலுங்குப் பாடலொன்றும் இம்மாவட்டத்தில் கிடைத்துள்ளன.

தயா கருணிம்ப்பு ஶ்ரீநிவாசா
கருணா மயுடா கருணிம்ப்பு
பேதவாரி பெதவுலு நீ நாமமுனு
பகலு ரெய்யி செபுதுன்ட்டா
பதுலு செப்பவய்யா நாராயணுடா
ஏடாதிக்கு ஒக்கசரி
ஏடு கொண்டலக்கு வச்சி
சல்லகா போவாலி ஐயா

''சீனிவாசனே கருணைவையும்; ஏழையின் உதடுகள் என்றென்றும் (இரவும்-பகலும்) உமது நாமத்தைச் சொல்லிக் கொண்டேயிருக்கின்றன. பதில் சொல்லுங்கள் ஐயா. வருடத்திற்கு ஒரு முறை ஏழுமலைக்கு வந்து உமது தரிசனத்தைக் கண்டு உள்ளம் குளிர எங்களது வீடுகளுக்குச் செல்லவேண்டும்'' என்பது மேற்கண்ட பாடலுக்குரிய பொருள்.

பெருமாள் மண்ணுலகில் இருக்கும் மக்களின் குறைகளையும், வேண்டுதல்களையும் கேட்டு, அவைகளைப்போக்கி காத்து வருகின்றான், இந்த உருவ வழிபாட்டால் தான் மக்களிடையே பக்தி செழிக்கும். எம்பெருமானுடைய உருவத்தை மனதில் நினைத்து, அவனைத் தியானித்து, அவனுடைய அருளைப் பெறுவது அர்ச்சாவதாரத்தில் தான், பக்தர்கள் விரும்பும் வகையில் இறைவன் காட்சித் தருகிறான். தமிழ் கூறும் நல்லுலகில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே திருமால் வழிபாடு சிறந்து திகழ்ந்து வந்திருக்கின்றது. தமிழர்கள் நிலத்தை ஐவகையாகப் பிரிப்பர் அவை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாம். காடு, காடு சார்ந்த இடங்களை முல்லை நிலம் என்கிறோம், முல்லை நிலத்திற்குரிய தெய்வம் திருமால் சங்க இலக்கியங்களில் திருமாலைப்பற்றிய பாடல்கள் பல காணப் படுகின்றன.

## வைணவத் தோற்றம்

உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்று முத்தொழில்களையும் இறைவன் அவ்வபோது செய்து வருகிறான் என்ற நம்பிக்கை இந்துக்களிடையே மிகவும் பழமையானது. கடவுளை ஒத்துக்கொள்ளும் வேதாந்திகள் இம் முத்தொழில்களையும் இறைவனே செய்து வருகின்றான் என்று ஒத்துக்கொள்கின்றனர். கடவுள் இல்லை என்று

ஒப்புக்கொள்பவர்களும் வாதாடுபவர்களும் உலகத் தோற்றம், பாதுகாப்பு, அழிவு இவற்றிற்குக் காரணமாக ஒரு பேராற்றல் நம் அறிவுக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது என்று குறிப்பிட்டுக் கடவுள் என்ற சொல் ஒன்றைத் தவிர மற்ற வற்றை ஒத்துக்கொள்கின்றனர். இன்றுள்ள இயற்கையைக் கூர்ந்து நோக்கி அதன் பரிணாம நிலையை நுணித்து உணரும் விஞ்ஞானிகளும் அதன் அழிவைப் பற்றியும் ஓரளவு கணித்து உரைக்கின்றனர். எங்ஙனமாயினும் இவ்வியற்கையில் காணப் படும் படைப்பு, காத்தல், அழிப்பு என்ற முத்தொழில் நிகழ்ச்சி யும் எல்லோருக்கும் உடன்பாடே, மனிதனுடைய அறவழிப் பண்பாட்டில் மாற்றங்களும், திருத்தங்களும் காலத்தை ஒட்டி ஏற்படுவதைக் காண்கிறோம். முத்தொழில் செய்யும் மும்மூர்த்திகளுள் காத்தல் தொழிலைச் செய்யும் விஷ்ணுவுக்கு முதலிடம் கொடுத்துத் தோன்றிய மதம் விஷ்ணுவையே பரம்பொருளாகக் கொள்ளும் வைணவ மதமாகும். இக் கொள்கைக்கு அடிப்படை வேதமே எனினும், வைணவக் கருத்துக்களில் ஏற்பட்ட வளர்ச்சி, அவ்வளர்ச்சிகளைத் தெரிவிக்கும் நூல்களின் காலம், அக்கால வரலாற்றில் காணப் படும் உண்மைகள் ஆகியவற்றை நோக்க, வைணவம் வேத காலத்திற்குப் பிற்பட்டு ஒரு காலத்தில் உண்டாகிப் படிப் படியாகப் பல துறைகளிலும் வளர்ச்சியடைந்து ஓர் ஆசார்யனை ஒப்புக்கொண்டு சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வைத்துள்ளது என்பது புலனாகின்றது வைணவம் பற்றிய அடிப்படையான வேதக் கருத்துக்களுக்கும், வைணவ ஆசாரியர்கள் சொல்லும் கருத்துக்கும் இடையே மாறுதல் களை நோக்க, வேத காலத்திற்குப் பிறகே வேதம் இட்ட வித்தில் வளர்ந்த வைணவ மதமாகிய மரம் பிற்காலத்தில் தோன்றிய சிந்தனையாளர்களால் செழிப்பான பெருமரமாக வளர்க்கப்பட்டது. கி பி. ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய நாதமுனிகள் காலத்தில் தழைத்துக் குலுங்கி, பின்னர் வேதாந்த தேசிகரோடு ஒரு கிளையாகவும், மணவாள மாமுனிகளோடு ஒரு கிளையாகவும் கவடுபட்டு, வேதங்கள் ஸ்ருதிகள் இதிகாச புராணங்கள் ஆழ்வார்கள் அருளிய பாசுரங்கள் இவற்றாலும் ஆகமங்களாலும் உரம் பெற்று காலட்சேப கூட்டங்களில் பூத்து, இன்று விண்ணகரங்களில் பழுத்துப் பயன் தருவதைக் காண்கிறோம். இன்று ஆலயம் வைணவம் இரண்டும் பிரிக்கமுடியாத தொடர்புடையனவா யிருப்பினும், ஆகமத்தையே பெரும்பாலும் அடிப்படையாகக் கொண்ட ஆலய வழிபாடே வைணவம் என்று கூறுதல்

பொருந்தும். வைணவமானது ஆகமமே அன்றி வேதம் புராணம் முதலிய மற்ற பிராமணங்களையும் கொண்டுள்ளது.

### பொதுவான கருத்துக்கள்

வைணவம் என்ற சொல் வேதத்திலேயே காணப்படும் சொல்(யஜுர்வேதம்-முதல் காண்டம்-இரண்டாவது பிரஸ்னம்-இரண்டாவது அநுவாதம்) என்றாலும் அது அஸ்ருவோளுரு கருத்தில் பயன்படுத்தப்பட்டச் சொல்லாகும் விஷ்ணுவை மட்டும் வழிபடுவது என்பதும் விஷ்ணுவே பரதெய்வம் என்பதும் பின்னர் வந்த கொள்கைளாகும். விஷ்ணுவையே பர தெய்வமாகக் கொள்ளும் மதமே வைணவம் என்ற பெயரில் வழங்குகிறது. வைணவம் என்ற பிரிவில் இன்று பாரத தேசத்தில் 74 பிரிவிகள் உள்ளன என்று சுவாமி தத்வாநந்தா என்பவர் கணக்கிட்டுக் கூறியுள்ளார். வங்காள வைணவம், அஸ்ஸாம் வைணவம், குஜராத்தி வைணவம், மகராஸ்ட்ர வைணவம் என பிரதேசங்களை ஒட்டி வைணவம் சில சில வேறுபாடுகளோடு நிலவி வருகிறது.

### தமிழகத்தில் வைணவத்தின் நிலை

''மாசு யோயே! மாசுயோயே!
மறு பிறப்பு அறுக்கும் மாசில் சேவடி
மணிதிகழ் உருவின் மாசுயோயோ எனவும்,
''நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லது
ஏறுதல் உண்டோ வீறு பெறு துறக்கம்''

எனவும் திருமாலுடைய பரத்துவத்தைச் சங்ககாலம் தொட்டே முழங்கிவரும் தமிழ்நாட்டு வைணவம், ஆழ்வாராதிகளுடைய பாசுரங்களால் வீறுபெற்று, நாத முனிகள் முதல் வேதாந்த தேசிகர், லோகாச்சாரியர் வரையில் உள்ள சிந்தனையாளர்களால் கடவுள், ஆன்மா, வீடு, பேறு இவற்றைப்பற்றிய விரிவான கருத்துக்களோடு மிக உயரிய நிலையில் வளர்ந்து நிற்கிறது.

### வடகலை - தென்கலை

தமிழ் நாட்டு வைணவம் இன்று வடகலை, தென்கலை என்ற இரண்டுப் பகுதிகளாக இயங்கி வருகிறது நெத்தியில் திருமண் இட்டுக்கொள்ளுவதில் காணப்படும் சிறிது வேற்றுமையே இவர்களை வெளிப்படையாகப் பிரித்து அறிய

உதவுகிறது. இரு பிரிவினரும் நாதமுனிகள், ஆளவந்தார் இராமானுஜர் போன்றவர்களையே தங்கள் மூல புருஷர்களாக ஏற்றுக்கொள்கின்றனர். இருசாராரும் வேதங்களையும் ஆழ்வார்கள் அருளிச் செயல்களையும் ஒப்புக்கொண்டு, வேத மரபினையும் வைணவ மரபினையும் பின்பற்றிய போதிலும், அடிப்படைக் கொள்கையளவிலேயே சிறிது வேறுபடுகின்றனர். தமிழ் மொழியில் உள்ள ஆழ்வார் அருளிச் செயல்களில் உள்ள வேதாந்தக் கருத்தையும், வடமொழி வேதாந்தக் கருத்தையும் சமமாக ஒப்புக் கொள்ளும் உபய வேதாந்திகள் இரு சாராரிலும் உள்ளனர்.

### தென்னாட்டு வைணவம்

தென்னாட்டு வைணவம் ஆலயத்தோடு இன்று பிரிக்க முடியாத தொடர்பு கொண்டு விளக்குவதைக் காண்கிறோம் தென்னாட்டு வைணவம் காலட்சேப கூடங்களில் வளர்ந்து எப்பொழுது ஆலயங்களோடு இரண்டறக் கலந்த தொடர்பு கொண்டது என்பதனை வரலாற்று உணர்ச்சியோடு நோக்க வேண்டியவர்களாக உள்ளோம்.

### வடநாட்டு வைணவம்

வடநாட்டு வைணவ முறையில் காணப்படும் நாமஸங்கீர்த்தனம், பஜனை முறை ஆகியவை பக்தியை அடைய உபாயமாகுமேயன்றி இவைகளே பக்தியல்ல வென்றும் இவற்றால் வீடுபேறு கிட்டாது என்றும், உபநிடதத்தில் கூறியபடி தனித்திருந்து உபாசனம் பண்ணுவதே பக்தி எனவும், அதுவே வீடுபேற்றுக்கு வழி எனவும் இராமனுஜர் கருதுவதால், தென்னாட்டு வைணவத்தில் பஜனை முறை சிறந்த இடம் பெறவில்லை,

### வேதமே மூலாதாரம்

தமிழ் நாட்டு வைணவம் தனியாக வேண்டிய அடிப்படைக் கருத்துக்களை வேதத்திலிருந்து பொறுக்கி எடுத்துக் கொண்டுள்ளது. ஆசாரியர்கள் தங்கள் வைணவக் கொள்கைகளை விளக்க வேத வாக்கியங்களைச் சான்று காட்டுவதால் வைணவத்திற்கு வேதம் மூலாதாரமாக விளங்குகிறது. விக்கிரக வழிபாடு 'ஆலய வழிபாடு' என்பனவற்றிற்கு வைணவம் ஆகமத்தைப் பின்பற்றுகிறது. சிறிய அளவில் விக்கிரக ஆராதனையைத் தொடங்கிய ஆகமங்கள், பிறகு தனியான வேதாந்தக்

கொள்கைகள் மதக்கொள்கைகள் இவற்றோடு வளர்ந்து முதலில் வைதிக மதத்தோடு உறவு கொண்டாடி அக்கினியில் ஹோமம் செய்வது முதலியவற்றை உட்கொண்டு மிகப்பெரிய அளவில் ஆலய பூசைகளை வளர்த்துப் பலவிதத் திருவிழாக் களுக்கும் பூசைகளுக்கும் வழி வகுத்து விட்டன,

### விக்கிரக வழிபாடு

ஈஜிப்ட் முதலிய நாடுகளில் ஒரு காலத்தில் விரிவாக இருந்த உருவ வழிபாடு அறிவு வளர வளரக் குறைந்து அழிந்து போகவும், அறிவு வளர வளர விக்கிரக வழிபாட்டு முறை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வளர்ந்துக் கொண்டே இருக் கிறது. விஞ்ஞானிகள், வேதாந்திகள், பக்தர்கள் ஆகிய எல்லாத்திறத்தாரும் விக்கிரக வழிபாட்டால் பயன் பெற்று வருதலைக் காண்கிறோம். நிலையான அடிப்படையில் அமைந்துள்ள இந்நாட்டு விக்கிரக வழிபாட்டு முறை என்றும் நின்று நிலவக் கூடியதாகும். ஆகவே இத்தகைய நிலை வேறுடைய விக்கிரக வழிபாட்டின் அடிப்படைக் கருத்துக் கவனிப்பது அவசியமாகிறது. இன்றைய உலகில் தன்னைத் தனிமைப் படுத்திக் கொண்டு ஆழ்ந்திருக்கும் தெய்வ சிந்தனையோடு ஒன்றிருத்தல் எளிதன்று சிந்தனையை செயலளவில் காட்ட, உலகம் முழுவதும் இறைவன் நிறைந் துள்ளான் என்ற அடிப்படையில் செய்யப்படும் எந்தச் செயலும் கர்மயோகமாகித் தெய்வீக உணர்ச்சியை உறுதிப் பட விக்கிரக வழிபாடும், ஆலயவழிபாடும் பெருந்துணை யாகிறது.

### உருவ வழிபாட்டில் மனநிறைவு

உருவமில்லாத இறைவன், மக்களின் தெய்வீக உணர்ச் சியை வளர்க்கவே அவதாரம் செய்தார். அந்த அவதார காலத்திற்குப் பிற்பட்டுத் தோன்றியவர்களும் தெய்வீக உணர்வோடு வாழ்வதற்கே இறைவன் ஆலயங்களில், விக்கிரகம் வடிவில் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறார். அவனே நமக்கு எல்லாவித உறவும் ஆவான் என்ற எண்ணத்தோடு இறைவனை வணங்கும் மக்கள் மட்டற்ற மகிழ்ச்சியோடு தத்தம் உடைமைகளை இறைவனுக்குக் காணிக்கையாக வழங்கி மனநிறைவு அடைகிறார்கள்.

**உருவ வழிபாடு முரண்பட்டதன்று**

இறைவனுக்கு உருவம், ஊர், பேர் இவையில்லை என்ற கொள்கையை வேதாந்தம் விளக்கவும், உண்டு என்ற கொள்கையை விளக்கும் மதங்களுக்கும் வேதாந்தம் அடிப்படையாக உதவுகிறது. உருவமே இல்லாத கடவுள் உலக உருவிலும், உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும், முப்பத்து முக்கோடி தேவர் உருவிலும் அடியார் வேண்டும் உருவிலும் வரும் செய்தி இதிகாச புராணங்கள் வாயிலாக வெளிப்பட்டுப் பொதுமக்களும் கடவுள் சிந்தனையில் ஈடுபடும் நிலை ஏற்பட்டுள்ளது. பகுத்தறிவு அறிவாளிகளுடைய கலையறிவிற்கு ஏற்றவாறு மாறுபடுவதால் பொதுமக்களின் பகுத்தறிவிற்கு ஏற்ற வகையில் மனித உளப்பாங்கை உட்கொண்டு அவன் குறைகள் தீர்ந்து மன நிம்மதி அடையும் வகையில் மத நூல்கள் இறைவனுக்கு வடிவம், குணம், செயல்கள் ஆகியவற்றைக் கொடுத்துப் பொதுமக்களைத் தெய்வச் சிந்தனையில் ஆழ்த்துகின்றன.

**மனத்தின் மாண்பு**

மற்ற உயிரினங்களுக்கு இல்லாத வகையில் இறைவன் மனிதனுக்கு அருளியுள்ள ஓர் அகத்துறுப்பு மனம் என்பதாகும். அஃது இயற்கையில் மிகவும் தூய்மையானது. மனம் என்பது உடலில் எங்கு இருக்கிறது என்பது உடற்கூறு வல்லவன் ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது. நல்ல சிந்தனையால் மனம் தூய்மை அடைகிறது. கெட்ட சிந்தனையால் மனம் மாசு படிகிறது. மனிதனுடைய தனி வாழ்விலும், சமுதாய வாழ்விலும் அவனை உயர்த்துவதும், தாழ்த்துவதும் மனம் தான் மனத்தில் தெய்வபாவம் தலையெடுக்கும்போது விக்கிரகங்களின் கல்லையும், மண்ணையும் நோக்காது மனம் தெய்வீக உணர்வைப் பெறுகிறது.

**பிரும்மானந்தப்பேறு**

உலக வாழ்க்கையில் சிந்தனை அளவில் ஏற்படும் நிம்மதி, பிரும்மானந்தம் என்று வேதத்தில் கூறப்படுகிறது. இந்த பிரும்மானந்தம் ஆகிய தெய்வீக உணர்ச்சியை அடைய வேண்டும் என்று ஆசைப்படுவது பொது மக்களுக்கு இயல்பே. உலகப்பற்றை நீக்கி பிரும்மானந்தத்தில் திளைக்கும் ஞானிகள் பத்தாயிரத்தில் ஒருவரே ஆதலின் உலகச் சூழ்நிலையில் இருந்து கொண்டே இறை உணர்ச்சியில் திளைத்துப் பிரும்

மானந்தத்தை அடைய விக்கிரகங்களிடையே தெய்வீக வடிவைக் கண்டு அவற்றைப் பூவிட்டு பூசை செய்து வழிபட்டு மனதில் ஆனந்தம் அடைகிறான்.

**தியானமும் இறைவனும்**

தியான நிலையில் இறைவனை வழிபடுவோர்களுக்கும் தியானம் உறுதிப்பட உருவ வழிபாடுதான் உதவுகிறது. ஆழ்வார்கள் விக்கிரகங்களைக் கண்ணால் கண்டு, மனத்தால் தியானித்து, தியான நிலையில் இறைவன் தோன்றுவதையே கூட்டமாகக் கொண்டு மகிழ்ந்தும், தியான நிலையில் இறைவன் தோன்றாததையே துன்பமாகக் கொண்டு வருந்தியும் உளம் உருகிப் பாசுரங்கள் வரைந்துள்ளனர். வெளியிலுள்ள விக்கிரகங்கள் அளவிலேயே அவர்கள் சிந்தனை சென்றிருப்பின் விக்கிரக வடிவில் எப்பொழுதும் இறைவனைக் காணும் வாய்ப்பு இருப்பதால் தாங்கள் பிரிதல் துன்பத்தை அனுபவிக்க வேண்டிய நிலை இல்லாது போயிருக்கும்.

**உருவ வழிபாட்டில் தெய்வ பாவனை**

பொது மக்கள் விக்கிரகங்களைக் கல் என்றோ, மண் என்றோ கருதாமல் அவற்றினிடத்து தெய்வச் சிந்தனையை ஆழமாகப் பதித்து அவற்றை வழிபாடு செய்துப் பயனடை கின்றனர். நாம் நம் குழந்தைகளை எலும்பு, தசை, தோல், இரத்தம் இவற்றாலாகிய உயிர்ப்பொருள் என்று கருதாமல் நம் உயிர் போலக்கருதி அவற்றினிடத்து அன்பைச் செலுத்தி இன்புறும் செயலே சற்று மேம்பட்ட நிலையில் நம்மால் தெய்வத்தினிடம் கொள்ளப்படுகிறது. விக்கிரகங்களிடத்தில் தெய்வபாவனை வேரூன்றி விட்டதால் பல்லாயிரக்கணக்கான கோயில்கள் நிலைத்து நிற்கின்றன. திருப்பதி திருமலையில் ஆலய வழிபாடும், விக்கிரக வழிபாடும் மனிதன் உள்ளத்தில் தெய்வச் சிந்தனையை ஊக்குவிப்பதை நன்கு உணரலாம். உலக நடையில் பல திறங்களில் உழலும் மனித உள்ளங்களுக் குச் சிறிது நேரமாவது தெய்வ சிந்தனை கிடைப்பதற்கு இன்று ஆலய வழிபாடு, விக்கிரக வழிபாடு தவிர எளிய மார்க் கம் வேறு ஒன்றும் இல்லை மனித இனத்தில் குறைபாடு இல்லாதவரே இல்லை. மனிதன் தன் மனத்தில் உள்ள குறை களை முழுமையாக வாய்விட்டு வேறொரு மனிதனிடம் கூற இயலாது, அவன் தன் குறைகள் முழுவதையும் விக்கிரக வடிவில் காட்சி வழங்கும் இறைவனிடமே கூறி ஆறுதல் பெறுகிறான். உலகில் நமக்கு எல்லாம் அருள் செய்யத்

கொண்டுள்ள அர்ச்சாவதாரமான விக்கிரக நிலையில் இருந்து தன்னை வழிபட்டார் தமக்கு தவறாது அருள் பாலிப்பான் என்ற உறுதிப்பெற்று விக்கிரக வழிபாட்டில் ஈடுபடுகிறான்.

### அழகில் தெய்வ உணர்ச்சி

அழகான பொருட்களைக் கண்டால் மற்ற செயல்களை மறந்து அப்பொருட்களின் அழகில் ஈடுபட்டு ஆனந்தப்படுவது மனித இயற்கை. மனிதனுடைய அழகுணர்ச்சியை அடிப் படையாகக் கொண்டே ஆகமங்கள் அழகான விக்கிரகங்களை அமைத்து அவற்றிற்கு அழகாக அலங்காரம் செய்து அழகுக்கு அழகு செய்வாரைப் போல ஆடம்பரமாகத் திருவிழாக் கொண்டாடி, மனிதன் அழகு உணர்ச்சியால் தெய்வ உணர்ச்சியை உறுதிப்படுத்திக்கொள்ள வழி வகுக்கின்றன. கிருஷ்ணாவதாரத்தில் கண்ணனுடைய அழகான உருவம் அழகான பேச்சு, அழகான விளையாட்டு என்பன அனை வரையும் அவனிடத்துக் கவர்ந்த செயலைச் சுகப்பிரும்மம் வருணித்துப் பூரித்துப் பேசுகிறார்.

### விக்கிரகம் பற்றி ஆகமம் கூறுவது

இறைவனைப் பற்றிப் பெரியோர் வாயிலாகவும் கதை கள் வாயிலாகவும் கேட்டுத் தனக்கு உண்டாகின்ற அன்பைப் பூர்த்தி செய்துகொள்ள மனிதனுக்கு விக்கிரக வழிபாடு அமைந்துள்ள சிறப்பை ஆகமம் குறிப்பிடுகிறது. விக்கிரக உருவில் உள்ள அர்ச்சாவதாரம் இருட்டறையில் ஏற்றி வைக் கப்பட்ட விளக்கு என ஆசாரியர்கள் குறிப்பிடுகிறார்கள். மனிதன் இருக்கும் இடத்திற்கு வந்து அவனுக்கு எளிமையில் உதவவே இறைவன் விக்கிரக உருவம் கொண்டுள்ளான் என்ப தையும் தெரிவிக்கின்றது. பிம்ப வழிபாட்டைப் பற்றி பெரியோர்கள் 'மதம் பிடித்த யானையிடம் எச்சரிக்கையாகப் பழகுவது போலப் பழகி, இளவரசனைப் போல மரியாதை காட்டி வீட்டிற்கு வரும் விருந்தாளியைப் போல உபசரித்துப் பழகுக' என்று குறிப்பிடுகிறார்கள்.

### அர்ச்சாவதாரமே இறைவனது மந்திர வடிவம்

அர்ச்சாவதாரத்தில் நாம் விரும்பினால் இறைவன் தானாகவே வந்து விக்கிரகத்தில் இறங்கி விடுகிறான் என்று சாத்திரம் பொதுவாகக் கூறுகிறது. உற்சவ காலங்களில் தெய்வ சக்தி மூல மூர்த்தியிலிருந்து உற்சவ மூர்த்திக்கு ஆவாகனம் செய்யப்பட்டு, உற்சவம் முடிந்ததும் மீண்டும் மூல மூர்த்திக்கே திருப்பிச் செலுத்தப்படுகிறது. அவ்விதமே சம்புரோக்ஷண

காலத்தில் அக்கினியிலும் பகவானை ஆவாகனம் செய்து பூசை செய்கிறார்கள். மூலமூர்த்திக்குச் செய்யும் பூசனை வழியே அக்கினியில் பூசனை செய்யும் போதும் பின் பற்றப்படுகிறது. இங்கு அவதாரங்களாகிய இராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் போன்றவை பகவானுடைய மந்திர வடிவம் ஆகிறது.

## மூவகைப் பூசனைகள்

ஆலயப்பூசனைகள் நித்தியம் நைமித்தியம் காமியம் என்ற மூன்று கூறுகளாகப் பகுக்கப்பட்டுள்ளன.

பிரம்மோத்ஸவம் என்று சொல்லப்படும் ஆட்டை பெரு விழா தொடக்கத்தில் பிரம்மனால் தோற்றுவிக்கப்பட்டது என்பது மரபு. நித்ய வழிபாடு முதல் ஆட்டைப் பெருவிழா ஈறாக, இடையே உள்ள வசந்தோற்சவம் முதலிய உற்சவங் கள் யாவும் நித்தியம் என்ற தலைப்பில் அடங்கும். காமியம் ஒன்றே தனிப்பட்ட மனிதன் நலம் கருதிச் செய்யப்படும் வழிபாடாகும். நித்திய பூசை எக்காரணம் கொண்டு நிறுத் தப்படக்கூடாது. நித்தியப் பூசை நேரம் அல்லாத நேரத்தி லேயே காமியம் செய்யப்படும்.

## அர்ச்சனை

ஆலயங்களில் செய்யப்படும் அர்ச்சனை வழிபாட்டின் ஒரு கூறுபாடு என்றே ஆகமம் கூறுகிறது. திருப்பதி முதலிய தலங்களில் தனிப்பட்ட மனிதன் விரும்பினாலும் பூசை நேரங்கள் தவிர ஏனைய நேரங்களில் அர்ச்சனை செய்வ தற்கு வாய்ப்பு அளிக்கப்படுவதில்லை. அவரவர் தத்தம் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வதற்கு அமைந்த வழி பாடே பொதுவாக அர்ச்சனை எனப்படும். அர்ச்சனை என்றால் 'வழிபாடு' என்று பொருள்படும். ஆராதனையின் அங்கமாக வருவது மந்திர புஷ்பம் அர்ச்சனை என்பது பொது மக்களுக்காக கையாளப்படும் தனிவழி.

## பல கோயில்கள் எதற்கு

ஒரு கோயில் போதாதா? பல கோயில்கள் எதற்கு என்ற வாதமும் உண்டு. மனிதனுடைய மனப்போக்குப் பல படி யாக இருப்பதால் பல கோயில்களில் இறைவன் பல வடிவங் களில் இருந்து அவனவன் விரும்பும் வடிவில் ஆட்கொள் கிறான் என்பதைக் காட்டவே பல கோயில்கள் தோன்றி யுள்ளன. பெருகியுள்ள மக்கள் கூட்டம் நெடுந்தொலைவு

செல்ல வேண்டாமல் அண்மையிலேயே அனுபவிக்கும் வகையில் அந்த தலங்களில் இருந்து அருள் பாலிக்கின்றன.

### சங்காலத்துக் கோயில்கள்

சங்க காலத்தை ஒட்டிச் சற்றுப் பிற்பட்ட காலத்தில் சோழ நாட்டை ஆண்ட செங்கணான் 'எண்தோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகம் ஆண்டான்' எனவும், அவன் திருநறையூர் மணிமாடத்தைச் சேர்ந்து திருமாலை வணங்கினான் எனவும் திருமங்கை மன்னன் பாசுரங்கள் குறிப்பிடுகின்றன. சிலப்பதிகாரக் காலத்தை அடுத்து வந்த ஆழ்வார்கள் 'வாய் கொண்டு மானிடம் பாட வந்த கவியேன் அல்லேன், ஆய்கொண்ட சீர்த்தி அழிப்பிரான் எனக்கே உளன்,' என்ற கோட்பாட்டோடு இறைவனுடைய திருக்கோயில்கள் பலவற்றையும் பாடியுள்ளனர்.

### திருமால் விக்கிரகம்

பழங்காலத்தில் திருமாலுடைய விக்கிரகங்களில் பள்ளி கொண்ட விக்கிரகத்தில் உந்தியில் தாமரை காணப்படுவது இல்லை, நின்ற திருக்கோல விக்கிரகத்திற்கு முன்பே கிடந்த திருக்கோல விக்கிரக வழிபாடு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று திரு. சௌந்தரராசன் கூறுகிறார். மிகப்பெரிய அனந்தசாயி விக்கிரகம் திருமயத்திலும் நாமக்கல்லிலும் காணப்படுகின்றன எட்டாம் நூற்றாண்டு வரை திருமாலின் நின்ற திருக்கோலத்தில் ஆண் உருவம் ஒன்று தான் இருந்து வந்திருக்கிறது. ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முன்பிருந்த அனந்தசாயி விக்கிரகத்தோடு பூதேவி மட்டுமே இருந்திருக்கின்றாள். அதற்குப் பிறகு தான் பரிவாரங்களுக்குத் தனி ஆலயம் கட்டும் வழக்கம் ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

### திருமலையும் கல்வெட்டுகளும்

சோழர் காலத்திற்கு முற்பட்டுத் தமிழகத்தை ஆண்ட மகேந்திரவர்மன் - கட்கமல்லன் - நந்திவர்மன் ஆகிய பல்லவ மன்னர்களுடைய கல்வெட்டுக்களும், சோழ மன்னர் பராந்தகன் இராசராசன் இராசேந்திரன் குலோத்துங்கன் விக்கிரம சோழன் இராசேந்திரன் ஆகியவர் கல்வெட்டுக்களும் பாண்டியருள் சடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்துக் கல்வெட்டுக்களும், தெலுங்குப் பல்லவர்களில் விஜயகண்டபாலன் இராசகண்டபாலன் யாதவராயர்களில் திருக்காளத்திதேவர் வீரநரசிங்கராயர் விஜய நகர மன்னர்களில் புக்கராயர்

ஹரிஹரராயர் தேவராயர் மல்லிகார்ச்சுனன் கிருஷ்ண தேவராயன் வெங்கடபதிராயர் சதாசிவராயர் அச்சுதராயர் ஆகியோர் கல்வெட்டுக்களும் திருமலைக் கோயில் அச்சுத ராயர் ஆகியோர் கல்வெட்டுக்களும் திருமலைக் கோயிலில் காணப்படுகின்றன.

**விக்கிரக வழிபாட்டின் பிறப்பும் வரலாறும்**

பாஞ்சராத்ர கருத்துக்களுக்கு ''சாத்வதவிதி'' என்ற பெயர் இருப்பதால் விக்கிரக 'வழிபாடு' அவர்களிடமிருந்து தான் ஆரம்பமாகிறது. என்று எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்படுகிறது. அவர்கள் எந்த சூழ் நிலையில் எந்த நோக்கத்தோடு எவ்விதம் விக்கிரக வழிபாட்டை ஆரம்பித் தார்கள் என்று ஆராய்வது மிகவும் அவசியமாகிறது; பாஞ்சராத்ர சம்ஹிதைகள், நாராணீயம், இதிகாசங்கள், புராணங்கள் கல்வெட்டுக்கள் இவைகளை ஆழ்ந்து கவனித் தால் சில உண்மைகள் வெளியாகின்றன. வரலாற்று ஆசிரி யர்கள் இவைகளை அடிப்படையாகக் கொண்டு தான் வைணவத்தினுடைய வரலாற்றை உருவாக்குகிறார்கள்; ஆலய வழிபாட்டிற்கு மூலமாக அமைந்துள்ள வியூகங்கள், வாசுதேவ, சங்கர்ஷண, ப்ரத்யும்ன, அநிருத்தன் என்று குறிப்பிடப்படுகிறார்கள், இவர்களில் வாசுதேவன் என்பவர் கண்ணன் தான், சங்கர்ஷணன் என்பான் அவருடைய அண்ணனான பலராமன், ப்ரத்யும்னன் பகவானின் பிள்ளை, அநிருத்தன் பகவானுடைய பேரன். இந்த நான்கு பேர் களும் கிருஷ்ணனுடைய குடும்பத்தோடு சம்பந்தப்பட்டிருப் பதால் கிருஷ்ணவதார காலத்திற்கு பிறகுதான் இவர்களை வழிபடும் கொள்கை உருவாகியுள்ளது என்று நினைக்க வேண்டி வருகிறது. கிருஷ்ணனுடைய இனம் சாத்வத இனம் என்று கூறப்படுகிறது, ஸ்ரீமத் பாகவிதத்தில் இந்த கருத்து தெளிவாகச் சொல்லப்படுகிறது. சாத்விதர்கள் வேதகால மனித இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று ஐத்ரேய பிராமணத் தின் மூலம் அறிகிறோம்.

வாசுதேவன் முதலானவர்களின் உருவம் அவர்களுக்குத் தெரிந்திருந்ததினால் அவர்களுக்கு பிம்பம் அமைப்பது எளிதாகிவிட்டது. அந்த உருவம் உள்ள பிம்பங்களை வைத்து பூக்களால் அர்ச்சித்து அவர்கள் தங்களுடைய அன்பைக் காண்பித்து வந்தார்கள். உயிரோடிருந்தால் எப்படி பணிவுடன் நடந்து கொள்வார்களோ அப்படியே விக்கிரகங்

களை உபசரித்து வந்துள்ளார்கள் தன்னுடைய அன்பையும், மரியாதையும் பூசை செய்வது மூலம் தெரிவிக்கும் இந்த எளி தான கர்மாவைதான் ஆழ்வார்களும் தங்களுடைய பாடல் களில் வழிபாடாகக் குறிப்பிடுகிறார்கள். எளிதான இந்த முறை மக்களின் கவனத்தை கவர்ந்து வளர ஆரம்பித்தவுடன் அறிவாளிகள் உட்புகுந்து இதன் வேதாந்தக் கொள்கையை வகுக்க ஆரம்பிக்கிறார்கள். அக்கினியை வளர்த்து ஓமம் பண்ணும் பழக்கமுள்ள வேத மதத்தினர் இதை எடுத்துக் கொண்டார்கள். வேதத்தில் காணப்படும் பண்பாட்டில் விக்கிரக வழிபாடு கலக்கவேயில்லை. இருக்கு வேதத்தில் மரப்பதுமைகள் எடுத்துக்காட்டாக சொல்லப்பட்டுள்ளன. தெய்வங்களுக்கு விக்கிரகங்கள் சொல்லப்படவில்லை.

இயற்கையில் கடவுள் தத்துவத்தை வைத்து அனுபவித் தாலும் கடவுளை கருணைக் கடலாகவும் அறிவுள்ள சக்தி யாகவும் கொண்டாடி பேசுகிறார்கள். உருவமுள்ளக் கடவுளை மனித உறவில் வழிபடச் செய்ய கர்மகாண்டம் வழிவகுக்கிறது. ஆனால் ஓரிடத்திலாவது பிம்பத்தைப் பற்றி மறைமுகமகக் கூட கூறவில்லை.

குறிப்பிட்ட தர்மத்தை விளக்க வந்துள்ள இதிகாச புராணங்களும் ஆலய வழிபாடு, விக்கிரக வழிபாடு இவைகளை தங்கள் கொள்கையில் சேர்த்துக் கொள்ளவில்லை. சில இடங்களில் புராணங்களில் ஆலய வழிபாடு விக்கிரக வழிபாடு இவை குறிப்பிடப்படுவது அந்தந்த காலத்தின் நிலைமையைத் தான் விளக்கும். புராணங்களின் அடிப்படைக் கொள்கையோடு விக்கிரக வழிபாட்டிற்கு நேர் உறவு கிடையாது.

எளிய நடையில் விருஷ்ணிகளிடம் இருந்து வந்து விக்கிரக வழிபாடு ஆடம்பரமான தெய்வக் கொள்கைகளையோ, வேதாந்தக் கொள்கைகளையோ பின்பற்றி ஏற்பட்டதன்று. சாத்வதர்களின் விக்கிரக வழிபாடு காஷ்மீரத்தில் வேதாந்தக் கருத்துக்களோடு இணைகிறது. வேதாந்த ரீதியில் உபாசனை யாக மாறி தியானத்திற்கு மட்டும் உதவுகிறது. உபனிஷத்துக் களின் கருத்துக்களோடு சேர்ந்து மலர்ந்து விடுகிறது. ஆனால் பொது மக்களிடை பரவி வந்த விக்கிரக வழிபாடு வெகு நாள் வரை வடநாட்டில் விழித்திருந்து காலக்கிரமத்தில் மறைந்துவிட்டது.

காலக்கிரமத்தில் நான்கு வியூகங்களில் பிரத்யும்னன் அநிருத்தே இவர்களுடைய வழிபாடு சிறிது சிறிதாக மறைந்து வாசுதேவ சங்கர்ஷணன் இவர்கள் வழிபாட்டில் போட்டி ஏற்பட்டு பாமர மக்கள் சங்கர்ஷண வழிபாட்டை கைக் கொண்டு விட்டார்கள். வாசுதேவ வழிபாடு, நாராயண வழிபாட்டோடு ஒன்றாக ஆகி பலவித தெய்வக் கொள்கை களுக்கு இருப்பிடமாக ஆகிவிட்டது, இன்று தமிழ் நாட்டில் பலராமனுக்கு ஆலயமில்லாமல் போனதற்குக் காரணம் மதவரலாற்றில் ஏற்பட்டுள்ள மறுதல்களே தான், பல உருவில் ஆலயங்களில் கண்ணன் வழிபடப்படுகிறான். ஆனால் பலராம னுக்குத் தனியாக ஆலயமில்லாமல் போனதற்கு புராணங்கள் பலராமனைத் தாழ்த்திக் கூறியது தான் காரணம். பலராம னுக்குக் கலப்பை தான் ஆயுதம் என்று கூறுவதால் இவர் உழவர்களின் தெய்வமாக ஆகிவிட்டார், பனைமரக் கொடி அவனைச் சார்ந்தது. விசிறியும் அவனுடைய அடையாளம்.

**உபநிடதங்களும் - ஆகமங்களும்**

வியூகம் அவதாரம் என்ற தனிக்கொள்கையோடு இருந்து வந்த ஆகமங்கள் பிற்காலத்தில் உபநிடதத்தின் வழியை பின் பற்றி பேசத் தொடங்குகின்றன, உபநிடதங்களுக்கு உரித்தான தாகக் காணப்படும் 'பிரம்மம்' என்ற சொல்லை தங்களுடைய தெய்வத்திற்கு வைத்துப் பேசுகின்றன. சாது மாத்மிய (நான்கு விதமான தெய்வத்தை வழிபடுவது) என்ற கருத்து மறைந்து போய் பிரம்மத்தை அறிவதாலேயே வீடு பெறலாம் என்று கூறுகின்றன. உபநிடத்தின் செல்வாக்கின் காரணமாக சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன் என்ற சிறப்பான பெயர்கள் ஜீவன் ஆங்காரம் மனஸ் தத்துவங்களாக வேதாந்த கொள்கை பின்பற்றி விளக்கப்படுகின்றன. உபநிடத்தின் கருத்துக்கள் ஆகமங்களில் உட்புகுந்தபிறகு அத்வைத, துவைத விசிஷ்ட்டாத்வைத கருத்து வேற்றுக்கும் இடம் ஏற்பட்டு விட்டது. ஆகமஞான பாதத்தில் அத்வைத கொள்கைதான் சொல்லப்படுகிறது. என்று அதை விளக்கி சமீப காலத்திய S.R. பட் என்பவர் ஒரு நூலை எழுதியுள்ளார். ஆகமங்களில் காணப்படும் உபநிடதக் கருத்துக்களை இங்கு விளக்குவோம். பிரம்மம் நிராமயம், அட்சரம், அவ்யயம், அனாமரூப சம் வேத்யம், உருவம் இல்லாத பின் உருவத்தை அடைந்தான், உலகத்தையே உருவமாகக் கொண்டது. மாயையினால் உருவ முள்ளதாகிறது.

வேறு வியூகங்கள்

கேசவன் முதலிய 12 வியூகங்களைப் போலவே வேறு 12 வியூகங்களைப் வியூகங்கள் ''வித்யேசுவரன்'' என்ற பெயரில் இருப்பனவாக விக்கேந்திய சம்ஹிதை தெரிவிக்கிறது. பாத்ம சம்ஹிதை இதைப் பின்பற்றுகிறது. வியூக வாசு தேவனிடமிருந்து மற்றொரு வாசுதேவனும் அவனிடமிருந்து புருஷோத்தமனும், ஜனார்த்தனனும், சங்கர்ஷணனிடமிருந்து மற்றோர் சங்கர்ஷணனும் அதோக்ஷஜன், உபேந்திரன் என்ற இருவரும் அநிருத்தனிடமிருந்து மற்றொரு அநிருத்தனும் அச்சுதன், கிருஷ்ணன் என்ற இருவரும் உண்டானார்கள்.

விபவாவதாரங்கள்

இவற்றிற்கு மேல் தான் விபவ அவதாரங்கள் என்ற கொள்கைப் பிறக்கிறது. இந்த அவதாரங்கள் 36 அல்லது 39 என்று கணக்கிட்டுள்ளனர். 1. பத்மனாபன் 2. துருவன் 3. அநந்தன் 4. சத்தியகாமன் 5. மதுசூதனன் 6. வித்யாதி தேவன் 7. கபிலன் 8. விசுவரூபன் 9. விகங்கமன் 10. குரோடாத்மன் 11. வடமாவகதிரசின் 12. தர்மன் 13. வாகீசுவரன் 14. ஏகார்ணவசாயி 15. கமடேஸ்வரன் 16. விராகன் 17. நரசிம்மன் 18. பியூஷதாரணன் 19. ஸ்ரீபதி 20. காந்தாத்மன் 21. ராகுஜித் 22. காலநேமிக்தன் 23. பாரிஜாதஹரன் 24. போகநாதன் 25. காந்தாத்மன் 26. தத்தாத்ரேயன் 27. நயக்குரோதசாயி 28. ஏகங்குஸ்காத்மன் 29. வாமனதேகன் 30. திருவிக்கிரமன் 31. நரன் 32. நாராயணன் 33. ஹரி 34. கிருஷ்ணன் 35. பரசுராமன் 36. ராமதனுர்த்தரன் 37. வேதவிது 38. கல்கி 39. பாதாளசயனன் என்ற இம் முப்பத்தொன்பதும் விபவாவதாரங்கள் என்று சொல்லப்படுகின்றன. இவற்றில் பகவான் தன் உயிரைப் பற்றிக் கொண்டு தேவர் மனிதர் விலங்குகள் இவர்களுடைய சாதியில் பிறக்கிறான். சில அவதாரங்கள் ஆவேசாவதாரங்கள் எனவும் கௌண அவதாரங்கள் எனவும் வழங்கப்படுகின்றன, வீடுபேறு தருவது முற்குறிப்பிடப்பட்ட அவதாரங்களின் உபாசனையே கௌணமான அவதார உபாசனை ஏனைய அறம் பொருள் இன்பம் நல்குவன.

முக்கியமாகப் பத்து அவதாரங்களே புராணங்களில் விரித்துரைக்கப்பட்டுள்ளன. நாராயணனிடத்தில் அம்சம் கூர்மம் மத்ஸம் வராகம் நரசிம்மன், வாமனன் பரசுராமன்

தநுர்த்தராமன் வேதவித் கல்கி என்ற இவைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. நெருப்பில் இருந்து பொறி கிளம்புவது போலப் பகவானிடமிருந்து அவதாரங்கள் உண்டாகின்றன என்று ஆகமம் கூறுகிறது.

## வைணவத்தின் சிறப்பானக் கருத்துக்கள்

வேதத்தில் விஷ்ணு வேதத்தில் விஷ்ணு என்கிற தெய்வம் சொல்லப்படுகிறது. நூறு மந்திரங்களுக்கு மேல் விஷ்ணுவைப் பெரிதும் ஏற்றிப்புகழும் மந்திரங்கள் காணப்படுகின்றன. வேதத்தில் காணப்படும் விஷ்ணு தனியான தேவதையா? அல்லது பரந்த கடவுள் தத்துவத்தில் ஒரு அம்சமா? என்பது நாம் முடிவு செய்ய வேண்டிய ஒன்றாகும். பல தேவதைகள் உண்டு என்ற கொள்கை தான் வேதத்தில் காணப்படுகிறது என்று மேனாட்டு வேத ஆராய்ச்சி வல்லுனர்கள் கூறுகின்றார்கள். ஆனால் அவர்களில் மெய் தலை சிறந்து விளங்கிய 'மாக்ஸ் முல்லர்' வேதத்தில் பல தேவதைக் கொள்கைகள் கிடையாது. ஆனால் அந்தந்த சமயத்திற்கு அந்த தேவதையாக ஒரே கடவுளைப் ஏற்றுச் சொல்கிறார்கள். இது ஒரு புதிதான பல தேவதைக் கொள்கை என்று கூறிவிட்டார்.

விஷ்ணு என்பது சூரியன் தான் என்பது வேத மந்திரங்களிலிருந்து வெளியாகிறது. அந்த விஷ்ணுவும் மற்ற தேவதைகளோடு சமமான நிலையில் இருந்து வருகிறாரே தவிர தனியான பெருமையுடன் இருப்பதாகத் தெரியவில்லை. வேத உரை ஆசிரியரான யாஸ்கர் சூரியன் தான் விஷ்ணு என்று கூறிவிட்டார்.

## உபநிடதக்கூற்று

உபநிஷத்துக்கள் ஒரே தெய்வம் என்ற கொள்கையைச் சொல்லும் காலத்தில் அந்தத் தெய்வத்தைப் பிரம்மம் என்றே சொல்லுகின்றது. அந்தப் பிரம்மம் குணமில்லாதது என்றும் சிறப்பான இயற்கை இல்லாதது என்றும், தன்னுடைய இயற்கைக்கு மேல் வேறு குணங்கள் உடையதன்று என்றும் கூறுவர். இராமானுஜர் அந்தப் பிரம்மத்திற்குக் குணம் ஆகிய உருவம் உண்டு என்று விளக்கம் கூறினார். யார் எந்த விளக்கம் கூறினாலும் பிரம்மம் என்பது பிரம்மம் தான், அதற்குத் தனியான பெயரில்லை.

## புராணங்களின் காற்று

பிற்காலத்தில் தோன்றிய பிரம்மம் என்று குறிப்பதைத் விட்டு வேத நூலிலே காணப்படும் விஷ்ணு என்ற பெயரை முக்கியமாக வைத்துப் பேச ஆரம்பித்தன. பெரும்பான்மை யான புராணங்கள் விஷ்ணுவைத் தங்களுடைய முக்கிய தெய்வமாகக் கொண்டுள்ளன. விஷ்ணு தான் உலகத்தை பாதுகாக்கிறார்; விஷ்ணுதான் உலகத்தை அழிக்கிறார் என்று கடவுள் இலக்கணத்தை விஷ்ணுவினிடத்தில் ஒன்று படுத்திப் பல புராணங்கள் பேசுகின்றன. இதனால் விஷ்ணு கொள்கை கள் தனியாக உருவாகிய புராணங்களில் சொல்லப்படும் பிரம்மா, விஷ்ணு, சிவன் இவர்களில் விஷ்ணு பாதுகாக்கும் தெய்வமாகக் கொள்ளப்பட்டிருப்பது விஷ்ணுவின் தனிச் சிறப்பிற்கு காட்டாக நிற்கிறது.

## ஒரே தெய்வக்கொள்கை

வேதத்திற்குப் பிறகு ஒரே தேவதை வேண்டும் என்ற கொள்கை மிகவும் வளர்ந்து போகவே தேவதைகளில் விஷ்ணு விற்குச் சிலர் முக்கியத்துவம் கொடுத்தார்கள். சிவனுக்குச் சிலர் முக்கியத்துவம் கொடுத்தார்கள் அதுதான் வைணவம், சைவம் என்ற பெயரோடு மதம் மிகவும் வளர்ந்து விட்டது. புராணங்களில் பெரும்பான்மையான புராணங்கள் விஷ்ணுவைப் பற்றி சொல்வதாலும் புராணங்களின் அவதாரக் கொள்கைகள் முக்கியமான ஸ்தானத்தைப் பெற்று விட்டதாலும் பாதுகாக்கும் தெய்வம் என்ற முறையாலும் விஷ்ணுவிற்கு பிற்காலத்தில் முதலிடம் கிடைத்திருக்கிறது. மக்கள் தங்களது விருப்பப்படி வேதத்தில் காணப்படும் விஷ்ணுவைக் கற்பித்து தங்கள் விருப்பப்படி ஓர் உருவையும், பெயரையும் அவருக்குக் கொடுத்து வணங்க ஆரம்பித்து விட்டார்கள். இதற்கேற்ப மற்ற தேவதைகள் எல்லோருக்கும் விஷ்ணுதான் தெய்வம் என்று கூறிவிட்டார்கள். இது ஏதாவது ஒரு புராணத்தைக் கொண்டிருக்கலாம். விஷ்ணுவிற்கு ஆயுதங் கள் கொடுக்கப்பட்டிருப்பதைப் பார்த்தால் வீரம் நிறைந்த குழுவினரிடமிருந்து இந்த கொள்கைகள் வந்திருக்கலாம் என்று தெரிகிறது. இந்த விஷ்ணு பொதுமக்களுடையக் கருத்தில் தோன்றினவர்தான் ஆகமங்கள் தான் இந்த விஷயத்தில் உதவியைச் செய்திருக்கின்றன.

### வேதாந்தமும் உருவ வழிபாடும்

உருவம் இல்லாத கடவுளுக்கு நிலையான உருவத்தைக் கொடுக்கவேண்டும். இருப்பிடத்தைக் கொடுக்கவேண்டும் என்று பொதுமக்கள் கருத்தில் தோன்றியக் கருத்துக்களை சமாதானத்திற்காகவே சாற்றோர்கள் ஒப்புக்கொண்டனர் என்று தெரிகிறது. அதனாலே வேதாந்திகள் பிரம்மத்திற்குச் சரீரத்தையே ஒப்புக்கொள்ளவில்லை ஆனால் காலத்தை ஒட்டிப் பிரம்மத்திற்கு உருவத்தை ஒப்புக்கொண்டவர்களை வேதாந்திகள் ஒப்புக்கொண்ட பிறகு தங்கள் கருத்துக்கு இணங்கச் சரீரம், ஆயுதம் இவைகளுக்குப் பொருள் கூற ஆரம்பித்துவிட்டார்கள். பாஞ்சராத்ர ஆகமங்களிலேயே இந்தக் கருத்துக்கள் காணப்படுகின்றன. ஸ்ரீ வேதாந்த தேசிக்கும் ''ரகசிய யத்ரயஸாரம்'' மூல மந்திராதிகாரத்திலும் இந்த கருத்துக்கு இடங்கொடுத்துப் பேசுகிறார்.

''புருடன் மணிவராமாகப் பொன்ற மூலப்
பிரகுருதி மறுவாக, மான்ற டாகத்
தெருண் மருள்வான் மறைவாக, வாங்காரங்கள்''

இந்த பாடலில் கருடவாகனத்தில் பரம புருஷனான பகவான் இருக்கிறான் ஒன்று கருத்து வேதாந்தக் கொள்கைகளுக்கு இணங்க விளக்கப்படுகிறது.

### மும்மூர்த்திக் கொள்கை

புராணங்கள் கதைகளை விளக்க வந்தாலும் அவ்வக்னால் யார் உயர்ந்த தெய்வம் என்று முடிவு பண்ண முடியவில்லை. விஷ்ணுவை முதற் கடவுளாகச் சொன்னவர்கள் மற்ற தேவதைகளை அடியோடு மறுக்கவில்லை ஆனால் அவர்கள் எல்லோருக்கும் மேலுள்ள தெய்வம் இவர்தான் என்று சொல்லி விட்டார்கள் அவ்விதமே உபநிடதத்தில் உருவமில்லாத பிரும்மமும் உருவுள்ள விஷ்ணுவும் ஒன்றாகி விட்டன. அந்த விஷ்ணுவே உலகத்தைக்காக்கிறான், படைக்கிறான், அழிக்கிறான் என்ற கடவுள் இலக்கணமும் விஷ்ணுவோடு சேர்ந்து விட்டது. ஆனால் படைப்பது, காப்பது, அழிப்பது என்பது ஒரே கடவுள் செய்ய முடியாததனால் மும்மூர்த்திகளைக் கற்பித்துக் கொண்டு பிரம்மா படைப்பிற்காகவும், விஷ்ணு பாதுகாப்பிற்காகவும், சிவன் அழிப்பதற்காகவும் ஏற்பட்ட கடவுள் என்று

சொல்லி மும்மூர்த்திகளும் கடவுள்தான் என்ற கொள்கை உருவாகிறது.

**வேத, புராண, ஆகம வைணவம்**

வேதத்தில் காணும் வைணவம் மற்றவைகளை மறக்காமல் விஷ்ணுவை வழிபடுவதையே சொல்லுகிறது. வைணவம் என்ற சொல் வேதங்களிலேயே வந்திருப்பதைப் பார்க்கிறோம் ஆனால் இது பிற்காலத்தில் எப்படி எந்த நோக்கத்தில் கையாளப்பட்டதோ அந்த நோக்கத்தில் வேதத்தில் வரவில்லை என்று தெரிகிறது. புராணங்களிலுள்ள வைணவம் விஷ்ணு தான் உலகத்தைப் படைத்தார். காப்பாற்றுகிறார், அவர் தான் உலகத்தை அழிப்பதும் என்ற கொள்கையை வெளியிடுகிறது. புராணங்கள் தங்கள் கடைபிடித்த வழிகளில் இந்தத் தத்துவத்தை விளக்குகின்றன. இதற்கு பின் வந்த சைவ வைணவக் கொள்கைகள், தங்களுடைய தெய்வத்திற்குத் தனியானச் சிறப்பைக் காண்பிக்க வேண்டும் என்ற தனியான நோக்கத்தோடு தனியான கொள்கையோடு தலை எடுக்கின்றன. இவைகள் தான் ஆகமங்கள் என்று சொல்லப்படுகின்றன.

**ஆகம வைணவத்தின் தனித்த நிலை**

ஆகமங்கள் தங்களுக்கு மூலமாக இப்போதுள்ள வேதங்களைச் சொல்வதில்லை அதற்குப் பதிலாகத் தங்களுடைய ஆகமங்கள், தங்களுடைய தெய்வத்தின் வாயிலிருந்து நேரே பிறந்ததாகச் சொல்ல ஆரம்பிக்கின்றன. இவைகள் தங்களுடைய தெய்வத்திற்குத் தனியான சிறப்புள்ள ஒரு பெயரைக் கொடுத்து மதம், கர்மம், ஒழுக்கம் சம்பந்தப்பட்ட கொள்கைகளிலும் தனித்து நிற்கின்றன, இதுதான் ஆகம வைணவம் என்று கூறப்படுகிறது. பொதுவான கொள்கைகளைக் காட்டிலும் தனித்த கொள்கைகளில் மக்களுக்கு ஈடுபாடு ஏற்படுவது இயல்பானதால் ஆகமக் கொள்கைகளில் விஷ்ணுவை முக்கியமாகக் கொள்பவர்களுக்குப் பற்று ஏற்படுவது இயற்கையே கருத்தளவில் மட்டும் ஆகமங்கள் நின்றிருந்தால் சிக்கலே வராது. தனியான அனுஷ்டானத்தோடு அவை இருப்பதால் வேத அனுஷ்டானத்தை அவர்கள் பின்பற்றுவதா? ஆகம அனுஷ்டானத்தைப் பின்பற்றுவதா? என்ற சிக்கலில் வேதத்தை முக்கியமாக நினைப்பவர்கள் கருத்தளவின் மட்டும் ஆகமங்களை ஒப்புக்கொண்டு அனுஷ்டானத்தில் வேதத்தைப்

பின்பற்றுகிறோர்கள். மற்றும் சிலர் வேதத்தையே அடியோடு புறக்கணித்து ஆகம அனுஷ்டானங்களைப் பின்பற்றுகின்றனர். சிலர் இயன்ற வரையில் இரண்டையும் பின்பற்றுகின்றனர்;

## வைணவ வேதாந்தக் கொள்கைகள்

அத்வைதக் கொள்கைகளைப் பின்பற்றும் ஆசாரியர்களும் தங்களை வைணவங்கள் என்று சொல்லிக் கொள்கிறார்கள். வேதாந்தக் கொள்கைகளுக்கும் விஷ்ணு தெய்வக் கொள்கைகளுக்கும் சம்பந்தமே இல்லை. தெய்வக் கொள்கை ஒரு தெய்வத்தை அடிப்படையாகக் கொண்டு அவனுக்கும், மனிதனுக்கும் உள்ள உறவை விளக்குகிறது. வேதாந்தக் கொள்கை முடிவான உண்மையை விளக்க ஏற்பட்டுள்ளது. ஆனாலும் வேதாந்தம் வைணவத்தோடு சேரும் காலத்தில் வைணவர்கள் தங்களுடைய முடிவான பொருள் அந்த விஷ்ணு என்று சொல்லிக் கொள்கிறார்கள். தனிப்பட்ட கடவுள் கொள்கைக்கும், கடவுள் உருவில்லாதது என்ற வேத்தக்கொள்கைக்கும் சமாதானம் ஏற்பட இடமே இல்லை, தெய்வக் கொள்கை ஒரு தெய்வத்தை அடிப்படையாகக் கொண்டு அவனுக்கும், மனிதனுக்கும் உள்ள உறவை விளக்குகின்றது. வேதாந்தக் கொள்கை முடிவான உண்மையை விளக்க ஏற்பட்டுள்ளது. ஆனாலும் வேதாந்தம் வைணவத்தோடு சேரும் காலத்தில் வைணவர்கள் தங்களுடைய முடிவான பொருள் அந்த விஷ்ணு என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

## இறைவனின் ஐவகை நிலைகள்

உருவமில்லாத கடவுளிடம் இருந்து இறை உருவத்தோடு ஸ்ரீவைகுண்டத்தில் விளங்கி வரும் ரூபத்தில் தீர்ந்து விட்டது. அந்த பரரூபம் நான்கு சுவர்களுக்கும் நடுவிலுள்ள ஜலம்போல் எல்லோருக்கும் எல்லா காலத்திலும் நெருங்க முடியவில்லை. அந்த குறையை நிவர்த்திக்க எம்பெருமான் வியூகமாக உருவம் எடுத்தார். அந்த உருவம் இந்த லோகத்திலேயே இருந்தாலும் 'க்ஷீராப்தி போல்' அடைய முடியாததாக இருந்து விட்டது. இந்த குறையை நீக்க பகவான் விபவாவதாரம் செய்தார், ஆனால் அந்த ராமன் கிருஷ்ணன் உருவத்திலிருந்த அவதாரங்கள் அந்தந்தக் காலத்தில் உள்ள மக்களுக்கே பயன்பட்டதால்

மழைபினரல் காற்றில் ஜலம் பெருகும் போது இருந்தவர்களுக்கு அந்த ஜலம் பயன்படுவதைப் போல, சிலருக்குத் தான் பயன் பட்டது, மற்ற தேசங்களில் இருந்தவர்களுக்குப் பயன் படவில்லை இந்தக் குறையை நீக்க இதயத்தில் பகவான் தன் உருவைக் காட்டி அவரவரைக் கரையேற்ற முயல்கிறான்: அவ்விதம் தன்னுடைய உள்ளத்தில் எழுந்தருளியிருக்கும் பகவானை யோகத்தினால் தான் பார்க்க முடியும். அந்த யோகத்தைப்பின்பற்றுவது கடினம் அதனால் பகவான் எப்போது தரிசனம் கொடுப்பான் என்பது நிச்சயம் இல்லை. இந்தக் குறையை நிவர்த்திக்க வீடுகளிலோ, ஆலயங்களிலோ பிம்பங்களில் வந்து உட்கார்ந்து நாமிருக்கும் இடத்தை தன்னிருப்பிடமாகக் கொண்டு, அடியார்களுக்கும் பராதீனனாக இருந்து நம் கண்ணுக்கு எப்போதும் கண்டுகளிக்கக் காட்சி கொடுத்து அர்ச்சாவதாரம் செய்தான் ஆகவே இந்த அவதாரத்திற்கு ஒரு குறையுண்டு பிம்பத்தில்: வந்துள்ள தெய்வம் நம்முடைய அன்புக்கு போக்கு வீடாக இருக்கலாமே தவிர நம்மோடு கூடிக் கலந்து பேசி, நம் வருத்தங்களைக் கொடுத்துக் கேட்டு, நம்மை ஆசவாசம் பண்ணிப் பேசமுடியாது. அர்ச்சாவதாரத்தில் பகவான் பேசியதே கிடையாது. பிம்பங்களில் இருந்தபடியே பேசினால் உலகத்திற்கு ஆபத்து ஏற்படும் என்ற "ஷட்விட்சப்ராம்மணம்" கூறுகிறது. அதனாலேயே அர்ச்சகர் மூலமாகவே அர்ச்சாவதாரத்தில் பகவான் தன் கருத்தை தெரிவிக்கிறான் என்ற சம்பிரதாயம் இருந்து வருகின்றது.

### அர்ச்சையிலும் ஆசாரியன்

இந்தக் குறையை நிவர்திக்க பகவான் ஆசாரியனாக அவதாரம் பண்ணுகிறான். ஆசாரியன் சிஷ்யனோடு நெருங்கிப் பழகிப் பேசி அவனுடைய குறைகளை ஆச்வாசப்படுத்துகிறான். ஆசாரியன் பேசும் தெய்வம், நடமாடும் தெய்வம் என்று சொல்வது மிகையாகாது. பல்லாயிரக்கணக்கான வருடங்களில் பல இடங்களில் வளர்ந்து ஒவ்வொரு இடத்திலிருந்து ஒவ்வொரு கருத்தைப் பெற்று உருவாகி வளர்ந்த வைணவம் எளிய மக்களுக்குத் தகுந்தாற்போல் மிகவும் எளிய வழியில் அமைந்தது மனிதப் பெருமைக்குச் சான்றாகும்.

### ஆச்சாரியனை அடைய ஆறுபடிகள்

ஆச்சாரியனை அடைவது என்பது ஆறுபடிகளில் ஏறினால் தான் கிடைக்கும் என்று வேதாந்த தேசிகர் கூறினார்: இவனை

எப்படியாவது நம்மையடையச் செய்யவேண்டும் என்றிருக்கும் ஈசுவரனின் கருணை முதல்படி. கருணை மிகுதியால் இவன் கடவுளை அடையவேண்டும் என்ற நோக்கத்தோடு பெயர்வதையும், கடவுள் செய்ததாகக் கொள்கிறான். இது இரண்டாவது படி, அப்படி தற்செயலாக கிடைத்த ஸுக்ருதத்தை அடிப்படையாகக் கொண்டு பகவத் கடாக்ஷத்தால் கருவிலேயே குரு உடையவனாக ஆவது மூன்றாவது படி, அதன் விளைவாக சாதுக்களிடத்தில் த்வேஷம் இல்லை ஏற்படுவது நான்காவது படி அதன் விளைவாக சாதுக்களிடம் கவனத்தைச் செலுத்துவது ஐந்தாவது படி. அதன் விளைவாக சாதுக்களுடைய சம்பாஷணம் கிடைப்பது ஆறாவது படி, இந்த ஆறு படிகளில் ஏறிவந்தவர்களுக்குத்தான் ஒரு ஆசாரியனுடைய அருள் கிடைக்கிறது.

### வைணவத்தில் ஆலய வழிபாடு

ஆலய வழிபாட்டை தங்களுடைய கொள்கைகளில் சிகரமாக வைத்துக் கொண்டதும் வைணவத்தில் எளிமையில் உயர்ந்த அம்சம், கண்ணுக்கு நேராகக் கடவுளைக் காண்பித்து அவனுக்குக் கைங்கர்யம செய்வதை வாழ்நாளில் பயன் என்று கூறுவது பல்லாயிரக்கணக்கான வருடங்களாகப் பழகி வந்துள்ள ஒரு பழக்கத்தை இவர்கள் பின்பற்றிச் சிந்தித்து வந்திருப்பதை வெளியாக்குகின்றது. அவ்விதமே சிந்தனைக்குப் பூர்ணமாக இடங்கொடுத்து அது எங்கே கொண்டுவிட்டாலும் பயமின்றி அங்கு செல்லும் தைரியம் ஆசாரியர்களைச் சார்ந்தது.

### கடவுளுடைய பெருமை

ஆசாரியர்கள் கடவுளுடைய பெருமையை மிகவும் வளர்த்துவிட்டார்கள். உலகிலுள்ள எல்லா தெய்வக் கொள்கைக்காரர்களும் ஆன்மாவைக் காட்டிலும் எம்பெருமானுக்குப் பெருமை உண்டு என்று நினைக்க பகவானுடைய பெருமையை மிக மிகப் பெரிதாகச் செய்து மாலைபோல் ஆக்கிவிட்டார்கள்.

இந்த நிலையில் அவனோடு ஒப்பிட்டுப் பார்க்கும் காலத்தில் ஆன்மாவோ, ஆன்மாவின் சக்தியோ இருக்கும் இடமே தெரியவில்லை. இந்நிலையில் கடவுளுக்காகக் கர்மாக்களைச் செய்வது என்ற கொள்கையே பொருத்தம் இல்லாததாகவும்

பொருளில்லாததாகவும் ஆகிவிடுகிறது: கர்மாக்களைச் செய்வதால் கடவுளைத் திருப்தி பண்ண முடியாது: ஏராளமான புண்ணியங்களைச் செலவழித்துப் படாத பாடு பட்டால்தான் கடவுள் கருணையைக் காட்டுவானோ? அவ்விதமே கடவுளை அடைய யோகாப்பியாசம் செய்ய வேண்டியதும் அவசியம் தானா? சரீரத்தை வாட்டி வதக்கி வீடு வாசல்களை மறந்து அவனையே நினைக்கும் யோகத்தை அவன் கேட்கிறானோ? என்ற வினாக்கள் எழுவது இயற்கையே பக்தி கூட ஒரு வழியில் பகவானுடைய ஆதரவுக்காகச் செய்யப்படுகிறது என்றே தோன்றுகிறது.

**கர்மாவும் கருணையும்**

நாம் செய்யும் கர்மாக்களுக்கு பலன் ஏற்படுகிறதா? அல்லது கடவுளின் கருணை காரணமாகப் பலன் கிடைக்கிறதா என்ற கேள்வி பிறக்கும் போது நம்முடைய கர்மா இருக்கும் இடம் தெரியாமல் போகவே அவன் கருணை தான் முன் நிற்கிறது கருணை என்பது பகவானுடைய இயற்கையான குணம் அதனால் பகவானுடைய ஆதரவைப் பெறுவதற்காக நாம் ஒன்றும் செய்ய வேண்டா பகவானே தானாகவே நமக்கு வேண்டியவற்றைக் கொடுக்கிறான் என்ற முடிவை ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள் தைரியமாக ஒப்புக் கொண்டுள்ளனர்.

**ஞானமும் பக்தியும்**

அத்வைதிகள் ஞானத்தினால் தான் மோட்சம் சித்திக்கும் என்றனர். ராமானுசர் அது கிடையாது. அது பக்தியாக உருவாக வேண்டும் என்று சொன்னார். பக்தி என்பது அறிவு என்ற நிலையில் மனதின் செயலாக நின்று அன்பு என்ற நிலையில் உணர்ச்சியையும் உட்கொண்டு விட்டது. ஆனால் ராமானுஜர் உபநிடதத்தில் சொல்லும் வழிகளைப் பின்பற்றி அந்த வழியில் தான் பக்தியைச் செய்ய வேண்டுமென்று வெட்டு ஒன்று துண்டு இரண்டு ஆக கூறிவிட்டார்.

**திருமகள் பற்றிய கருத்து**

அகங்காரம் கடவுளிடமிருந்து ஆத்மாவைப் பிரிப்பதினால் இந்த 'அகம்' என்கிற எண்ணத்தைப் பெரிய பாவமாக எண்ணுகிறார்கள். ஆழ்வார்கள் பகவானைக் கடவுளாக ஒப்புக்

கொண்டு அவனே நம்மைப் பாதுகாக்கிறான் என்ற கொள்கை யிலேயே நின்று விட்டார்கள். பகவானுடைய கருணையைப் பற்றி பேசும் எல்லா மதங்களுமே இந்த நிலையிலேயே நின்று பேசுகின்றன. ஆனால் பகவானோடு கூட இருக்கும் மகா லட்சுமிக்கு என்ன பங்கு என்று சொல்ல முடியவில்லை; நூல் களோ மகாலட்சுமி பகவானை விட்டுப் பிரிய்மாட்டாள் என்று கூறுகின்றன. இந்த நிலையில் அவளின் தனித்த நிலைக்கு ஏதாவது ஒரு வழி சொல்லித்தான் ஆகவேண்டும்.

மகாலட்சுமி எப்படி உண்டானாள் என்ற கேள்விக்கு ஆராய்ச்சியாளர்கள் பல கருத்துக்களை வெளியிடுகிறார்கள்; நஞ்ஜீயர், அதிதி, ச்ரத்தா, மேதா முதலிய பெயருள்ள வேதப் பெண் தெய்வங்களுக்கும் மகாலட்சுமி தான் என்று கூறுகிறார். ஆனால் புராணங்களில் வட்சுமி 'ப்ரக்ருதி' என்ற பொருளில் உருவம் தான் என்றும் வித்யையின் உருவம் தான் என்றும், மாயையின் உருவம்தான் என்றும் பலவிதமாகச் சொல்லப் படுகிறார். ஜகந்மாதா என்ற பெயர் உலகத்தின் மூலப் பொருள் என்ற கருத்திலேயே வந்திருக்கிறதென்று தெரிகிறது. தாயிடமிருந்து குழந்தை வருவது போல ப்ரக்கிருதியிலிருந்து உலகம் வருகிறதென்று ஒப்பப்படுகிறது, விஷ்ணுவை விட்டுப் பிரியாதவள் என்று கூறும் விஷ்ணு புராணம் லட்சுமியைப் பல உருவில் வர்ணிக்கிறது. வேதத்தில் உள்ள விஷ்ணு என்ற சொல் நாராயணா, வாசுதேவன் என்ற சொற்களோடு ஒன்றாக ஆகிவிட்டதால் இந்த லட்சுமி தத்துவமும் விஷ்ணு, நாராயணன், வாசுதேவன் என்ற முக்கியமான மூன்று பெயர் களுடன் சேர்ந்து விட்டதால் விஷ்ணுவுக்கும் லட்சுமி தான் பத்னீ, வாசுதேவனுக்கும் லட்சுமி தான் பத்னீ என்று ஏற்பட்டு விட்டது.

ஆக விஷ்ணு தத்துவத்திற்கு வேதத்தை மூலமாகக் கொண்டதுபோல, லட்சுமி தத்துவத்திற்கும் வேதம் தான் உதவுகிறது. வேதத்தில் ஸ்ரீ லட்சுமி முதலிய பெயர்கள் உருவ முறையில் ஒரு பெண் தெய்வத்தை குறிக்கிறது. விஷ்ணு பத்னீ என்ற சொல்லும் பரவி நிற்கும் அரசி என்ற வேறு ஒரு பொரு ளில் வந்துள்ளது. இந்த சொல் வரும் மந்திரத்தை நீலா ஸூக்தம் என்று சொல்லி வருகிறார்கள்.

ஆழ்வார்கள் மூன்றுவிதமாக உள்ள பகவானுடைய மனைவி களை அடிக்கடி சொல்லுகிறார்கள். ஆனால் அந்தந்த ஊர் களைப் பற்றி பாருங்கால் ஸ்தலபுராண ரீதியில் வரும் பத்னி

களின் பெயர்களை சொல்லவில்லை. ஸ்ரீ, பூ, நீலா என்ற தத்துவங்களும் வேறு வேறு இடங்களில் உற்பத்தியாகி வந்து சேர்ந்துள்ளன என்பது வரலாறு மூலம் தெரிகிறது. சதுக் லோகியில் ஸ்ரீயை ஆளவந்தார் வழி வழிபடுகிறார். ஸ்ரீ தத்துவத்தை ஆழ்வார் வழிபடுகிறார்கள். பூஸ்துதி, கோதாஸ் துதி மூலம் பூதேவி நப்பின்னையின் அவதாரமான கோதை இவர்களையும் வேதாந்த தேசிகர் வழிபடுகிறார்.

## லட்சுமியின் தொழில்

மகாலட்சுமியைப் பெண் உருவாகச் சொல்லி விஷ்ணுவோடு சேர்ந்த பிறகு அவர்களுக்கு என்ன தொழில் என்பதை யாரும் நிர்ணயம் செய்யவில்லை. மறையில் விஷ்ணு பத்னி என்ற சொல் காணப்பட்டாலும் அது பரவி நிற்கும் அரசி என்றுதான் குறிப்பிடுகிறது. மகாலட்சுமி பெண்ணுருவில் இருப்பதால் பெண்களுக்குள்ள தனியான குணங்களை அவளோடு சேர்த்து யாரும் சிந்தித்தது இல்லை. ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள் பெண் என்றும், மகாவிஷ்ணுவின் பத்னி என்றும் சொல்லிய பிறகு அவளுக்கு ஏதாவது தொழிலைக் கொடுத்தாக வேண்டும் என்று சிந்தனை செய்து நமக்கும் மகாவிஷ்ணுவுக்கும் நடுவில் நின்று நமக்காகப் பரிந்து பேசுகிறாள். தம்பதி (கணவன், மனைவி) என்ற உறவை ஏற்படுத்திய பிறகு மகாலட்சுமிக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும். இவள் பெருமையை விளக்கு வதற்காக விஷ்ணுவின் பெருமையைச் சிறிது இறக்கத் தயங்கியதும் இல்லை. மகாலட்சுமி என்ற கொள்கை தேவி வழிபாட்டின் வழியாக முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. தகப்பனாக இருந்தாலும் கடவுளுக்குப் புருஷன் என்ற இயற்கையை பின் பற்றிக் கோபம் வருகிறது. அப்பொழுது ஆன்மா வர்க்கங் களுக்காக மகாலட்சுமி பரிந்துப்பேசுகிறாள்.

## லட்சுமி தத்துவம்

வைணவ சம்பிரதாய ஆசாரியர்கள் லட்சுமியை நாராயணனுடைய பத்னீ எனக்கொள்கின்றனர். விஷ்ணு வோடும் மற்றவர்களோடும் சம்பந்தப்படுத்தப்பட்டுப் பல கதைகளில் வரும் லட்சுமியின் சிறப்பு ''லட்சுமி'' நாமத்திலும், மந்திர சாஸ்த்திரங்களிலும் விரிவாகக் கூறப்படுகிறது. உலகில் பெண்கள் யாவரும் மகாலட்சுமியின் அம்சமென்று விஷ்ணு புராணம் கூறுகிறது. வைணவ ஆகமங்கள் படைப்புக்

கொள்கையில் லட்சுமிக்கு இடங்கொடுத்துள்ளன. பொதுவாக வேதாந்திகள், பக்தர்கள், பொருள் வேட்கை மிக்கவர்கள் எல்லோரும் லட்சுமி தத்துவத்தில் ஈடுபட்டுப் பல கருத்துக் களை வெளியிட்டுள்ளனர். மகாபாரதத்தில் லட்சுமி விஷ்ணு வோடு மட்டும் ஒரு குறிப்பிட்ட உருவத்தோடும் ஏனைய இடங்களில் கருத்தளவிலும் இருப்பதாகக் கூறப்படுகிறார். கருத்துக்களுக்கும் உருவம் கொடுத்து வழிபடவும் வழிகள் வகுக்கப்பட்டு உள்ளன. எனினும் விஷ்ணுவிடம் உள்ள லட்சுமி உருவம் ஏனைய இடத்து உருவங்களின் வேறுபட்டதே.

## ஆலயத்தில் பெண் அர்ச்சைகள்

விஷ்ணு ஆலயங்களில் விஷ்ணு உருவத்தின் இரு புறங் களிலும் பெண் உருவத்தில் இரு பிம்பங்கள் இருப்பதோடு, தனிக்கோயிலில் நாச்சியார் பிம்பமும் உண்டு. அந்தந்தக் கோயில் பெருமாளுக்கு அந்தந்த நாச்சியார் மனைவி, பெருமாள், நாச்சியார் இவர்களுக்குக் கோயில் தோறும் தனிப் பெயர்கள் உண்டு. ஆலயங்களில் முக்கியமான ஆண் பிம்பமும், பெண் பிம்பமும் ஒரே பீடத்தில் எழுந்தருளுவதை ஆகமங்கள் அனுமதிக்கவில்லை. பெருமாள் பிம்பத்தின் மார்பிலும் லட்சுமி இருக்கிறாள். மார்பில் உள்ள லட்சுமியை லயார்ச்சை எனவும், பக்கத்தில் உள்ளவர்களால் போகர்ச்சை எனவும், தனிக்கோயில் நாச்சியாரை தாம் யார்ச்சை எனவும் பெயரிட்டு அழைக்கின்றார் அர்ச்சகர்கள் கோயிலின் பிரதான பிம்பத்தை ஸ்ரீ, பூமி, நீலா சமேத என்ற மூன்று பத்நிகள் உடைய பகவானாகவே எல்லாக் கோயில்களிலும் குறிப்பிடு கிறார்கள்.

## ஆழ்வார்களும் லட்சுமியும்

லட்சுமி பகவானிடம் உள்ளடங்கியிருப்பதால் அவரைப் பற்றி வேதம் தனியாகக் குறிப்பிடவில்லை என்று கூறும் பட்டர் வேதத்தில் காணப்படும் விஷ்ணு பத்னி என்ற தொடர் மகாலட்சுமியைக் குறிப்பிடுகிறது எனவும், இதனை ஸ்ரீ ஸூக்தர் விரிவாகப் பேசுகிறது எனவும் மற்றோரிடத்தில் விளக்கிக் கூறுகிறார். ஆழ்வார்கள் பகவானோடு லட்சுமியைச் சேர்த்துப் பல பாடல்களில் பேசியிருந்தும் தனிப்பட்ட முறையில் லட்கமி ஸ்தோத்திரம் செய்யவில்லை. ஆழ்வார் களுடைய கருத்துக்கு பகவானின் கோபத்தை லட்சுமி அடக்கினாள் என்ற கொள்கை ஒத்தில்லை'

### தேவர்கள் மூவர்

பகவானுக்கு லட்சுமி மட்டும் மனைவியல்லள் பூமியும் நீலாதேவியும் மனைவியாகக் கூறப்பட்டுள்ளனர் பகவானுக்கு ஓரே பத்னிதான் இருக்கவேண்டும் என்ற கருத்தில் ''மற்றவர்கள் லட்சுமியின் அவதாரம் தான்'' என்று வேதாந்த தேசிகர் கருதுகிறார்.

### ஆகமங்களில் லட்சுமி தத்துவம்

ஆகமங்களில் காணப்படும் லட்சுமி தத்துவக் கொள்கை தனியாகவே நிற்கிறது அகிர்புத்னீய சம்ஹிதையும் லட்சுமி தந்திரமும் ஸ்ரீ வைகுந்தத்தில் லட்சுமி அல்லது ஸ்ரீ என்ற ஒருத்திதான் பகவானுடைய சக்தியாக இருக்கிறாள் என்று கூறுகின்றன. வைணவ ஆசாரியர்கள் இக்கருத்துடைய வைகுண்ட புதுலோக ஸ்ரீ யாஸார்தம் என்ற செய்யுளை இன்றும் மந்திர புஷ்பத்தில் பூஜா காலத்தில் சொல்லி வருகிறார்கள். பகவான் லட்சுமியோடுதான் ரக்ஷகனர் யுள்ளான் என்ற லக்ஷ்மியா ஸஹ ஹ்ருஷீகேச; தேவ்யா காருண்ய ரூபயா ரக்ஷக! என்ற இந்த ஆகமத் தொடரையும் ஆசாரியர்கள் அடிக்கடி கையாளுகிறார்கள் பகவான் எந்த உருவம் எடுத்தாலும் இந்த சக்தி தொடர்க்கிறது. பகவானுக் குரிய ஆறு குணங்களும் இந்த சக்திக்கும் உண்டு. விஷ்ணுவின் எல்லா அம்சங்களிலும் நிறைந்து நிற்கும் சக்தி நாராயணி சக்தி என்று வழங்கப்படுகிறாள் இவள் சுதந்திரமானவள் நித்ய, பூர்ணை பரவி நிற்பவள். அவள் மூலம் உலகம் பார்க்கப்படுவதால் அவளுக்கு லட்சுமி என்றும் பெயர். காலம் புருஷன் இவை வெளிவராத நிலையிலும், தாமரைப் பூப்போல இருப்பதால் 'பத்மா' என்றும் பெயர். விஷ்ணுவின் ஆற்றல் உருவில் இருப்பதால் ''விஷ்ணு சக்தி'' என்றும் பெயர் விஷ்ணுவின் இயற்கையைக் காப்பாற்றுவதால் ''விஷ்ணு பத்னீ'' என்றும் பெயர் இவளுக்கு உண்டு.

இவ்வாறு பேசும் ஆகமங்களில் பிற்பட்டுத் தோன்றியவை 'ஸ்ரீ வைகுந்தத்தில்' பகவான் ஆண் உருவத்தில் இருப்பது போல சக்தியும் பெண் உருவத்தில் உள்ளார். பக்தர்கள் அவ் விருவரையும் அனுபவிக்கின்றார்கள். பரிவார தேவதைகள் என்ற பெயரில் பெண் உருவத்தில் உள்ள பல சிறு தேவதை களும் அங்கு இருக்கின்றனர். ஆதிகாலத்தில் கருத்தளவில் இருந்த விஷ்ணு தத்துவமும், லட்சுமி தத்துவமும் வேதாந்தக்

கருத்துக்களாகக் கொண்டு விளக்கப்பட்டன. பின் மந்திர சாஸ்திர வழியைப் பின்பற்றிய பெயர் உருவம் என்பன கொடுக்கப்பட்டன. பிறகு ஆகமம் சிற்பம் இவற்றைப் பின்பற்றி பிம்பங்கள் செய்து ஆலயங்களில் மந்திரங்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டு வழிபடப்பட்டு வருகின்றன. வைணவ ஆசாரியர்கள் ஆண் பெண் உருவங்களை அடிப்படையாகக் கொண்டு தங்களுடைய சம்பிரதாயக் கொள்கைகளை வளர்த்துவிட்டார்கள் என்பனவற்றை வரலாற்று வாயிலாகக் காணலாம்.

## வைணவ சம்பிரதாயம்

சம்பிரதாயம் என்ற சொல் பரம்பரையாக வந்துள்ள ஆட்சேபிக்கப்படாத கருத்துக்களைக் குறிக்கும், ஸ்ரீ வைணவ சம்பிரதாயத்தின் வேதாந்தக் கருத்துக்கள், மதக் கருத்துககள் தெய்வக் கொள்கை சம்பந்தமானக் கருத்துக்கள் ஒழுக்கம் சம்பந்தமான கருத்துக்கள் இவை அடங்கியுள்ளன வேதாந்தம் என்ற சொல் முடிவாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள தத்துவங்களைக் குறிக்கும்.

## முப்பொருள்கள்

இந்த தத்துவங்களை மூன்றாக ஆசாரியர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். தத்துவம் ஒன்றாகத்தானே இருக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லை. மூன்று வகையான உலகத்தின் மூலப் பொருள்களும் மூன்றே. இது தத்வத்ரயம் என்று சொல்லப்படுகிறது. ப்ரகிருதி ஜீவாத்மா—பரமாத்மா இறைவன் என்று இவைகளுக்குப் பெயர்.

பலவிதமாகக் காணப்படும் உலகம் பிரகிருதி என்று சொல்லப்படுகிறது. ஜடப் பொருளுக்கு ஏதோ ஒன்று காரணமாக இருக்கவேண்டும் அது மூலப் பிரகிருதி என்று சொல்லப்படுகிறது. அவ்விதமே 'நான்' என்ற விவகாரம் உலகில் காணப்படுகிறது. இந்தச் சொல்லுக்கு கருத்தென்ன வென்று புரியவில்லை. ஒரு சமயம் என்னுடைய சரீரம் என்கிறான். இங்கு சரீரம் வேறு, நான் என்பது வேறாகத் தோன்றுகிறது. மற்றொன்று நான் நடக்கிறேன் என்று நான் என்பதையும் நடக்கும் சரீரத்தை ஒன்று படுத்திப் பேசுகிறான்.

இந்த உலகனுபவத்தைப் பரிசோதனைச் செய்யும்போது சரீரம் வேறு, ஆன்மா வேறு எனவே ஆத்மா என்ற பரிசுத்தமானவன் தோன்றுகிறது இந்த ஆத்மாவிற்கு காரணமாகிய ஜீவாத்மா ஒருவன் தோன்றுகிறான ஜீவாத்மா, ப்ரகிருதி இவை இரண்டும் யுக்தியை மூலமாகக் கொண்டு ஏற்படுகின்றன. அவ்விதமே இவை இரண்டையும் இயங்க வைக்கும் கடவுள் என்ற தத்துவமும் யுக்தியால் கிடைக்கிறது. ஆனால் யுக்தியால் கிடைக்கும் கொள்கைகள் பல வழிகளில் குறையுள்ளவைகளாக ஆசாரியர்களாயுள்ளவை இருப்பதால் ஆசாரியர்கள் தங்களுடைய முழுக் கருத்துக்களுக்கும் நூல்களையே பின்பற்றுகிறார்கள்.

உலகத்திற்குக் காரணமாகவும் உலகத்திற்கு ஆதாரமாகவும் கடவுள் கிடைக்கிறான். இந்த மூன்று தத்துவங்களுக்கு 'தத்வத்ரயம்' என்று பெயர் இவை சித்து, அசித்து, ஈஸ்வரம் என்று விளக்கப்படும். சித்து என்பது அந்த சரீரத்திலுள்ள அறிவுள்ள ஆத்மாவைக் குறிக்கும். அசித்து என்பது சரீரம் உள்ளிட்ட ஜடமான வெளிப்பொருள்களைக் குறிக்கும், ஈசுவரம் என்ற சொல் இவை இரண்டையும் இயங்கவைக்கும் கடவுளைக் குறிக்கும் முப்பொருட்களுக்கும் ஒன்றுக்கொன்று உறவு என்ன என்று கவனித்தால் மூன்றும் சுதந்திரமாக இயங்காததனால் மூன்றும் ஒன்று சேர்ந்துள்ளன என்று தெரிய வருகிறது. ப்ரகிருதி என்ற ஜடப்பொருள் தானாகவே இயங்காது, ஆகவே அதை இயங்கச் செய்ய ஒரு அறிவுள்ள ஆன்மா வேண்டும், அவ்விதமே ஆன்மாவினுடைய நிலையை நன்கு பரிசோதித்துப் பார்த்தால் ஒவ்வொரு சரீரத்திலும் உள்ள ஆத்துமாவும், அறிவுள்ளவனாக இருந்தும் தானே இயங்குவது கிடையாது என்று தெரிகிறது, அறிவுள்ள ஆத்மா தனது விருப்பப்படி இயங்கித்தான் விரும்பியதைப் பெற்றுக்கொண்டு வந்திருந்தால் அவனுக்குமேல் கடவுளைப்பற்றி நினைக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் மனிதன் எப்பொழுதுமே உண்மையான உணர்வைப் பெறுவது கிடையாது. பல இடங்களில் தவறுகிறான் தான் விரும்பியவைப் பெற முடியவில்லை. அதனால் இவைகளை இயங்கவைக்கும் ஒரு கடவுள் தத்துவத்தை ஒப்ப வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

**விசிஷ்டாத்துவைதம்**

இவற்றுள் ஈசுவர தத்துவம் மற்ற இரண்டைக் காட்டிலும் சுதந்திரமாயும் தானே இயங்கக் கூடியதாயும் இருப்பதால்

அதை முக்கியமாகக் கொண்டு மற்றவைகள் அதை நம்பி வாழ்வன என்று ஒப்புக்கொண்டு உலக வாழ்க்கையில் சரீரத்திற்கு ஆத்துமாவிற்கும் உள்ள உறவை எடுத்துக்காட்டாகக் கொண்டு பரமாத்மாவை நம்பி ஜீவனும், ப்ரக்கிருதியும் இருப்பதினால் ஜீவாத்மா, ப்ரகிருதி இவைகளோடு சேர்ந்த பரமாத்மா ஒரே பொருள்தான் என்று சொல்லுகிறார்கள். இதற்குத்தான் விசிஷ்டாத்வைதம் என்று பெயர் ஜீவாத்மா, ப்ரகுருதி இரண்டும் சேர்ந்துள்ள பரமாத்மா ஒருவனே என்று கொள்வதால் தான் இதற்கு இந்த பெயர் வந்தது. விசிஷ்டம் என்ற சொல் சேர்ந்துள்ளது என்ற பொருளில் வந்துள்ளது; மூன்று தத்துவங்களிலும் இயற்கையில் ஒன்றுக்கொண்டு வேறுபட்டவை ப்ரகிருதி ஜடமானது ஜீவாத்மா அறிவு வடிவுள்ளவன், அறிவுள்ளவனாக இருப்பவன் பரமாத்மா போல் நிறைந்த சக்தியோ, நிறைந்த ஞானமோ இல்லாதவன் இவனுக்குப் பரவுதலும் கிடையாது. ஜீவாத்மா அணுவாக ஒப்புக் கொள்ளப்பட்டதால் அவன் சரீரத்திற்குள் ஓரிடத்தில் இருந்து வருகிறான் மற்ற இடங்களில் உணர்வு மூலம் பரவுகிறான் கடவுள் அப்படி இல்லை எங்கும் பரந்து நிற்கும் அழிவில்லாத பொருள் பரமாத்மா என்ற இறைவன் அளவற்ற அறிவு அளவற்ற இயல்பு உள்ளவனாகவும், மற்ற இரண்டையும் இயங்கச் செய்பவனாகவும் இருக்கிறான்.

**ஈசுவரதத்துவம்**

ஈசுவர தத்துவத்தின் இலக்கணத்தை ப்ரம்ம சூத்திரக்காரர் படைத்தல், காத்தல், அழித்தல் இவைகளைச் செய்பவன் ''ஈசுவரன்'' என்று கூறுகிறார். ஈஸ்வர ஸ்வரூபத்தில் அடிப்படையான அம்சம் 'ஸத்யம், ஞானம், அனந்தம், ஆனந்தம், அமலம்' என்னும் இவைகளே இவைகள் ஸ்ரூபக, நிருபக, தர்மம் என்று கூறப்படுகிறது. அதைத் தெரிந்துகொள்ளாவிடில் ப்ரும்மத்தை தெரிந்துக்கொள்ள முடியாது. இவைகளைக் கொண்டு தான் இறை நிலை உணரப்படுகின்றது. மற்ற எல்லா அம்சங்களும் இறை நிலைக்குக் குணங்களாக அமைந்துள்ளன. சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளைச் செய்வது கூட இறைவனின் குணத்தினால் ஏற்பட்டுள்ள காரியமாக ஆகிறது. பகவானுக்குக் குணங்கள் உண்டு என்று ராமானுஜர் அங்கீகரித்து அந்தக் குணங்கள் அவனுக்கு விசேஷமாக அமைந்துள்ளன என்கிறார். அவனிடம் அவைகள் பொதுவாக இருந்தாலும் முழுவதும் நல்ல குணங்களே இருந்து வருவதாகக் கூறப்படுகிறது. இந்தக்

குணங்களும் கணக்கற்றன. இவை ''அனந்த கல்யாண குணங்கள்'' என்று ராமானுஜர் கூறுகிறார். குணங்கள் உண்டு என்று பொதுவாகச் சொன்னால் கெட்ட குணங்கள் சேர்ந்துவிடும் என்ற பயத்தால், கெட்ட குணங்கள் கிடையா என்று தனியாகச் சொல்லப்படுகிறது.''ஹேயப் பிரத்யனீகம்'' என்றும் சொல்லப்படுகிறது. உலக இயற்கையில் மனிதனிடம் நல்ல குணங்களையும் கெட்ட குணங்களையும் பார்க்கிறோம். ஆகவே பகவானுக்குக் கெட்ட குணங்கள் கிடையாது என்று தனியாக குறிப்பிடுவதால் தவறு இல்லை. இவ்வித நல்ல குணங்கள் கணக்கற்றவைகளாக இருந்தாலும் இவைகளில் சிறப்பானவை ஆறு குணங்கள் என்று ஒப்புக்கொள்கிறார்கள். ஞானம், பலம், ஐசுவர்யம், வீர்யம், தேஜஸ், சக்தி என்று இவைகள் சொல்லப்படுகின்றன. பகவானுடையக் குணங்களுக்கு அளவில்லை என்று கூறினாலும் ஞானம், சக்தி என்ற இரண்டு குணங்கள் முன்னிற்கின்றன. ஞானம் என்பது இயற்கை அளவில் உள்ள பகவானுடைய அறிவைத் தெரிவிக்கிறது. அறிவு வடிவில் பகவான் இருந்தாலும் அறிவு அவனுக்கு குணமாகவும் அமைந்துள்ளது. இது எப்பொழுதும் அளவற்றதாக இருக்கும்.

அறிவு வடிவிலுள்ள 'அவன் அறிவாளியாகவும் இருக்கிறான். இது ஈசுவரனிடத்தில் எப்போதும் இருக்கும், ஒரே நிலையில் உள்ளது. இதைச் செயல்படும்படிச் செய்யச் சக்தி ஆற்றல் வேண்டும் இந்த அறிவு ஆற்றல் இரண்டுக்கும் கட்டுப்பாடு இல்லாததினால் பகவான் அளவற்ற அறிவுள்ளவன் என்றும் அளவற்ற சக்தியுள்ளவன் என்றும் கூறப்படுகிறது. மனித உருவில் பகவானை ஒப்புக்கொண்டு அவனுக்கு அளவற்ற அறிவையும் அளவற்ற சக்தியையும் கொடுத்ததால் அவனுடைய பெருமை விளங்குகிறது. ஆன்ம வர்க்கங்கள் அவனையே அண்டி நிற்பதால் அவைகளுக்கு இவ்வளவு பெருமை கிடையாது என்பதும் தெரிகிறது. அதனால் ஆத்மா பரமாத்மாவை நெருங்கி அடைந்துதான் தன் பேற்றைப் பெறவேண்டும். அதற்காகச் சாத்திரங்கள் பகவானுக்கும், பெருமைக்கான குணங்கள் எவ்வளவு இருந்தாலும் ஜீவாத்மா அவனை நெருங்குவதற்கு அடிப்படையான சில குணங்களையும் சொல்லுகின்றன. அவற்றின் தலை சிறந்து விளங்குவது 'எளிமை' என்ற குலம் இதைப் பின்பற்றி வாத்ஸல்யம், காருண்யம் முதலான குணங்கள் வருகின்றன.

பஂடைப்புக்கு முன்னும் பின்னும் இறைநிலை

ஆனால் படைப்பு என்பது ப்ரகிருதி ஜீவாத்மா இவைகள் சம்பந்தப்பட்ட வரையில் மாறுபட்ட கருததில் இருந்து வருகிறது. இயற்கை சம்பந்தப்பட்ட வரை படைப்பு எனபது இயற்கையின் உருவத்தில் ஏற்படும் மாறுதலைத் தெரிவிக்கின்றது. ஜீவாத்துமா சம்பந்தப்பட்டவரை அறிவு, அவன் வடிவாக இருப்பதால் படைப்பில் உருவ மாறுதல் கிடையாது. ஆனால் சிந்தனையிலேயே ஆன்மா மாறுதலை அடைகிறான். அவ்விதமே இறைவன், உருவை அடைந்து மாறுதலை அடையாத ப்ரகிருதியோடும், சிந்தனையில் மாறுதல்களை அடையாத ஜீவாத்மாவோடும் இருப்பதுதான் ஸூக்ஷ்ம நிலை, இது படைப்புக்கு முன்னுள்ள நிலை ப்ரகிருதியோடு சேர்ந்துச் சிந்தனையளவில் மாறுதலை அடைவது படைப்பு, ஆன்மா ஒன்றில்லை இரண்டில்லை கணக்கற்றவை கணக்கற்ற ஆத்மாக்கள் எல்லாம் படைப்புக்கு முன்னால் கடவுளோடு நேரில் சம்பந்தப்பட்டு கடவுள் அம்சமாகவே இருந்து வருகின்றன.

படைப்புக் காலத்தில் இவை தனியாக ஒரு சரீரத்தை அடைந்து நிற்கின்றன, சரீரத்தை அடைந்த பிறகு கடவுளுக்கும் தனக்கும் உள்ள உறவை மறந்து ப்ரகிருதியோடு தனக்கும் ஏற்பட்டுள்ள உறவை மட்டும் ஆன்மா முக்கியமாகக் கொள்ளுகிறான். ஆத்மாவின் அறிவில் இந்த மாறுதல் ஏற்படுவது ஆத்மா சம்பந்தப்பட்ட வரையில் படைப்பினால் நிகழ்வதாகும். ப்ரகுருதி பலவித உருவத்தில் பலவித மாறுதல்களைப் படைப்பில் அடைகிறது, தனுபவனாதிகள் என்று இவை குறிப்பிடப்பட்டுகின்றன. உபநிடதங்கள் படைக்கப்பட்டுள்ள பொருள் தோறும் பகவான் உள்ளே நுழைந்து இருந்து வருகிறான் என்று கூறுகின்றன. உள்ளே நுழைந்தாலும் கூட பகவான் தன்னுடைய இயற்கையை விடுவதில்லை. உயர்ந்த வஸ்துக்களில் இருந்தாலும் தாழ்ந்த வஸ்துக்களில் இருந்தாலும் இடத்திற்குத் தகுந்தாற்போல் உள்ள ஏற்றத்தாழ்வுகளோ, தோஷங்களோ பகவானை அண்டுவதில்லை. இந்த இயற்கையோடு பகவான் எல்லா பொருள்களிலும் இருந்து வருகிறான். பொருட்களில் மாறுதல்கள் ஏற்படும் போதும் இவன் அவற்றோடு சென்றே வருகிறான். பகவான் தன்பாவத்தில் இயற்கைக்கு அப்பாற்பட்டவன், தன் இயற்கையை விடாமலே ப்ரகிருதியில் இருந்து வருகிறான். பகவான் எந்தக்காலத்திலும் ஜீவவாக்கம் ப்ரகிருதி இவைகளை விட்டு விலகி தனியாக இருப்பதில்லை படைப்புக்கு முன்னால் அவன் ஒருவனே இருக்கிறான்.

இயற்கையின் சூக்ஷ்மமும் ஆத்ம வர்க்கங்களும் பகவானுடன் இருந்து வருகின்றன. படைப்புக்குப் பிறகு பிரகிருதி பெரிதாக ஆகிப்பரிணாமத்தை அடைகிறது. ஜீவாத்மா அதன் உள்ளே புகுகிறான். பரமாத்மாவும் ஜீவனைப் பற்றி ப்ரகிருதியில் உள்ளே புகுகிறான். பகவான் ப்ரகிருதிக்கு அப்பாலிருப்பது போல் ப்ரகிருதிக்குள்ளேயும் இருத்து வருவதால் உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் பகவானாகவே ஆகிவிடுகின்றன பகவானுக்கு சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் இவைகளுக்குத் தேவையான எல்லா குணங்களும் இருக்கின்றனர். அந்தக் குணங்கள் அவ்வபோது பிரகாசத்தை அடைகின்றன, மற்ற குணங்களும் அவனிடம் இருந்தே வருகின்றன. அவன் இறை நிலையில் இதற்கு எப்போதும் சுபமாகவே இருப்பவன் உபாசிக்கத் தகுந்தவன் என்று பொருள்.

## இறைவனின் உருவம்

பகவானுக்கு எப்போதுமே அழகான உருவம் உண்டு என்று ராமானுசர் கூறுகிறார், ஆனால் இந்த உருவம் ஞானானந்த ஸ்வரூபமானது. எம்பெருமானை விளக்கும் காலத்தில் ஸ்வரூப, ரூப, குண, விபூதி, ஐசுவர்ய என்று ஆசாரியர்கள் சொல்லுகிறார்கள். ஸ்வரூபம் என்பது பகவானுடைய வடிவத்தைக் குறிக்கும் குணம் என்பது பகவானுடைய இயற்கையைக் குறிக்கும் ரூபம் என்று நல்ல குணங்களைக் குறிக்கும், விபூதி என்பது அவனுடைய மாண்பைக்குறிக்கும் ஐசுவர்யம் என்பது அவனுடைய செல்வத்தைக் குறிக்கும் இவ்விதம் உள்ள பகவான் உலகத்தைப் படைத்துக் காத்து

## சிருஷ்டி காலம்

அவ்விதமே சிருஷ்டி காலத்தில் பொருள்கள் தோறும் உட்புகுந்து உலகமாக ஆகிநிற்கிறான் உலகம் முழுவதும் அவனாகவே தோன்றுகிறது. ப்ரகிருதி ஜீவாத்மா இவை இரண்டும் அவனையே அண்டி நிற்பதால் அவைகளுக்குத் தனி இருப்பு கிடையாது பகவான் எதற்காக உலகைப் படைக்கிறான் எதற்காக உலகை அழிக்கிறான்? எல்லாம் அவனே அவனுக்காகவே செய்துக் கொள்கிறான்.

### போக விபூதி

இவ்விதமே தனக்கு மட்டுமே என்று வகுத்துக்கொண்டு ஓர் உலகத்தை வைத்துக் கொண்டிருக்கிறான். அது அவனுக்கு 'போக விபூதி' அதுதான் ஸ்ரீ வைகுந்தம் எனப்படுகிறது. மனித உருவில் இறைவனை ஆசாரியர்கள் ஒப்புக்கொண்டு இருப்பதால் தன் இயற்கைக்குத் தகுந்தாற்போலுள்ள மனைவி பரிவாரங்களோடு கூட இவன் அங்கு இருந்து வருகிறான்.

### உபய விபூதி நாயகன்

இந்த இரண்டு உலகங்களுக்கும் இயக்குபனாகக் கடவுள் இருப்பதனால் கடவுளை 'உபய விபூதி' நாயகன் என்று ஆசாரியர்கள் சொல்லுகிறார்கள், இந்த உலகத்தில் நடக்கும் காரியங்கள் ஜீவாத்மா அவன் செய்ய புண்ணிய பாபங்கள் இயற்கையின் நியதி இவைகளைப் பின்பற்றி நிற்பதனால் இங்கு நடக்கும் எந்தக் காரியமும் பகவானுக்கு லீலா ரசத்தையே உண்டுபண்ணுகிறது.

### அவதாரம்

இப்படி உலகத்தோடு விளையாடுவதோடு மட்டும் நிற்காமல் தன்னுடைய இயற்கையை விடாமலேதானும் பலவித மாறுதல்களை அடைகிறான். இதுதான் அவதாரம் என்று கூறப்படுகிறது. அவதாரம் என்பது சிருஷ்டி ஸ்திதி, சம்ஹாரம் இவைகளைச் செய்வதோடு தானும் பல உருவங்களை எடுத்துக் கொண்டு பல பெயர்களில் பிறப்பதாகும் இந்த அவதாரங்கள் ஐந்து விதமானவை இவை பர, வ்யூக, விபவ, ஹார்த்த, அர்ச்சை என்பன. அவதாரம் என்பது பகவான் கருணை காரணமாகச் செய்யும் கார்யம் பகவானுடைய கருணைதான் ஜீவாத்மாவிற்கு வேண்டியது. கருணைக் காரணமாக ஏற்படும் அவதாரங்கள் ஜீவவர்க்கத்தைப் பாதுகாக்கவே ஏற்படுகின்றன. ஸ்ரீவைகுந்தத்தில் தனியாக இருந்த கடவுளைக் கருணை விண்ணிலிருந்து இறங்கச் செய்கிறது. அதனாலேயே பகவானுடைய செயல்களில் பாதுகாத்தல் என்பது முக்கியமாக இருந்து வருகின்றது. பகவான் இரட்சிக்கிறான், தானாக்வே தனக்காகவே இரட்சிக்கிறான், எல்லோரையும் இரட்சிக்கிறான், எப்போதும் இரட்சிக்கிறான், எல்லா இடங்களிலும் இரட்சிக்கின்றான் எல்லா வழிகளிலும் இராட்சிக்கின்றான்,

எம்பெருமான் இரட்சிக்கத்தக்கவனாக இருந்தும் அதை அவன் பயன்படுத்திக் கொண்டிருக்க தயாராக இல்லை. இதனால் அவனைத் திருத்த வேண்டிய அவசியம் ஏற்படுகிறது அங்கு பகவான் அவனை திருத்திப்பணி கொள்ளுகிறான். கருணை என்பது பகவானுடையதாக இருந்தாலும் இயற்கை நியதிக்குட்பட்டே ஆகவேண்டும். இந்த நிலையில் தன் கருத்தை ஆன்ம வர்க்கம் மீறி நடந்தால் அவர்களை பகவான் தண்டிக்க வேண்டியிருக்கிறது. பகவான் 'தண்டநாயகன்' ஆனாலும் அளவற்ற கருணையுள்ளவன், எந்த விஷயத்தில் ஒன்றுக்கொன்று முரண்பட்டு நிற்கின்றனவோ அங்கு பகவான் தயை கொண்டு இயங்குகிறானோ? தண்டனை தத்துவத்தைக் கொண்டு இயங்குகிறானா என்ற கேள்வி பிறந்த காலத்தில் பகவான் தண்டனை தத்துவத்தைப் பயன் படுத்துவதே கிடையாது. அடியார்களிடத்தில் அவர்கள் தவறுதல்கள் செய்தாலும் பகவான் அவற்றைப் பொருட்படுத்துவதில்லை.

**பரம்**

கருணையைக் காரணமாகக் கொண்டு பகவான் செய்யும் அவதாரங்களில் முதல் அவதாரம் 'பரம்' என்ற அவதாரம் ஆகும். இதற்கு 'உயர்ந்தது' என்று பொருள் இது பகவானுடைய போக விபூதியான ஸ்ரீ வைகுந்தத்திலேயே இருப்பது இங்கு பகவான் திவ்யமான ரூபத்தோடு இருந்து வருகிறார். 'ஸ்ரீ', பூமி, நீலா போன்ற மனைவிகளோடு இருந்து வருகிறான் இந்த உருவம் பகவானுக்கு எப்போதும் இருக்கும் நித்ய சூரிகளும் பூமியிலிருந்து வைகுந்தத்தை அடைந்துள்ள பக்தர்களும் அனுபவிப்பதற்காக பகவான் எடுத்துள்ள திருமேனி இது.

**வியூகம்**

இரண்டாவதாக உள்ளது வியூகம் இங்கு பகவான் பிரிந்து நிற்கிறான். மூன்று விதமாகவோ, நான்கு விதமாகவோ நிற்கிறான். இவைகளுக்கு வாசுதேவ சங்கர்ஷண, ப்ரத்யும்நன் அனிருத்த என்று நான்கு பெயர்கள் உண்டு. வாசுதேவனுக்கு தனித்த நிலை கிடையாது என்று வைத்துக் கொண்டு மற்ற மூன்று வியூகங்களில் ஆறு குணங்களும் இருந்து வருகின்றன. ஆனால் ஒவ்வொரு ரூபத்திற்கும் இரண்டு குணங்கள் முக்கியமானவைகளாக இருக்கின்றன. ஞானம், பலம் என்பன சங்கர்ஷணனிடத்தில் முக்கியம் வாய்ந்தவை.

புராணங்களில் சொல்லப்படும் ப்ரம்மா விஷ்ணு ருத்திரன் என்ற மும்மூர்த்திகள் போன்றவை கேசவன் முதலான பன்னிரண்டு திருவுருவங்களும் வெவ்வேறு வழியில் வெவ்வேறு நோக்கமுள்ள வியூகங்கள்.

### விபவம்

விபவாவதாரம் என்ற அடுத்த அவதாரம் முப்பத்துக்கு மேற்பட்டுள்ளன. மச்ய, கூர்மதி, அவதாரங்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடு விஸ்தாரமான இதிகாசத்தோடு இருப்பதால் சிறப்பாகச் சொல்லப்படுகின்றன. பகவான் அண்டினவர்களைக் காப்பாற்றுவதற்காகத் தேவர்களிடையும் மனிதர்களிடையும், விளங்குகளிடையும் பிறக்கிறான் அந்த அவதாரத்திற்குத் தகுந்தாற்போல், இடத்திற்குத் தகுந்தாற்போல் வேண்டின குணங்களை வேண்டியபோது மறைத்தும், வேண்டியபோது வெளியிட்டும் விபவம் நடத்தும்.

### அந்தர்யாமி

யோகிகள் தியானம் செய்து தங்கள் இருதயத்தில் காண வேண்டும் என ஆசைப்பட்டு வேண்டினால் அவர்களுடைய வேண்டுகோளை நிறைவேற்ற அவர்களுடைய இருதயத்தில் அவர்களுக்கு மட்டும் புலப்படும்படி ஒரு உருவத்தை எடுக்கிறான். அதுதான் அந்தர்யாமி அவதாரம் என்பது.

### அர்ச்சை

பர, வியூக விபவாதிகளில் இறைவன் அடியார்கள் விரும்பியபடி மண்ணாலோ, பொன்னாலோ, கல்லாலோ, உலகத்தாலோ அவர்கள் செய்து வைத்த உருவத்திற்குத் தகுந்தாற்போல் ஒரு உருவத்தை எடுத்து அங்கு இறங்கி வருகிறான் இதுதான் ''அர்ச்சாவதாரம்'' என்பது மனோ வாக்குக் காயங்களால் நாம் செய்யும் வழிபாட்டை நேருக்கு நேராகப் பெற்றுக்கொள்வதற்காக இந்த அவதாரம் ஏற்பட்டுள்ளது.

### ஆன்மாவின் மூன்று வகை

ஆன்மாக்கள் மூன்று விதமானவர்கள் பத்தன், முக்தன், நித்யன் என்று இவர்கள் வகுக்கப்படுவர் சம்சாரி சேதனர்கள்

பக்தர்கள் பகவானுடைய கருணையினாலே ப்ரகிருதி சம்பந்தத்தை விளக்கிக்கொண்டு, மோட்சத்தை அடைந்தவர்கள் முக்தர்கள் ஸ்ரீ வைகுந்தத்திலேயே நித்தியமாக இருப்பவர்கள் நித்யர்கள். பத்தர்கள் தாங்கள் செய்த புண்ணிய பாவத்திற்குத் தகுந்தாற்போல் சுக துக்கங்களை அனுபவிப்பார்கள்.

## பிரகிருதி

ப்ரகிருதி என்பது ஜடமான உலகத்திற்கு மூலமாக இருப்பது அதற்கு சத்வ, ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கள் உண்டு. இவை சமமாக இருந்தால் ப்ரளயம் என்று கூறுகிறார்கள். ஏற்றத்தாழ்வுகள் இருந்தால் சிருஷ்டி என்று சொல்லுகிறார்கள். இது மகதம் அகங்காரம் ஐந்து ''தன்மாத்திரைகள்'' இவைகளாக வளர்ந்து மனிதனுடைய இந்திரியங்கள் மனம் சரீரம் இவையாகப் பரிணமித்து வெளியுலகமாகவும், பரிணமிக்கிறது. இது ஈசுவரனுக்கு லீலாரசத்தை உண்டாக்குகின்றது.

## தத்துவ ஞானத்தின் பயன்

இவ்விதம் தத்துவ ஞானம் பிறந்தவன் விஷ்ணுதான் பரதேவதை என்ற உதவியைப் பெறவேண்டும். மற்ற தேவதைகளோடு இவனை ஒன்றாக நினைக்கக்கூடாது. மும்மூர்த்திகளில் ஒருவனாகவும் நினைக்கக்கூடாது. மும்மூர்த்திகளுக்கும் மேலானவனாக நினைத்து மும்மூர்த்திகளும் அவனுடைய அம்சம் என்றும் நினைக்கக்கூடாது மோட்சத்தை அடையவேண்டும் என ஆசைப்படுபவனுக்கு மோட்சத்தைக் கொடுக்கும் சக்தியுள்ள விஷ்ணுதான் பிரதேவதை என்ற கொள்கைவேண்டும். மற்றவர்கள் யாருக்கும் மோட்சத்தைத் தர அதிகாரம் கிடையாது.

இப்படி தத்வஞானம் பிறந்தவன் தன்னுடைய அகங்காரங்களை மாற்றிககொள்கிறான். சரீரம் அதைச் சேர்ந்த பொருள்களிடம வரும அகங்காரங்களையும தேகத்தைக் காட்டிலும் சேர்ப்பட்டுள்ள பொருள்களிலுள்ள மமகாரங்களை பிறருக்கு அடிமை என்பதாலும் எனக்கு மறறவன அடிமை என்பதாலும் வரக்கூடிய அகங்கார மமகாரங்களையும் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காக ஏற்படக்கூடிய

செயல்கள் வரையிலும் வரக்கூடிய தன்னுடைய அகங்கார மமகாரங்களையும் உபயாந்தரங்களில் வரக்கூடிய ஆசையையும் அடியோடு மறந்து பகவானை அடையவேண்டும் என்று பகவானையே நினைக்கிறான் யாருக்கு உடனே மோட்சம் வேண்டும் என்று ஆசை வருகிறதோ, அவன் தாமதித்து மோட்சத்தைக் கொடுக்கும் பக்தியை விட்டுப் பிரபக்தியை கைப்பற்றுகிறான். கர்மயோகம் ஞானயோகம் இவைகளை விட்டுப் பிரபத்தியைப் பின்பற்றுகிறான்.

## பிரபத்தி மார்க்கம்

இந்த ப்ரபத்தி என்பது ஐந்து அங்கங்கள் அல்லது ஆறு அங்கங்களைக் கொண்டது ஆபரணத்தை உடையவனுக்கு அவன் தானே இரட்சித்துப் பூசைக் கொடுக்குமாப்போல ஆத்ம நிட்ஷேபம் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதிலும் தனக்கு அதிகாரம் கிடையாது. தன்னால் ஆகக் கூடிய தொன்றில்லை என்று பதேப்ரபத்தியன் அடிப்படை சில ஆசாரியர்கள் ப்ரபத்தி என்று செய்யவேண்டியது கிடையாது.

## பேரின்பம் பெறுவது

ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் மோட்சம் என்ற சொல்லுக்குப் பொருள் வேறு மோட்ச நிலையும் தனிச் சிறப்போடு விளங்குகிறது. மோட்சம் என்ற சொல் வெறும் விடுதலையைச் சொல்லவில்லை. ப்ரகிருதியிலிருந்து விடுபட்டு பகவானை அடைவதையும் குறிப்பிடுகிறது. சரீரத்தை விட்டுவிட்டு அர்கிநாதி மார்க்கம் வழியாக ஸ்ரீ வைகுண்டம் போய் அங்கு எம்பெருமானை அனுபவிப்பதே மோட்ச நிலை மனதின் நிலை இல்லை தேச விசேஷமான ஸ்ரீ வைகுண்டம் போய் முடிவில்லாத பகவதநுபவத்தைப் பெறுவதே, அனுபவத்தின் விளைவாக பகவத்கைங்கர்யம் பண்ணுகிறான்.

பகவானின் ஸ்வரூபம், குணம், விபவ சேஷ்டிதம் இவை போக்யமாகின்றன. ஸ்ரீ வைகுண்டமும் போக்யமாகிறது. ப்ரமபதத்தை அடைந்தான் எனபது சுருக்கமான விளக்கம் பரமபதம் என்ற சொல்லால் ஸ்ரீ வைகுண்டம் என்ற இடம் பகவான் அவனுடைய ஸ்வரூப, அனுபவ குணங்கள் அவனை அனுபவிக்கும் ஜீவாத்மாவின் ஸ்வரூபம் இவைகள் பரமபதம் என்ற சொல்லால் சொல்லப்படுகின்றன. ஸ்ரீ வைகுண்டம்

இயற்கையான உலகத்திற்கு அப்பாலிருக்கும் நாடு ஆகம முறைப்படி இங்கு தனி ஊர் என்ற முறையில் மண்டபம், கோபுரவாசல், கூடங்கள் முதலியன உண்டு பல வித நூல்கள் பலவிதமான ஸ்ரீ வைகுண்டத்தை வர்ணிக்கின்றன, பொது வான பெயர் 'பரமபதம்' என்பது ஆகும்.

**மோட்சத்தின் இடையூறுகள்**

மோட்சத்தை இதுவரை ஆன்மா அடையாமல் போனதற்கு இடையூறு என்ன என்பதை ஆசாரியர்கள் விளக்குகிறார்கள். ஜீவாத்மா பரமாத்மாவுடன் கூட இருந்தவன். அவனுடைய ஆணையை மீறியதால் பகவானுடைய கட்டளைக்கு இலக்காகிப் பகவானை விட்டு விலகினான் ஆணையை மீறியதால் ஒரு பயபாவம் இவனுடைய அறிவை மறைக்கிறது. அறிவு மறைந்ததால் அஞ்ஞானம் ஏற்படுகிறது தன்னை பகவானோடு சம்பந்தமில்லாத தனிப் பொருளாகக் கொள்கிறான் அதனால் சாத்திரங்கள் விலக்கியவைகளைச் செய்கிறான். இப்படிப் பல தடவைகள் செய்து வேற்றுமை வாசனையைப் பெறுகிறான் ஒருகால் நல்லறிவு இருந்தாலும், அல்லறிவு மற்றொரு ஆன்மாவை அடையச் செய்கிறது. அவர்களுடைய தொடர்பு வீடுபேற்றை விடுத்து ஏனைய இன்ப ருசியை உண்டுபண்ணும். இதற்கும் மேல் பேரின்ப முண்டு என்ற அறிவு வளர்ந்தாலும் தெய்வத்தினிடம் இயற்கை உறவு இல்லாததால் அல்லறிவு ஆத்மாவை பகவானை அனுபவிக்கும் வழியைவிட்டு மற்ற எல்லா வழிகளையும் அனுபவிக்க செய்யும். பகவானுடனேயே எப்பொழுதும்கூட இருந்த ஆத்மா எப்பொழுது பகவா னுடைய ஆணையை மீறினான் என்பது விளக்கமுடியாததாகும். இவற்றால் ஆன்மா இறைவனை அடைவதில் ஏற்படும் தடையை நீக்குமாறும், தடையை நீக்கினால் கிடைக்கும் மோட்சத்தின் சிறப்பும் ஒருவாறு உணர்த்தப்பட்டன. இனி ஜீவாத்மா பரமாத்மா தொடர்பையும் சிறிது கூறி இப்பகுதியை நிறைப்படுத்துவோம் என்பது ஆய்வாளரின் கருத்து.

பகவானுக்கு ஜீவாத்வா அடிமை என்ற கருத்து வைணவ சம்பிரதாயத்தின் அடிப்படையானது இந்த அடிமைத்தனம் இயற்கையாகவே அமைந்துள்ளது. ஜீவாத்மா, பரமாத்மா இருவருக்கும் உள்ள உடல் உயிர் என்ற நிலையில் இருப்ப மட்டுமிருந்தால் இது இயற்கையான உறவாகவே நிற்கும். ஆனால் இருவரும் அறிவாளிகளாக இருப்பதால் யஜமானன்,

அடிமை என்ற நிலையில் இயற்கையான உறவு உருவாகிறது. ஜீவாத்மா தன்னுடைய தாழ்வையும் பகவானுடைய மேன்மையையும் கண்டுதான் அடிமையாகிறான் என்று சொல்ல வேண்டி வருகிறது.

### தென்கலை வடகலை நாமங்கள்

இன்று இருவைணவக் கொள்கைகளைச் சேர்ந்தவர்களும் நெற்றியிலும் உடம்பிலும் அடையாள மிட்டுக் கொள்கிறார்கள். தென்கலை மரபைச் சேர்ந்தவர்கள் ஒரு விதமாகவும், வடகலை மரபைச் சேர்ந்தவர்கள் ஒரு விதமாகவும் போட்டுக் கொள்ளுகிறார்கள். அடையாளத்தில் மாறுபாடு இருந்தாலும் வெண் மண்ணையும் மஞ்சள் அல்லது சிகப்பாக ஆக்கப் பட்டுள்ள மஞ்சள் பொடியையும் இட்டுக்கொள்கிறார்கள். வெண் மண்ணைத் 'திருமண்' என்றும் சிகப்பாகவோ மஞ்சளாகவோ இருப்பதை 'ஸ்ரீசூர்ணம்' என்றும் சொல்லி வருகிறார்கள் இந்த இரண்டிற்கும் பலவிதப் பொருள்களையும் கருத்துக்களையும் கூறுவதை நாம் பார்க்கிறோம்.

ஒரு ஆகம வசனம் வெண்மை கலப்படமில்லாததான தெய்வத்தன்மை என்பதையும் மஞ்சள் அல்லது சிகப்பு மகாலட்சுமியையும் குறிக்கும் என்றும் அவ்விருவர்களையும் சேர்ந்தவர்கள் என்பதற்கு அடையாளமாக வேறு வேறு திறத்தில் குறிகளை இடுவதாகக் குறிக்கிறது.

இவ்வித அடையாளம் போடுவது தமிழ் நாட்டு வைணவத்தின் ஒழுக்கத்தில் சிறந்த இடத்தைப் பெற்று விட்டது. மேலும் இவ்வித அடையாளமிடுவது மனித உடம்பில் மட்டுமல்லாமல் கோயில்களில் உள்ள கடவுளின் உருவத்திலும் இருக்க வேண்டியதாக சொல்லப்படுவதால் எந்தக் கொள்கையோடு இந்தக்குறியை மனிதன் போட்டுக் கொள்ளுகிறான், என்பதைக் கவனிப்பது அவசியம் இந்தக்குறி சம்பந்தமாக கல்வெட்டுச் சான்றுகள் கிடையாது போனாலும் சமீப காலத்தில் ஸ்ரீரங்கம் ரங்கநாதன் மூலபிம்பத்திற்கு ஏற்பட்ட விபத்தின் போது பிம்பத்தின் நிஜ உருவைப் பார்க்கும் காலத்தில் ஓர் உண்மை வெளியாயிற்று. பாரத நாட்டில் மற்ற இடங்களில் இருந்து வரும் வைணவர்கள் ஒவ்வொரு உருவம் உள்ள அடையாளத்தைப் போட்டுக் கொள்வதால் இந்தக்குறி எப்படி

வேண்டுமானாலும் இருக்கலாம் என்பது தெரிகிறது. தமிழ் நாட்டு வைணவர்கள் இட்டுக்கொள்ளும் குறிக்குத் தமிழ் நாட்டோடு வைணவத்தோடு தான் தொடர்பு இருக்கிறது என்பது வெளியாகிறது. தங்கள் நூலில் இருவைணவ மரபைச் சேர்ந்த ஆச்சாரியர்களும் இதைப்பற்றிச் சர்ச்சை செய்யாத தனால் அவர்கள் காலத்தில் நெற்றிக்கு குறியிட்டுக் கொள் வதில் கருத்து வேற்றுமை இல்லை என்பது ஏற்படுகிறது. தம் முடைய நூலில் வைணவர்கள் எந்தக்குறியை இடவேண்டும். என்று சர்ச்சை செய்யும் காலத்தில் பலமேற் கொள்கைகளை எடுத்து விளக்குகிறார்கள். அவைகளைப் பார்த்தால் பல விதக் குறிகள் அந்தக்காலத்தில் வைணவர்களிடையே இருந் தது என்பது தெரிய வருகிறது வேதாந்த தேசிகர் 'ஊர்த்துவ புரண்டம் என்ற குறிதான் மோட்சத்தைக் கொடுக்கும் என்றும் கூறுகிறார்.

முடிவாக பகவானுடைய திருவடிபோல் நெற்றிக்குறி அமைய வேண்டும் என்ற கருத்தை வற்புறுத்துகிறார் பகவானுடைய பாதம் போன்ற குறியிலும் இடைவெளி வேண்டும் என்றும் கூறுகிறார். மகாலட்சுமியை அர்ச்சனை செய்து அவருடைய பிரசாதமாகக் கிடைத்ததை நடுவில் வைத்துக்கொள்ள வேண்டும் என்பது ஏற்படுகின்றது இன்று திருமண் என்று சிலரால் வழங்கப்படுகிறது. ஆனாம் இது குறியின் மூலப் பொருளைக் குறிக்குமே தவிர குறியின் உருவைக் குறிப்பிடாது. குறியின் பெயரை நாமம் என்று குறிப்பிடும் பழக்கமும் இருந்து வருகிறது. ஆனால் இந்தச் சொல்லும் குறியின் உருவைக் குறிப்பிடவில்லை. ஆனால் பன்னிரண்டு குறிகளுக்கும் கேசவன் முதலாக பன்னிரண்டு பெயர்கள் இருப்பதால் அந்த பெயரைச் சொல்லி அந்த குறி கள் இடப்படுவதால் குறிக்கே நாமம் என்று பெயரிட்டு விட்டார்கள். இந்தக் குறிக்கு வடமொழியில் 'ஊர்த்துவ புண்டரம்' என்று ஒரு பெயர் இருந்து வருகிறது. சிறிதளவு குறியின் உருவை இது குறிப்பிடுகிறது என்று ஒப்புக்கொள் ளலாம் ஊர்த்துவ புண்டரம்' என்ற சொல் தாமரைப்பூவின் இதழைக் கருத்தில் கொண்டு ஏற்பட்ட பெயர் இதனால் குறியும் அவ்விதம் இருக்கலாம் என்று நினைக்க இடம் உண்டு. தமிழ்நாட்டு தென்கலை, வடகலை நாமத்தை இடுபவர்கள் இதை திலகம் என்றுதான் கூறுகிறார்கள். அதனாலேயே நெற்றியில் குறுக்காக அடையாளமிட்டாலும்

'த்ரியக் புண்டரம்' என்று தான் சொல்கிறார்கள் மண், சந்தனம் முதலியப் பொருட்கள் குறியிடப்பொருளாகச் சொல்லப்படுகின்றன. ஆகவே நெற்றியில் குறியிடுவது என்பது பல சிந்தனையாளர்களின் கருத்தில் உருவாகிக் காலப்போக்கில் பலவித மாறுதல்களை அடைந்து இன்று இவ்விதம் இருந்து வருகிறது.

## வைணவத்தில் பகவானின் பெயர்களுக்குள் இடம்

''ஒருவனே தெய்வம்'' ''மோட்சமே குறிக்கோள்'' ''அவனை அடைவதே மோட்சம்'' என்று எங்கும் ஒருமையை வற்புறுத்திய வைணவம் கடவுளுடையப் பெயரில் மட்டும் ஒருமையை ஏன் வற்புறுத்தாமல் விட்டு விட்டது. வைணவம் என்ற பெயர் விஷ்ணுவையே முழு முதற் கடவுள் என்று தெரிவிக்கின்றது. ஆனால் நாராயணன் என்ற பெயர் உள்ள கடவுள்தான் எல்லோருக்கும் மேம்பட்ட தெய்வம் என்ற கருத்து சம்பிரதாய நூல்களில் வற்புறுத்தப்படுகிறது. விஷ்ணு என்ற சொல் வேறு நாராயணன் என்ற சொல் வேறு; அடிப்படையில் உள்ள இந்த வேற்றுமை ஒரு புறமிருக்க வைணவ சம்பிரதாயத்திற்கு தலைமை தெய்வமாக வாசுதேவன் என்ற பெயருள்ள தெய்வத்தை அளித்துள்ளது.

## ஆசாரியர்களின் வழி

வைணவ ஆசாரியர்கள் தங்களுடைய பரதேவதைக்குப் பல பெயர்கள் பல உருவங்கள் இருப்பதை அங்கீகரிக்காமல் பேசவில்லை. ஆனால் பகவானுக்குள்ள பெயர்களில் நாராயணன் என்ற பெயரே மிகவும் பொருத்தம் உள்ளது. என்று பொருக்கி எடுத்துக்கொண்டுள்ளார்கள் இந்த பெயர் ஜீவாத்மா பிரகிருதி இவைகளால் ஆன உலகத்திற்கும் பகவானுக்கும் உள்ள உறவை சேர்த்துச் சொல்லுவதால் இதற்கு முக்கியத்துவம் கொடுத்து விட்டார்கள். ஸ்ரீ வேதாந்த தேசிகர் ரகஸ்யத்ரய சாரத்தில் பகவானுக்குள்ள பலவித பெயர்களில் விஷ்ணு நாராயணன் வாசுதேவன் என்ற மூன்று பெயர்கள் தான் பொருத்தம் உள்ளவை என்று கூறி அவன் எங்கும் இருக்கிறான். அவனிடம் உலகம் அடங்குகிறது என்ற கருத்திற்கு இந்த மூன்று பெயர்கள்தான் இணைந்து வருகின்றன. இவைகளுள் நாராயணன் என்ற சொல்லைத்தான் பெரியோர்கள் எடுத்துக்கொண்டு விட்டார்கள் என்று சொல்கிறார். நாரா

யணன் என்ற சொல்லும் கடவுள் என்ற சொல்லும் கருத்தள வில் ஒற்றுமையோடு இருப்பது கவனிக்கத்தக்கது. நாராயணன் என்ற சொல்லாலேயே கடவுளை வழிபட வேண் டும் என்றும் வற்புறுத்திப் பேசுகிறார். ஒரே நாராயண னையே பல கருத்துக்களைக் கொண்டு அவரவர்கள் பலபெய ரிட்டு அழைக்கின்றார்கள். அவரவர்களுக்கு எந்த உருவத்தில் ஈடுபாடோ அந்த உருவத்தை விரும்பி வழிபடுகிறார்கள்.

பிற பெயர்கள்

வேதத்திலிருந்து விஷ்ணு என்ற பெயர் வந்தாலும் பாஞ்சராத்ர ஆகமத்திலிருந்து வாசுதேவன் சங்கர்ஷணன் ப்ரத்யும்நன், அநிருத்தன் என்ற பெயர்கள் கிடைக்கின்றன, அவ்விதமே கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன் திரிவிக்ரமன், வாமனன், ஸ்ரீதரன், ரிஷிகேசன், பத்மநாபன், தாமோதரன் என்ற 12 எண்ணிக்கை யுள்ள மற்றொரு வகைப் பெயர்களும் வருகின்றன. இதைத் தவிர பகவான் என்ற ஒரு புதிதான சொல்லும் ஆகமங்கள் புராணங்கள் மூலமும் வருகிறது. இவைகளில் வாசுதேவன், சங்கர்ஷணன் ப்ரத்யும்நன், அநிருத்தன் என்ற பெயர்களை ஆகமப்படி வியூகங்களாகவே ஒப்புக்கொண்டு அந்தந்த பெயருக்குத் தகுந்தாற்போல் உருவங்களும் ஆயுதங்களும் பத்னிகளும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. ஒரே பகவானே தன்னை இவ்விதம் பல வழிகளில் வகுத்துக்கொண்டிருப்பதால் இது வியூகம் என்று சொல்லப்படுகிறது. ''ராமாவதாரம்'' கிருஷ்ணாவதாரம் போன்ற உருவங்களில் காணப்படும் மாறுதல்களும் பெயர்களில் காணப்படும் மாறுதல்களும் அவ தாரப்பெயர்கள் என்று சொல்லப்படுகின்றன. இங்கு வேறு வேறு உருவத்தை கடவுள் அப்போதைக்கப்போது எடுப்பதும், அந்தந்த அவதாரம் தனியாக நிற்பதும் கவனிக்கத் தக்கது.

பகவான் என்ற பெயர்

பாஞ்சராத்ர ஆகம சம்பிரதாயமே பாகவத சம்பிரதாயம் என்று கூறப்படுகிறது. வைணவர்களை பாகவதர்கள் என்றும் குறிப்பிடுகிறோம். பாகவதம் என்ற பெயரில் விஷ்ணுவின் பெருமையை விளக்கும் நூலும் இருந்து வருகிறது. பல இடங்களில் பகவான் என்ற சொல்லும் விஷ்ணுவோடு சேர்த்துச் சொல்லப்படுகிறது. இந்த சொல் எங்கிருந்து

வருகிறது. பாஞ்சராத்ர ஆகமத்திலும் பகவான் என்ற சொல்லுக்கு விளக்கம் கூறப்படுகிறது. விஷ்ணு புராணத்திலும் பகவான் என்ற சொல்லை விஷ்ணுவோடு சம்பந்தப் படுத்தி விளக்கம் கூறப்படுகிறது. அது ப-க-வ-ந் என்று சொல்லின் எழுத்துக்களைப் பிரித்துக்கொண்டு விரிவாகப் பொருள் கூறுகின்றது.

பகவான் என்ற சொல் வேதத்திலேயே காணப்படுகிறது. 'பகன்' என்ற பெயரிலேயே ஒரு தேவதையும், இருந்து வருகிறான் பொதுவாகப் பார்க்குமிடத்து பகவான் என்ற சொல் சகல சௌபாக்கியமும் நிறைந்தவன் என்ற பொருளைக் கொண்டது என்று தெரிகிறது. லட்சுமி என்ற சொல் போல் பகவான் என்ற சொல்லுக்கும் கருத்தளவிலேயே முக்கியத்துவம் உண்டு என்று தெரிகிறது. இது தெய்வங்களுக்கும் பெரியோர்களுக்கும் அடைமொழியாகவும் இன்றுவரை பயன் படுத்தப்படுகிறது.

### கடவுள் இலக்கணம்

வேதத்தின் தெய்வக் கொள்கையை விளக்க ஆரம்பித்த பிரம்ம சூத்திரக்காரர் படைப்பு, பாதுகாத்தல் அழித்தல் இவைகளை யார் செய்கிறாரோ அவர்தான் முழு முதற் கடவுள் என்று கூறினார். இதை எல்லோரும் இலக்கணமாக ஒப்புக்கொண்டுள்ளார்கள். முத்தொழில்களோடு ஆகமங்கள் இரண்டு அதிகப்படியான தொழில்களையும் சேர்த்துக் கொண்டன. உலகம் கடவுளின் உருவே என்ற கருத்துக்கு இது போதாதனால் இந்த இலக்கணத்தை வைத்துக்கொண்டு ''உலகம் எங்கிருந்து வருகிறதோ'' ''எதனால் உலகம் இருந்து வருகிறதோ'' ''முடிவில் உலகம் எங்கு முடிவடைகிறதோ'' அது கடவுள் என்ற இலக்கணத்தையும் சேர்த்தார்கள். இந்த இலக்கணம் உபநிஷத்தின் கருத்துக்களை அடிப் படையாகக் கொண்டது. மண்ணிலிருந்து மண் குடம் உருவாகிறது. குடம் உடைந்தால் மறுபடியும் மண்ணாகவே ஆகிவிடுகிறது; ஆக மண்ணைத்தவிர குடத்தில் வேறு ஒன்றும் கிடையாது என்பது தெளிவாகிறது. மேலும் பகவானுடைய அடிப்படையான தத்துவத்தைப் பற்றி பேசும் கால் சத்தியம், ஞானம், ஆனந்தம் இவை கடவுளின் இயற்கைக்கு அடிப்படை என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. முத்தொழில்களை ஒருவரிடமே வைக்கக்கூடாது என்ற கருத்து புராணங்களில் வளரவே முத்தொழில்களுக்கும் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன்

என்ற மும்மூர்த்திகள் சொல்லப்பட்டுள்ளார்கள். ஆனால் மும்மூர்த்திகளிடையில் உள்ள விஷ்ணு சிவன் இருவர்களை முழு முதற் கடவுளாக வைணவர்களும் சைவர்களும் ஒப்புக்கொள்கிறார்கள். படைத்தல், காத்தல், அழித்தல் உலகமாக ஆகுவது போன்ற இலக்கணங்களும் சத்வம், ஞானம், ஆனந்தம், என்ற சொரூபமும் சிவபெருமானை வழிபடுபவர்களுக்கும் விஷ்ணுவை வழிபடுபவர்களுக்கும் பொதுவாகயிருப்பதால் இரண்டு மதங்களின் கருத்தளவில் உள்ள ஒற்றுமை நன்கு வெளியாகிறது. புராணங்களிலோ, வேதங்களிலோ சொல்லப் படும் அக்னி, இந்திரன் போன்ற தெய்வங்கள் நாராயணனுக்கு பரிவாரங்களாக சொல்லப்படுகின்றனர். அவ்விதமே கடவுள் இலக்கணத்தோடு பொருந்தியுள்ள சொல் எந்தப் பெயரைக் குறிப்பிட்டாலும் நாராயணனையே குறிப்பிடுகிறது என்று வைணவர்கள் கருதுகிறார்கள். எல்லோருக்கும் உள்ளிருந்து ஆட்சி புரியும் (அந்தர்யாமி) கடவுளாக நாராயணனை ராமானுசர் ஒப்புவதால் கடவுள் இலக்கணம் இல்லாத இடங்களிலும் அந்தந்த தெய்வங்க மூலம் நாராயணன் தான் வழிபடப்படுகிறான் என்று சொல்லப்படுகிறது. இதனால் வைணவர்கள் விஷ்ணு அல்லாதவர்களை வழிபட வழிகூறி ஒற்றுமையை காப்பாற்றி விட்டார்கள்.

## கீதைச் செய்தி

கீதையில் பகவான் யார், எந்தப் பெயருள்ள தெய்வத்தை உபாசித்தாலும் தான் எங்குமிருப்பதால் தன்னையே தான் அவர்கள் உபாசிப்பதாக கொள்ளுகிறேன் என்று கூறுகிறார். இதுவும் ஒரு வழியில் ஒரே தெய்வம் என்ற கொள்கையுடன் நெருங்கி நிற்கிறது. ஆனால் இங்கு பகவான் தன்னுடைய பெயரை குறிப்பிடாமல் இருப்பது கவனிக்கத்தக்கது, அது மட்டுமல்லாமல் ஆதித்தியர்களுள் தான் விஷ்ணுவாக இருப்பதாக கூறுகிறார். இதனால் வாசுதேவன் என்ற பெயரும் விஷ்ணு என்ற பெயரும் தனித்து நிற்பது வெளியாகிறது. வாசுதேவன் என்ற பெயருள்ள ஒரு தெய்வம் இருந்ததாக வியாகரண மகா பாஷ்யக்காரர் பதஞ்ஜலி கூறுகிறார். கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த சைஷாவின் 'திரிபிடாகம்' என்ற பௌத்த மத நூல் கீதையில் காணப்படும் பத்தாவது அத்யாயத்தின் கருக்கத்தை வெளியிட்டு நாராயண சாஸ்திரியினுடையது என்று கூறுகிறது 'சாஸ்திரி' என்ற சொல்லுக்கு என்ன பொருளிலிருந்தாலும்

கீதையை நாராயணன் தான் கூறியுள்ளான் என்பது இதனால் வெளியாகிறது.

**விஷ்ணு சகஸ்ரநாமம்**

விஷ்ணு சகஸ்ரநாமம் ஆயிரம் பெயர்களைக் கொண்டது. ஆயிரம் பெயர்களில் ஆயிரம் கருத்துக்கள் அடங்கியுள்ளன. பகவானுடைய பெயர்களைச் சொல்லி அவனிடமுள்ள குணங்களை அனுபவிக்கவே சகஸ்ரநாமம் ஏற்பட்டது. ஒவ்வொரு பெயரையும் சொல்லி அதன் அடிப்படையான கருத்துக்களைப் பக்தர்கள் அனுபவிக்கிறார்கள். ஆங்காங்கு தனித் தனியாக ரிஷிகளிடத்திலிருந்து வந்த பெயர்களை வியாசர் ஒன்று சேர்த்துள்ளார் என்று தெரிகிறது. இங்குள்ள சொற்கள் சகஸ்ரநாயம் என்ற நூலில் முதல் வேற்றுமையிலேயே அமைந்திருக்கின்றன. பிற்காலத்தவர்கள் இதை அர்ச்சனைக்குப் பயன்படுத்த நம, என்ற சொல்லையும் சேர்த்து சொற்களை நான்காவது வேற்றுமையோடு மாற்றி விட்டார்கள் அர்ச்சனையாக சகஸ்ரநாமம் ஏற்படவில்லை, அனுபவத்திற்கும் தியானத்திற்கும் தான் ஏற்பட்டது.

**ஆழ்வார்கள் கொடுக்கும் பெயர்கள**

அவ்விதமே பகவானை அனுபவிக்க முற்பட்ட ஆழ்வார்கள் தங்களுடைய பாடல்களில் அன்பு மேலிட்டால் பகவானை பல பெயரிட்டு அழைக்கிறார்கள். இங்கு காணப்படும் பெயர்கள் விஷ்ணுவினுடைய சொரூபம் (இயற்கை) ரூபம் (உருவம்) குணம் பெருமை லீலை இவைகளை அடிப்படையாகக் கொண்டும் நிற்கின்றன. இங்கும் கருத்தளவில் பெயர்கள் வருவதைப் பார்க்கிறோம். விஷ்ணு சகஸ்ரநாமம் போல் இவைகளும் பல பெயர்களுக்கு இடம் கொடுக்கின்றன. ஆக தெய்வக் கொள்கையைக் கருத்தளவில் வளர்த்து அதற்கு ஒரு பெயரைக் கொடுத்து மற்ற பெயர்களையும், குறிப்பிட்ட பெயர்களோடு ஒன்று படுத்தி பல பெயருடைய மற்ற தெய்வங்களையும் இவைகளுக்குள்ளே உள்ளடக்கி அந்த முழு முதற் கடவுள் நாராயணன் என்று வைணவம் கூறுகிறது.

**சில சொற்களின் விளக்கம்**

**மதம் :** அறிவிற்கு அப்பால் உள்ள ஒன்றை ஒப்பிட்டு அதற்கும் தனக்கும் உள்ள உறவை உணர்ந்து செயல்பட வேண்டிய முறைகளை வகுக்கும் தத்துவம்.

வேதம் : இந்துக்களின் மத வேதாந்த கருத்துக்களுக்கு மூல நூலாகவும், புனித நூலாகவும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இது இரு வகையானது. மந்திரம், பிராம்மணம், என்பதாகும். மந்திரம் வழிபாட்டிற்காக கையாளப்படும் வாக்கியங்கள். பிராம்மணம் வழிபாட்டு வகையை வகுப்பது. மந்திரம் ரிக், யசூஸ் சாமம் என்று வகையானது. 'ரிக்' செய்யுள் நடையில் அமைந்து கடவுளைப் புகழ்ந்து வழிபட உதவுகிறது. யசூஸ் வேள்விகளை செய்யுங்காலத்தில் சொல்லவேண்டிய வசன நடை உள்ள வாக்கியங்கள். சாமம், இசையுடன் இணைந்துள்ள ரிக்குகள் மந்திரங்கள் மூன்று வகையாக இருந்தாலும் வேதம் நான்கு விதமாக நிற்கிறது. ரிக் வேதம், யசூர் வேதம், சாம வேதம் அதர்வண வேதம் என்று நான்கு வகையானது. மந்திரங்கள் மூன்று விதமாக இருந்தாலும் சாந்தி, புஷ்டி, இவைகளை அடைய மனித வர்க்கத்திற்கு உதவி செய்யும் மந்திரங்கள், அதர்வ மந்திரங்கள் என்று சொல்லப்படுகின்றன. இவை அதர்வ வேதத்தில் தனியாகத் தொகுக்கப்பட்டுள்ளன. மற்ற மூன்று வேதங்களில் கடவுளை வழிபடவும் வேள்விக்கான மந்திரங்களும் பிராம்மணங்களும் தொகுக்கப்பட்டுள்ளன.

**யுகங்கள் பிரளயம்**

இந்து மத நம்பிக்கைப்படி உலகம் அநாதியானது. முடிவும் இல்லாதது. ஆனால் அப்போதைக்கு அப்போது ஓர் உருவத்தை அடைந்து மறைவது, நீரிலிருந்து நிலம் உருவாகிறது. பண்பாடும் உருவாகிறது. உருவான நிலம் சில காலம் நிலத்தில் செடி கொடிகள் உண்டாகி மனித வர்க்கமும் உருவாகிறது. இருந்து மறைந்து விடுகிறது. அப்போது தண்ணீர்தான் மிஞ்சியிருக்கிறது. இதைப் பிரளயம் என்று சொல்லப்படுகிறது. உலகமே நீரில் மூழ்கி இருக்கும் காலத்தை பிரளயம் என்று சொல்கிறோம்.

'பிரளயம்' என்ற சொல்லுக்கு 'அடங்குமிடம்' என்று பொருள். பிராணி வர்க்கங்களோடு நிலம் நீரில் அடங்கி விடுவதால் பிரளயம் என்று சொல்லப்படுகிறது. ஒரு தடவை நீரிலிருந்து நிலம் உருவாகி அசைவன, அசையாதென்ப ஆகிய பொருள்களும் வளர்ந்து மனித வர்க்கமும், வளர்ந்து. மனிதப் பண்பாடு வளருங்காலத்தை யுகம் என்று சொல்லுகின்றோம். கிருதாயுகம், த்ரேதாயுகம், துவாரயுகம், கலியுகம் என்று நான்கு வகையானது. கிருதாயுகத்தில் நூற்றுக்கு நூறு நற்காரியங்கள் நடக்கும். த்ரேதா யுகத்தில் 75 பங்கு

நற்காரியமும், துவவாபரயுகத்தில் 50 பங்கு நற்காரியமும், கலியுகத்தில் 25 பங்கு நற்காரியமும் நடக்கும். மனித பண்பாட்டின் உச்ச நிலை க்ருத் யுகத்திலிருந்து பிறகு குறைய ஆரம்பிக்கிறது. இவ்விதமாக நான்கு யுகங்களும் சுற்றிக் கொண்டே வருகின்றன. 'ஊழி' என்பது அநேக நான்கு யுகங்களைக் கொண்டது. ஒரு ஊழியில் நடப்பதுதான் மற்றொரு ஊழியிலும் நடக்கும். ஊழி என்பது நீரிலிருந்து நிலம் உருவாகும் காலத்தில் ஆரம்பிக்கிறது. மறுபடியும் நீரில் நிலம் மூழ்கும் வரையில் இதன் காலம் யுகங்கள் இலட்சக் கணக்கில் வருடங்கள் உள்ளவை. மனிதப் பண்பாட்டில் ஏற்படும் மாறுதல்கள் நான்கு யுகங்களோடு நின்று விடுகின்றன. மறுபடியும் மற்றொரு நான்கு யுகம் ஆரம்பிக்கும் காலத்தில் பண்பாட்டின் உச்சநிலை துவங்குகிறது.

முத்தொழில்கள் :

கடவுள் செய்யும் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற தொழில்கள்.

பரிணாமம் :

உண்டான பொருள் தன் உருவத்தில் தானாகவே மாறுதல் அடைவது.

கர்ம தத்துவம் - வேத வேள்விகளை முக்கியமானவை என்று நினைப்பது.

பூர்வபக்ஷம் : வாதப் போரில் முதலில் கருத்துக்களைச் சொல்வது.

உபாசனம் : உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட வழியில் பிரம்மத்தை தியானம் பண்ணுவது.

சித்தித்திரயம் : ஆளவந்தாருடைய ஆத்ம சித்தி, சம்த் சித்தி, ஈஸ்வர சித்தி என்ற மூன்று நூல்கள்.

தத்வத்திரயம் : ஆன்மா, கடவுள், இயற்கை என்ற மூன்று அடிப்படைக் கொள்கைகள்.

சரீர சரீரபாவம்

ஆன்மாவையும், இயற்கையையும் இறைவனுக்கு சரீரமாகச் சொல்வது. இது இராமானுஜரின் தனிக்கொள்கை.

**கர்ம ஞான பக்திகள்**

வேள்விகளைச் செய்வது, அறிவில் கடவுளைக் காண்பது கடவுளிடம் அன்பைச் செலுத்துவது.

**ஆலயம் :**

கடவுளின் உருவத்தை மண்ணாலோ கல்லாலோ, ஆக்கி பொதுமக்கள் வழிபடும் இடம்.

**பஞ்ச வீரர் :**

வீரர்களான கிருஷ்ணன், பலராமன், ப்ருத்யுமனன், அநிருத்ன், சாம்பன் போன்றவர்களை கடவுளாக நினைத்து வழிபடுவது.

**த்ரிராத்ரம் :**

மூன்று தினங்களில் செய்யப்படும் வேள்வி

**யூ பஸ்தம்பம் :**

முன்னால் நாட்டப்பட்ட தூண்.

**பலிசத்ரா :**

பலிபோடுவதற்காகவும், அன்னதானத்திற்காகவும் செய்யப்பட்ட ஏற்பாடு.

**ஏகாயனம் :**

ஒருவனையே தெய்வமாகச் சொல்லும் வேதம்

**சத்திரம் :**

பன்னிரண்டு நாட்களுக்கு மேல் செய்யப்படும் வேள்வி.

**விருஷ்ணி :**

கிருஷ்ணனுடைய இனத்தார்.

**பஞ்சாயதன பூசை :**

ஐந்து வகை தெய்வங்களை ஒரே இடத்தில் வழிபடுவது.

**சாதுராத்மிய உபாசனம் :**

கடவுளை நான்கு விதமாக வைத்து வழிபடுவது.

**சித்தோபாயம் :**

பகவானையே உபாயமாக நினைப்பது

**சிரவணம் :**

கடவுளைப்பற்றி காதால் கேட்பது. யுக்திகளால் கேட்டவற்றை சிந்தனை செய்து நிலை நாட்டிக்கொள்வது கேட்டதை திரும்பத் திரும்ப இடைவிடாது சிந்திப்பது.

**ப்ரபத்தி சரணாகதி :**

மோட்சத்தை அடைவதற்காக வைணவர்கள் பின்பற்றும் உபாயம். இது பல கருத்துக்களைக் கொண்டது. பல பெயரால் அழைக்கப்படுகிறது.

**சிவை :**

சிவ என்ற சொல்லின் பெண் பால்.

**லயார்ச்சை, போகார்ச்சை, காம்யார்ச்சை :**

விஷ்ணு ஆலயங்களில் அம்பாளினுடைய உருவம் இருக்கும் நிலை.

**அவதாரம்**

தன் உருவை விட்டு வேறு உருவில் கடவுள் வருவது பிரம்மா படைத்தல் தொழிலைச் செய்பவர். பாதுகாக்கும் தொழில் செய்பவர் விஷ்ணு அழிக்கும் தொழிலைச் செய்பவர் ருத்ரன். புராணங்கள் முத்தொழிலைச் செய்ய மும்மூர்த்திகளைச் சொல்லுகின்றன.

**தமிழ்நாட்டு வைணவம் :**

நாத முனிகள் காலத்திற்குப் பிறகு வேதாந்த தேசிகர் வரை ஆசாரியர்கள் எழுதியுள்ள நூல்களில் உருவாகியுள்ள விஷ்ணு வழிபாட்டுக் கொள்கை, தனி வடமொழியிலும், வடமொழியும், தென் மொழியும் கலந்த மணிப்பிரவாள மொழியிலும் உள்ள நூல்களில் கருத்துக்கள் காணக் கிடக்கின்றன.

**தெய்வாம்சம் :**

தெய்வம் என்ற சொல் மனித தத்துவத்திற்கு எதிராக நிற்பது. மனிதனிடத்திலுள்ள குறைகள் இல்லாதது. இது சிறிது இருக்குமிடம் தெய்வாம்சம்.

**வேத மதம் :**

வேத நூல்களை அடிப்படையாகக் கொண்டு நிற்கும் கடவுள் கொள்கை.

**ப்ரபத்தி மார்க்கம் :**

தன்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை என்று உணர்ந்து கடவுளையே புகலிடமாகக் கொள்வது. இதனாலேயே மோட்சத்தை அடைய நினைப்பது ப்ரபத்தி மார்க்கம்.

# 1

மகா விஷ்ணுவுக்கு பத்து அவதாரங்கள் இருப்பதாக பூராணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. 1. மீன் 2. கூர்ம 3. வராகம் 4. நரசிம்மன் 5. வாமன 6. பரசுராமன் 7. ஸ்ரீராமன் 8. பலராமன் 9. பித்தன் 10. கல்கி கலி யுக அவதாரமாக ஸ்ரீ வெங்கடேஸ்வரர் இந்த உலகத்திற்கு வந்தார் மகா விஷ்ணு பல்வேறு பெயர்களால் அழைக்கப்படு கிறார். அவற்றில் ஸ்ரீ மந்நாராயணன் ஸ்ரீ ஹரி, ஸ்ரீநிவாசன் போன்றவை முக்கியமானவைகள் சடிகாமர கோசத்தில் மகா விஷ்ணுவுக்கு 1. விஷ்ணு 2. நாராயணா 3. கிருஷ்ணா 4. வைகுந்தா 5. விஸ்டரஸ்ரவன் 6. தாமோதரன் 7. ருஷிகேசன் 8. கேசவன் 9. மாதவன் 10. ஸ்வபூ 11. தையாத்ரி 12. புண்டரி காக்ஷா 13. கோவிந்தன் 14. கருடத்வஜன் 15. பிதாம்பரன் 16. அச்சுதன் 17. சார்ஞ்சி 18. விஸ்வகேச 19. ஜனார்தனா 20. உபேந்திரா 21. இந்திரா வரஜா 22. சக்ரபாணி 23. சதுர்பஜா 24. பத்பனாபன் 25. மதுரிபு 26. வாசுதேவன் 27. த்ரிவிக்ரம 28. தேவகிநந்தன 29. சவுரி 30. ஸ்ரீபதி 31. புருஷோத்தமன் 32. வனமூலி 33. பலித்வம்ஸி 34. கம்சாரதி 35. அதோக்ஷஜா 36. விஸ்வம்பரா 37. கைட்டபஜித் 38. விதுவன் 39. ஸ்ரீவத்பலாஞ்சன் ஆகிய மற்றொரு பெயர்களும் உண்டு.

### நாட்டுப்புறப் பாடல்களில் திருமால்

கலியுக வைகுந்தவாசியான ஸ்ரீ வெங்கடேஸ்வரன் உலக ஆளும் தெய்வமாகக் கருதப்படுகிறார். திருப்பதி புண்ணிய பூமியைக் குறித்த அறியாத, கேளாத இந்து மக்கள் இல்லை என்றும் சொல்லும் அளவுக்கு பாரில் திருப்பதி சிறந்து விளங்கி வருகின்றது, என்பது வெள்ளிடை மலை வெங்கடேஸ்வரர் சுவாமியை ஸ்ரீநிவாசன் என்றும், கோவிந்தன் என்றும், ஆபத் தைத் தடுப்பான் ஏழுமலையான், வட்டிக்காரன், பெருமாள் என்று பல பெயர்களைக் கொண்டு நாட்டுப்புற மக்கள் அழைப்பார் போற்றும் வெங்கடேஸ்வரர் சுவாமியை மக்கள் பல்வேறு காலகட்டத்தில், சூழ் நிலையில் பல்வேறு நிலைகளில் பூசை செய்து வழிபடுவதை இன்றும் கிராமப்புறங்களில் காண லாம். அநேக கவிஞர்கள், பண்டிதர்கள், புலவர்கள் முதலா னவர்கள் தங்களுடையப் படைப்புகளில் பல்வேறு விதமாகப் பாடி புகழ்ந்துள்ளனர்.

ஸ்ரீ வெங்கடேஸ்வர சுவாமிகள் படித்தவர்களுக்கு மாத்திரமே அல்லாத பாமர மக்களின் இதயத்திலே குடிக்கொண்டு இன்றளவும் அம்மக்களதுப் பாடல்களில் உலகை வலம் வருவதைக் காணலாம். அவர்களால் பாடப்படும் பாடல்களில் பெரும்பாலானவைகளில் அவர் இடம் பெற்றுப் பெரும் புகழை எய்தியுள்ளார் என்று மறுக்க முடியாது உண்மை. கற்றவர்களின் படைப்பில் இடம் பெற்ற திருமலைக் காட்டிலும், கல்லாதப் பாமரர் பாடும் வாய்மொழி பாட்டில் இடம் பெற்றிருக்கும் திருமால் அவர்கள் மிகுந்த வேறுபாடு உடையவராகக் கருதப்படுகின்றார்,

நாட்டுப்புறப் பாடல்களில் ஸ்ரீ வெங்கடேஸ்வர சுவாமியைக் குறித்து ஆய்வுச் செய்யும் முன்பு வெங்கடேஸ்வரர் தோற்றம் அவர் நிலை கொண்டிருக்கும் திருப்பதி-திருமலையின் சிறப்பு, உலக அரங்கில் திருப்பதிக்குள்ள வரலாறு, இலக்கியங்களில் திருமால் பெறும் இடம், திருமாலைக் குறித்த புகழ் செய்திகள் போன்றவை தெரிந்துக்கொள்வது மானிட உயிர்களுக்கு நலம் பழக்கம் என நான் கருதுகிறேன்,

**திருமால் தோற்றம்**

க்ருத, த்ரேத்தா த்வாபர யுகங்கள் முடிந்த பின்னர் நான்காவதாக கலியுகம் ஆரம்பமானது. கலியுகத்தில் இந்த உலகத்தில் எங்கு பார்த்தாலும் சமாதானமின்மை அதர்மங்கள், அழிவுகள், போன்றவைகளை 'கஸ்யபாதி' என்ற மாமுனிகள் பார்த்தார். உலகத்தில் சமாதானத்தை உண்டாக்குவதற்காக இவர்கள் பெரிய 'யக்ஞம்' யாகம் செய்ய முடிவு எடுத்தனர். யாகம் ஆரம்பிக்கப்பட்டதும் பூலோகத்தில் பல்வேறு தவமுனிகள் யாகத்தைக் காண வந்தனர். அவர்களில் நாரதை மகாரிஷி என்பவரும் ஒருவர் யாகத்தின் பலனை மும்மூர்த்திகளுள் யாருக்குக் கொடுப்பது என்ற வாதம் மகாரிஷிகளுக்குள் உண்டானது. மும்மூர்த்திகளுள் யார் புனிதத்தன்மைப் பெற்றவர்கள் என்பதை நிரூபிக்க இயலும் என்று ப்ருகு மகாரிஷியை நாரதர் முனிகளுக்கிடையே சொன்னார். அவர்கள் ப்ருகு மகாரிஷியை மும்மூர்த்திகளைப் பரிசோதிக்கும்படி அனுப்பி வைத்தார்.

ப்ருகு மகரிஷி முதன் முதலில் சத்தியலோகத்திற்கு அடி எடுத்து வைத்தார். அங்கு பிரம்மன் தன்னை அவமதித்ததற்காக பிரம்மன் மீது கோபம் கொண்டு கைலாசத்திற்குப்

போனார். அங்கும் சிவன் ப்ருகு மகரிஷியை வரவேற்று அன்புடன் உபசரிக்கவில்லை. எனவே கோபம் கொண்ட ப்ருகு வைகுண்டத்திற்குப் பயணமானார். அங்குள்ள மகாவிஷ்ணு கூட ப்ருகுமகரிஷியை நன்கு உபசரித்து மரியாதைக் கொடுக்கவில்லை. எனவே கோபங்கொண்டு ஆவேசத்தில் மகாவிஷ்ணுவை காலால் உதைக்கின்றார். மகாவிஷ்ணு பொறுமையுடன் ப்ருகு மகரிஷியின் செயலைப் பொறுத்துக்கொண்டு அவருக்குப் பாதப் பூஜை செய்து அந்த மாமுனிகள் கர்வத்தை அடக்கி அனுப்புகிறார். இறுதியாக ப்ருகு மகரிஷி யாகத்தின் பலன்கள் அனைத்தையும் மகாவிஷ்ணுவுக்கு வழங்கப்படல் வேண்டும் என்ற எண்ணத்துடன் வைகுண்டத்திலிருந்து திரும்புகிறார். ப்ருகுமகரிஷி மகாவிஷ்ணுவைக் குறித்துப் பேசியதும் லட்சுமி தேவியின் மனம் உடைந்துவிட்டது. தான் பெருமையுடன் வாழும் மகா விஷ்ணுவின் மீது ப்ருகுமகரிஷி தமது காலால் உதைத்தார் என்ற சொல்லை அந்த அம்மாவால் ஜீரணித்துக் முடியவில்லை. லட்சுமி மகா விஷ்ணுமேல் கோபம் கொண்டு அவரைப் பிரிந்து வைகுண்டத்தை விட்டு பூலோகத்தில் உள்ள கொல்ஹாபுரத்தை அடைந்தார்.

லட்சுமி தேவியின் தாங்கவொணாத செயலைக் கண்டு மனங்கலங்கிய பெருமாள் வைகுண்டத்தை விட்டொழித்து லட்சுமி தேவியைத் தேடிய வண்ணமாக பூலோகத்தை அடைந்தார். பூலோகத்தில் எல்லா பகுதிகளையும் தரிசித்து இறுதியாக சுவர்ணமுகி நதிக்கு வடக்கே இருக்கும் வெங்கட்டாஜலத்தை அடைந்தார். அங்கே உள்ள இயற்கை சூழ் நிலைகள் ஸ்ரீ-ஹரிக்கு ஏற்றதாக அமைந்துவிட்டதுமல்லாமல் மன நிம்மதியையும் அடைந்தார். அங்கே அவர் ஒரு புற்றில் வாழ்ந்து வருகிறார். தமது கணவர் காடு, மேடு கடந்து தன்னைத் தேடுவதையும் பசியாலும், தாகத்தாலும் வாடுவதையும் அறிந்த லட்சுமி தேவி ''இடையர்'' வேடத்தில் மாறிவிட்டது. பிரம்மன் பரமேஸ்வரரை ஆட்சி செய்யும் பசுவாகவும்; கன்றுக்குட்டியாகவும் மாறிவிட்டனர். லட்சுமி தேவி பசுவையும், கன்றுக்குட்டியையும் ஓட்டிக்கொண்டுபோய் நாராயண புரத்தை ஆட்சி செய்யும் சோழ அரசர்க்கு விற்றுவிட்டு மறுபடியும் அவள் கொல்ஹாபுரத்தை அடைகிறாள். அந்த சோழ அரசர் பசுக்களை இடையரான வெங்கட்டாஜலத்திடம் மேய்ப்பித்துக்கொள்வது வழக்கமாய் இருக்கிறது. ஆனால் புதிய பசுமாடு தினமும் பால் கொடுக்காமல் மறுத்தது. சோழ நாட்டு இராணி இடையரை சந்தேகத்தின்பேரில் திட்டினாள்.

ஒரு நாள் இடையன் மந்தையை ஓட்டிக்கொண்டு போய் பால் மறுத்த பசுமாட்டை அடித்துவிட்டார். அது மந்தையை விட்டு விலகி ஸ்ரீ ஹரி நிவாசமான புற்றுக்கு அருகில் சென்று புற்றின்மீது தன்னுடைய மடி அமரும்படிச் செய்து பாலைத் தானே புற்றுக்குள் ஒழுகும்படிச் செய்தது. ஸ்ரீநிவாசனுக்கு தினமும் பால் கொடுத்து வருகிறது என்று உணர்ந்த இடையர் தனது கையில் உள்ள பெரிய கட்டையால் பசுவை அடித்தான். ஸ்ரீநிவாசன் புற்றிலிருந்து திடுமென எழுந்து பசுவை இரட்சித்தான். ஆனால் அந்த அடி ஸ்ரீஹரி தலையில் விழுந்து காயமடைந்தது. இத்தகு செயல்களால் இடையன் சாத்தானாக மாறிவிட்டான்,

ஸ்ரீமன் நாராயணன் தனக்கு உண்டான காயத்தை ஆற்றிக்கொள்வதற்காக வன மூலிகையைத் தேடிக்கொண்டு தேவியின் ஆசிரமத்தை அடைகிறான். ''அம்மா'' என்ற அழைத்த ஸ்ரீநிவாசனைப் பார்த்து, தன்னுடைய மகனாக எண்ணி அவருடைய காயத்தில் வடியும் இரத்தத்தை துடைத்து விட்டு மூலிகையைக் கொண்டு வந்து காயத்திற்குப் பூசி காயத்துக்கு கூடு கட்டி அவருக்கு சேவை செய்தது. இந்த வகுலா தேவி வேறுயாரும் அல்ல. தவாபர யுகத்தில் வாழ்ந்து வரும் யசோதை கிருஷ்ணனுக்கு நடந்த ஒரு திருமணத்தை கூட இவள் பார்க்க கூடாமல்போனது. எனவே அந்த குறையைப் போக்கிக்கொள்ள யசோதை வகுலாதேவியாக மறு பிறவிக் கொண்டாள். வகுலாதேவி அங்கு தபசு செய்துக்கொண்டிருக்கும் வராக சுவாமியிடம் ஸ்ரீஹரியை அழைத்துக்கொண்டுப் போனது. வராக சுவாமி தன்னிடம் வந்தது. ஸ்ரீமன் நாராயணனே எனக் கருதி அந்த விஷயத்தை வகுலாதேவியிடம் விசாரித்தார். நடந்தவைகளையெல்லாம் அறிந்து கொண்ட வராக சுவாமி ஸ்ரீமன் நாராயணனை இன்றிலிருந்து இந்த மலையிலேயே தங்கும்படி கேட்டுக்கொண்டாள். அப்பொழுதிலிருந்து ஸ்ரீமன் நாராயணன் ஸ்ரீநிவாசன் என்ற பெயரில் வகுலாதேவி ஆஸிரமத்திலேயே தங்கலானார்.

சோழ அரசர்களது குமாரர்களான ஆகாய ராஜும், தொண்டமான் ஆகியோர் சுதர்சனனுக்குப் பிறகு அவருடைய மூத்த குமாரன் ஆகாய ராஜும், இரண்டாம் மகன் தொண்டமான் ஆகியோர் நாராயண புரத்தையும் தொண்டமநாட்டையும் ஆண்டு வந்தனர். ஆகாய ராஜுவுக்கு வாரிசு தேவை எனக்கருதி யாகத்தை மேற்கொள்ள வேண்டி

பொன்னால் செய்யப்பட்டக் கலப்பையால் பூமியை உழும் போது பூமியிலிருந்து ஒரு பெரிய ''பரணி'' (செப்புக்குடம்) வெளி வந்தது. அந்த குடத்தைத் திறந்துப் பார்த்தால் அதில் தாமரைப் பூ இருந்தது. அந்தப் பூவில் ஓர் அழகான பெண் குழந்தை இருப்பதைக் கண்டார். ஆகாய ராஜு அந்த குழந்தைக்கு ''பத்மாவதி'' என பெயர் சூட்டி தன் சொந்த பிள்ளையாகக் கருதி வளர்த்தார். இந்த பத்மாவதி என்பவர் த்ரேதா யுகத்தில் வசித்துவரும் ''வேத தேவதை'' ஆகும்.

ஒரு நாள் ஸ்ரீநிவாசன் வேட்டைக்குச் செல்லுகையில் பத்மாவதி தேவி தமது தோழிகளுடன் உல்லாசமாக பாடி ஆடித்திரியும் வனத்திற்குச் சென்றுவிட்டார். அங்கே பத்மாவதியைக் கண்டதும், அவளின் அழகில் மயங்கி, காதலிக்க முற்பட்டான். பத்மாவதிக்கு உள்ளூற ஸ்ரீநிவாசன் மீது காதல் இருந்தாலும், மேற்போக்காக வெறுப்பையும், கோபத்தையும் காட்டுகிறாள்.

வீட்டுக்கு வந்த ஸ்ரீநிவாசன் தனது தாயார் வகுலாதேவி யிடம் பத்மாவதி மீது தான் கொண்ட காதலை எடுத்துச் சொல்லி இந்த கல்யாணத்திற்கு அப்பா உடன்படவேண்டும் என்றும் சொன்னார். இதைக் குறித்து தனது அப்பாவிடம் முறையிட வேண்டி அம்மாவிடம் கூறினார். மகனின் வார்த்தையைத் தட்டிக் கழிக்க இயலாத வகுலாதேவி ஆகாய ராஜுவை நாடி நாராயண புரம் புறப்பட்டுச் செல்கிறாள். இது இப்படி இருக்க இதற்குள் ஸ்ரீநிவாசன் இரு வேடம் தரித்து நாராயண புரத்தை அடைந்து அங்கே பிருந்தா வனத்தில் இருக்கும் ராணிக்கு சோதிடம் சொல்லி விட்டார். சோதிடத்தில் அவர் சொன்னதாவது ஸ்ரீநிவாசன் என்பவரே அவருக்கு பொருத்தமுடைய கணவன் என்று அவர் மகா விஷ்ணுவே என்றும் அவருக்கு பத்மாவதியைக் கொடுத்துத் திருமணம் செய்து வையுங்கள் என்று சொல்லி வெளியேறி விட்டார். ராணி தரணிதேவி சோதிடத்தில் சொல்லியவை களையெல்லம் ஆகாய ராஜுவுக்குச் சொல்லியது. பிறகு வகுலாதேவி ஆகாய ராஜுவையும், தரணிதேவியையும் சந்தித்துப்பேசி இறுதியாக ஸ்ரீநிவாசனோடு மணம செய்துக் கொள்ள விருப்பம் தெரிவித்தாள். ஆகாயராஜு பிராமணர் களையும், சுகமகரிஷிகளையும் அழைப்பித்து சுபமுகூர்த்தை வைத்து ஸ்ரீநிவாசனுக்கு திருமண அழைப்பிதழ் ஒன்றை அனுப்பி வைத்தார்.

ஸ்ரீநிவாசன் தனது தயார் வகுளாதேவியிடமும் வராக ஸ்வாமிடமும் உரையாடியப் பிறகு முக்கோடி தேவர்களுக்கும் மகரிஷிகளுக்கும், விவாகத்திற்கு வரும்படி அழைப்பு விடுத்தார். ப்ரம்மோதி தேவதைகளும், மகரிஷிகளும் விவாகத்தைப் பார்க்கும்படி வெங்கடாசலத்திற்கு வந்தனர் அவர்கள் கொல்லை புறத்திலுள்ள லஷ்மிதேவியை அழைப்பித்து பிரிஜி வாசனை அலங்காரம் செய்து மங்கள ஆரத்திகள் எடுத்தனர். லட்சுமி தேவி ஸ்ரீநிவாசனுடன் வைகுண்டபுரத்தில் வாழ்பதற்காக ஒப்புக்கொண்டாரே. ஒழிய பூலோகத்தில் வாழ்வதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. லட்சுமி தேவியை விட்டு வெளியேறுவதன் காரணமாக ஸ்ரீநிவாசனிடம் எவரும் இருக்க மாட்டார்கள் எனக்கருதி தனாதிபதியாகிய குபேரனிடத்திலிருந்து ஸ்ரீநிவாசன் திருமணத்திற்குத் தேவையான பணத்தைக் கடனாகப் பெற்றுக் கொண்டார். பத்மாவதி ஸ்ரீநிவாசன் திருமணம் பெரிய வைபவமாக நாராயணபுரத்தில் நடைபெறுகின்றது.

ஸ்ரீநிவாசன் பத்மாவதியின் அனுமதி பெற்று 'சேஷாத்ரி' என்ற இடத்திற்கு புறப்பட்டார். லட்சுமிதேவி ஸ்ரீநிவாசனின் அனுமதி பெற்று கொல்கா புறத்திற்குச் சென்றது. புதிய தம்பதிகள் மலையேறி வர இயலாது என்று வழியில் உள்ள ஆசிரமத்தில் ஆறு மாதங்கள் தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டார்.

சிறிது காலத்திற்குப் பிறகு ஆகாயராஜு மரணமடைகிறார். ஆகாயராஜு குமாரரான வசுதானுக்கும் தொண்டமான் சக்கரவர்த்திக்கும் வாரிசு போர் ஏற்படுகின்றது. பத்மாவதியின் விருப்பத்தின் பேரில் இந்த இருவர்களுக்கிடையே இருந்து வரும் விவாவதத்தைத் தீர்த்து வைக்கின்றார். தொண்டமான் என்பவர் ஸ்ரீநிவாசன் பத்மவாதியைப் பார்த்துப் பேசுவதற்காக வெங்கட்டாசலத்திற்கு வந்தான். அங்கே ஸ்ரீநிவாசனின் விருப்பத்தின் பேரில் தொண்டமான் சிறந்த ஆலயத்தைக் கட்டுவித்தார். ஆலய பிரதிஸ்டைக்கு கொல்காபுரத்திலிருந்து லட்சுமிதேவி பதமாவதி வகுளம்மா போன்றவாகள் மங்கள நீராடி பட்டு பீதாம்பரம், நவரத்தினம் தொடுத்து சுப லக்கினத்தில் ஆலயப்பிரவேசம் செய்தார்கள். பிரவேசமடைந்ததும் அந்த ஆலயத்தை ஆனந்த நிலையமாக தேவர்கள் பாராட்டுகின்றனர். ஸ்ரீநிவாசன், லட்சுமி தேவி, பத்மாவதி ஆகியோரை தமது அருகில் வைத்துக்

கொண்டு அன்றிலிருந்து இன்றுவரை தம்மை நாடிவரும் பக்தர்களுக்கு காட்சியளித்து அவர்களுடைய வேண்டுதல் நிறைவேற்றி வருகின்றார்கள்.

இந்த கதைகள் ஸ்கந்த புராணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. அஸ்டதச புராணத்தில் வெங்கடேஸ்வரர் மகோத்ஸவத்தைக் குறித்தும் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மேற்கண்ட இச்செய்திகள் வெங்கடேஸ்வர சுவாமி தோற்றம் பற்றிய செய்திகளாகும்.

### திருமலை சரித்திரம்

சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பு திருமலைப் பகுதியில் வாழும் மேய்ப்பர்கள் பசுக்களை மேய்ப்பதற்காக திருமலைக்குச் செல்வது வழக்கம். அங்கே அவர்கள் ''மாயோன்'' என்ற நாட்டுப்புற தேவதையை (Folk Deity) சிலை வடிவத்தில் பிரதிஸ்டை செய்துக்கொண்டு நாட்டுப்புறக் கலாச்சாரப் பண்பாடுகளுடன் வழிபாடு செய்து வந்தனர். 'மாயோன்' என்றால் கருப்பு நிறமுள்ள கடவுள் என்று பொருள்படும். இந்து மதம் முதலில் வட இந்தியாவிலிருந்து தென்னிந்தியாவிற்கு பரவியது. அரசனே தேவனாகக் கருதப் படும் காலம் அது. அரசர்கள் இந்து மதத்தைச் சேர்ந்தவர்களாதலால் நாட்டுப்புற தேவதைகளின் அனுகூலங்கள், சந்தர்ப சூழ்நிலைகளுக்கேற்ற வகையில் இஸ்ட தேவதைகளாக மாற்றிவிட்டார்கள். கருப்பு நிறத்தவனான ''மாயோன்'' என்பவரை கண்ணனாகவும், மகாவிஷ்ணுவாகவும் கருதி ஆராதித்து வந்தனர். அதே விதமாக ''சியான்'' என்ற நாட்டுப்புற தேவதையை சைவர்கள் சிவனாக பூசை செய்து வந்தார்கள். அரசர்களின் ஆதரவு பெற்ற வைணவர்கள் திருமலையில் இருக்கும் தேவதையை விஷ்ணு ரூபத்தில் இருக்கும் ஸ்ரீ வெங்கடேச பெருமாளாக மாற்றி வழிபட்டு வருகின்றனர்.

நாட்டுப்புற தெய்வமான ''மாயோன்'' என்பது வெங்கடேஸ்வர ஸ்வாமியாக மாற்றம் அடைந்தாலும் ஆராதனை விஷயத்தில் மாற்றம் இல்லை. இதனால் இன்று கூட கோயில் கதவுகளைத் திறப்பவர் இடையர்களே ஆவர். பத்மாவதி வேட்டை நேரத்தில் இடையனே வில் அம்பை கையில் ஏந்துகிறான். அன்று சுவாமி அவர்களுக்கு அமுது சமைத்து

படைப்பான். ஆனால் பத்மாவதியின் விக்கிரகம் ஆகம சாஸ்திரங்களுக்கு அனுகூலமாக இல்லை என்றே கருதலாம்.

திருமலையின் தோற்றம் கிருத்து பிறப்பதற்கு முன்பு தோன்றிய இலக்கியங்கள் இருந்தாலும் அங்குள்ள தெய்வம் வெங்கடேஸ்வரன் என்ற பெயர் எங்கும் காணப்படவில்லை. திருமலையை ''வெங்கட்டாசலம்'' என்ற பெயரில் இன்று அழைத்தாலும் திராவிட மொழிகளில் ''வேங்கடம்'' என்று திருமலையைக் குறிக்கப்பட்டிருக்கிறது. கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ் இலக்கண நூலான தொல் காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் திருமலையைக் குறித்துச் சொல்லப்பட்டிருந்தாலும் அங்குள்ள தெய்வத்தின் பெயர்க் குறிப்பு காணப்படவில்லை.

கி.பி. 3-8 ஆம் நூற்றாண்டுகளுக்கிடையே பன்னிரண்டு ஆழ்வார்களின் திவ்ய பிரபந்தங்களில் வெங்கடாசலம் வைணவ புண்ணியஸ்தலம் என்று கருதி வந்தனர். அவ்வாறே பொய்கை யாழ்வார், பேயாழ்வார் போன்றவர்கள் திருமலையில் இருக்கும் தெய்வத்தை ''விஷ்ணு'' என்றும், சிவன் என்றும் குமாரசுவாமி என்றும் தமது பிரபந்தங்களில் வருணித்தார் கள். சிலர் ஆராய்ச்சி நிபுணர்கள் வெங்கடேஸ்வர சுவாமியை ''ஜைன தெய்வம்'' என்றும் ''புத்த கடவுள்'' என்றும், ''சக்தி சொரூபனி'' என்றும் கூட கருதி வந்தனர். எது எவ்வாறு இருந்தாலும் படைப்பாளர்கள் இல்லாமல் போனா லும், இலக்கிய வாதிகளின் படைப்புகளை அடிப்படையாகக் கொண்டு கி. பி. 7-8 நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்டக் காலத்திலேயே வெங்கட்டாசலம் பிரசித்திப் பெற்றதாகக் கருதப்படுகின்றது இன்று வைணவ பக்தர்களின் பிரதம புண்ணிய பூமியாக திருமலை விளங்கி வருதலைக் காணலாம்.

வைணவ பக்தர்கள் ஒரு சமயம் பத்மாவதி ஆலயத்தை விட்டு விலகிப் போகையில் அச்சமயம் சைவர்களில் சிலர் அந்த இடங்களை ஆக்ரமித்துக்கொண்டு அதனை சைவ புண்ணியஸ்தலமாக பிரச்சாரம் செய்தார்கள்.

இதற்கு அக்காலத்தில் சைவ மதத்தைச் சார்ந்தவர்களான சோழ அரசர்களின் ஆட்சிக்குக்கூட தடை ஏற்பட்டது. கி.பி. 1000, 1140-க்கு இடைப்பட்டக் காலத்தில் வாழ்ந்த இராமனு சர் வாதத்தில் சைவமதத்தைச் சாந்தவர்களை தோல்வியுறச் செய்து வெங்கடாசலம் வைணவ புண்ணியஸ்தலம் என்று

நிரூபித்து, அங்கு பூசை குறைகளிலும், ஆலய நிர்வாகத்தி லும் பல்வேறு மாறுதல்கள் செய்து வெங்கடேஸ்வரர் மகி மையை உலகெங்கிலும் பரவும்படிச் செய்தார்.

இராமானுஜர் ஸ்ரீநிவாச ஆலயத்தில் நரசிம்ம, இராம, வராகசுவாமி விக்ரகங்களைக் கூடவைத்து பிரதிஸ்டை செய்து பூசை விதானங்களையும் ஏற்பாடு செய்தார். திருப்பதியில் கோவிந்தராஜு சுவாமி ஆலயத்தை யாதவராயல என்பவர் களின் உதவியால் இராமானுஜர் நிறுவினார். திருமலை திருப்பதிக்கு பெரும் புகழையும், வரலாற்றையும் படைத்து தந்தவர் இராமனுஜர் அவர்களே அன்றிலிருந்து இன்றுவரை திருப்பதி பூலோக வைகுண்டமாக கருதப்பட்டு வருகின்றது.

பதிமூன்றாவது தொடக்க காலத்தில் தென்னிந்தியாவில் முகமதியர்கள் படையெடுத்ததின் விளைவாக திருமலையின் வளர்ச்சிப் பணிகள் குன்றிவிட்டன என்றே கருதலாம். முகம் மதியர்களின் படையெடுப்பிலிருந்து தென்னிந்தியாவைக் காப்பாற்றி இந்து மதத்திற்கு மறுமலர்ச்சிக் கொடுத்தவர்கள் விஜயநகர பேரரசு அரசர்களான சங்கமவம் சத்தவர்களைச் சாரும் இவர்களது காலமான கி.பி, 1336-1485க்கு இடைப் பட்டக் காலத்தில் திருமலை புண்ணியஸ்தலம் பெரிதளவு அபி விருத்தி அடைந்தது. கி.பி. 1359-ல் சாளுவ மங்கிதேவ மகாராஜா அவர்கள் ஸ்ரீ வெங்கடேஸ்வரசுவாமி ஆலய விமான கோபுரத்திற்கு பொன் முலாம் பூசி கலசத்தை வைத்து பிரதி ஸ்டைச் செய்தார்கள்.

சங்கம் வம்சத்தவர்களுக்குப் பிறகு, சளுவ வம்சத்தவர் கள் விஜய நகரத்தை ஆண்டு வந்தார்கள். இவர்களில் புகழ் பெற்றவர்கள் சாளுவ நரசிம்மராயலு என்பவர்கள். இவரின் குலதெய்வம் ஸ்ரீ வெங்கடேஸ்வரர் ஆகும். கி.பி. 1485-1505 வரை சாளுவ மன்னர்களின் ஆட்சியில் திருமலையில் சுவாமி அவர்களுக்கு அனேக கிராமங்கள் தானம் செய்யப்பட்டது. கோபுரங்கள், அநேக மண்டபங்கள் போன்றவை கட்டப் பட்டன. இவர்களது காலத்தில் திருப்பதி புண்ணியஸ்தலம் பல்வேறுப் புகழைப் பெற்று அகிலம் போற்றும் படியாகச் சிறந்து விளங்கியது.

சாளுவ வம்சத்திற்குப் பின்னர் கி.பி. 1505-1576க்கு இடைப்பட்டக் காலத்தில் துளுவ வம்சத்தவர்கள். விஜயநகர

சாம்ராஜ்ஜியத்தை ஆளும் துளவ வம்சத்தவர்களில் முதன்மையானவர்கள் ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் (1509-1530) மொத்தம் எட்டு முறை விஜயநகர் சக்ரவர்த்தியாக திருமலைக்கு வருகைத்தந்தார். பத்மாவதி அம்மையாருக்குக் கனகாபிஷேகம் செய்தார். ஆனந்த நிலையம் ஒன்றை நிறுவினார். கோபுரத்திற்குத் தங்க முலாம் பூசினார். பத்மாவதி அம்மனுக்கு பொன்னாலான ஆபரணங்களை அணிவித்தார். கிருஷ்ண தேவராயரின் குலதெய்வமாக ஸ்ரீ வெங்கடேஸ்வரர் கருதப் பட்டார். ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் தமது படைப்பான அமுக்த மால்யதா என்ற நூலை ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்கு சமர்ப் பித்தார். அச்சுத தேவராயர் என்பவர் பத்மாவதி ஆலயத் தில் பட்டாபிஷேகம் செய்துக் கொண்டு விஜயநகர சாம் ராஜ்ஜியத்தின் 'சாம்ராட்' ஆனார். அவரது காலத்தில் கூட திருமலை குறிப்பிடும்படியாக அபிவிருத்தி அடைந்தது.

துளுவ வம்சத்திற்குப் பின்னர் கி. பி. 1576-1649க்கு இடைப்பட்டக் காலத்தில் 'ஆரவீட்பு' என்ற குலத்தவர்கள் விஜயநகரத்தை ஆண்டு வந்தார்கள். இவர்களில் வெங்கட்ட பதிராயலு என்பவர் திருப்பதி புண்ணியஸ்தலம் அபிவிருத்தி அடைவதற்கு அரும்பாடு பட்டார்.

கி.பி. 1681-ஆம் ஆண்டில் முகலாயர்களது ஆட்சி வந்தது. கி.பி. 1750-வில் நிஜாம் கொடை மண்டலங்களின் கீழ் இப் பகுதியின் வருமானங்கள் அனைத்தும் ஆங்கிலேயர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. அப்பொழுதிலிருந்து பத்மாவதி ஆலயத்தை ஆங்கிலேயர்கள் கண்ணின் இமை போல் காத்து வந்தார்கள். கி.பி. 1834-ல் ஆங்கிலேயர்கள் திருப்பதி திருமலை தேவஸ்தான ஆலய நிறுவனத்தை மகந்தர்களிடம் ஒப் படைத்தனர். பின்னர் 1933ல் சென்னை அரசாங்கம் தேவஸ் தான கார்ய நிர்வாகக் குழுவை ஏற்பாடு செய்து நிறுவனத்தை ஆட்சி மன்றக்குழுவிடம் ஒப்படைத்தது. 1956-ல் ஆந்திரப் பிரதேசம் ஏற்பட்டு புதிய இந்து தேவாலயங்கள் தர்மங்கள் போன்றவை சட்டமாக வெளி வந்தன. 1979-ல் ஒரு நிர்வாகம் மூலம் அமலுக்குள் வந்து செயல்படத் துவங்கியது. இவ் விதமாக திருப்பதி புண்ணியஸ்தலம் சிறப்பு பொருந்திய வரலாற்றைப் பெற்று விளங்கி வருகின்றது.

### இலக்கியங்களில் வெங்கடேஸ்வரன்

ஸ்ரீ வெங்கடேஸ்வரனைக் குறித்து தெலுங்கு, தமிழ், கன்னடம் போன்ற இலக்கியங்களில் பல்வேறு இடங்களில்

காணப்படுகின்றது. இங்கே முதலில் தெலுங்கு இலக்கியங்களில் சொல்லப்பட்டிருக்கும் விதத்தை முதலில் சொல்லி பின்னர் தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்றிருப்பமைப் பற்றிச் சொல்லப்படுகின்றது.

பண்டைய இலக்கியங்களில் வெங்கடேஸ்வரனைப்பற்றிச் செய்திகள் மிகுதியாகக் காணப்படுகின்றது. தெலுங்கில் கி.பி. 6-ஆறாம் நூற்றாண்டிலிருந்தும், 16-ஆம் நூற்றாண்டிலிருந்தும் காணப்படுகின்றது. இந்த சாசனங்கள் முக்கியமாக பணத்திற்காகவும், சுவாமி சேவைக்காக மட்டுமே எழுதப்பட்டது. கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் வந்த நன்னய பாரதத்தில் தெலுங்கு இலக்கியத்தின் வாழ்க்கை ஆரம்பமானது என்று சொல்லலாம். இதில் யாங்கணும் வெங்கடேஸ்வரனைப் பற்றிக் குறிப்பிடவில்லை: 'எர்ரா ப்ரேக்கடா' எழுதிய 'ன்ருசிம்ஹ புராணம்' என்ற நூலில் ஸ்ரீ வெங்கடாசல ஸ்தாயி கொலிசே' (1-11) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எர்ரணா வெங்கடேஸ்வரரைப் பற்றிக் குறிப்பிட்டப்பிறகு ஸ்ரீ நாதடு என்பவர் 'காசி கண்டம்' என்ற நூலில் வெங்கடேஸ்வரரைப் பற்றிக் குறிப்பிட்டார்.

கி.பி. 15-வது நூற்றாண்டில் வெங்கடேஸ்வர சுவாமியைக் குறித்து தெலுங்கு இலக்கியத்தில் வெகுவாகக் குறிப்பிட்டவர்கள் தாள்ளபாக்க வம்சத்தவர்களே ஆவர். இவர்கள் வெங்கடேஸ்வரர் லீலைகளையும், வைணவ மத தத்துவங்களையும் திவ்யபிரபந்தங்களையும், கீர்த்தனைகளையும் பாடல்களாக தொகுத்து வெளியிட்டனார். அன்னமய்யா அவர்கள் ஸ்ரீ வெங்கடேஸ்வர சுவாமியைக் குறித்து சுமார் 32 ஆயிரம் கீர்த்தனைகளைப் பாடியுள்ளார். இருப்பினும் நமக்கு 18 ஆயிரம் கீர்த்தனைகள் மட்டுமே கிடைத்துள்ளன. அன்னமய்யா அவர்கள் சமஸ்கிருதத்தில் வெங்கடாசலபதியின் மகோத்ஸவ மகிமைகளை எழுதியதாகச் சொல்லப்படுகின்றது. ஆனால் அது தற்போது நமக்குக் கிடைக்கப்பெறவில்லை.

தாள்ளபாக்க பெரிய திருமலாசார்யடு என்பவர் அன்னமய்யாவின் குமாரர் இவரும் தந்தையைப் போலவே வெங்கடேஸ்வர சுவாமி மீது காதல் கொண்டு கீர்த்தனைகள் பல பாடியுள்ளார். இது மட்டுமல்லாமல் இவர் வெங்கடேஸ்வரரைப் பற்றி உரைநடை மூலமாகவும், கவிதை வாயிலாகவும் எழுதி வெளியிட்டுள்ளார் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

இவருக்குப்பின்னால் சின்ன திருமலாசார்யடு என்பவர் குறிப்பிடும்படியானவர். இவரும் தமது தந்தை தாத்தாவைப் போன்றே ஸ்ரீ வெங்கடேஸ்வரர் மீது கீர்த்தனைகள் பல பாடியுள்ளமை மிகவும் போற்றுதற்குரியது.

பெரிய திருமாலேஸ்வரருடைய நான்காவது குமாரரான தாள்ளபாக்க சின்ன அண்ணன் என்பவரும் சிறந்த பண்டிதராக விளங்கினார். இவர் அன்னமய்யாவின் வரலாற்றைக் குறித்து எழுதியுள்ளார். பினவீரகவிபத்ரா என்பவர் ஜைமினி பாரதம்' என்ற நூலில் வெங்கடேஸ்வரரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். விஜயநகர சாம்ராஜ்ஜியத்தின் சக்ரவர்த்தியான ஸ்ரீ கிருஷ்ணதேவராயலு தம்முடைய 'அமுக்தமால்யதா' என்ற பிரபந்தத்தில் வெங்கடேஸ்வரரைக் குறித்து எழுதியுள்ளார். அந்த புத்தகத்தை சுவாமி அவர்களுக்கே படையல் ஆக்கினார். முக்குதிம்மனா என்பவர் பாரிஜாதாபஹரணம் என்ற நூலில் வெங்கடேஸ்வரரைப் பற்றிப் பாடியுள்ளார். பிங்களி சூரனா என்பவர் களாபூர்ணோதயம் என்ற பிரபந்தத்தில் வெங்கடேஸ்வரரின் திவ்யமங்கள ஸ்வரூபத்தைக் கண்ணுக்கு இனிமையாகவும், காட்சியாகவும் மிகவும் நெருக்கமாகவும் காட்டுகின்றார்.

16-ஆவது நூற்றாண்டில் மாரேபல்லி வெங்கட்டயோகி என்பவர் 'தத்வதீபிகா' என்ற நூலை எழுதி பெருமாளுக்கு அர்ப்பணம் செய்தார். அலுமேலு மங்கையின் விருப்பத்திற்கிணங்க வெங்கடேஸ்வரர் வேதாந்தத்தைச் சொல்லுவதே இந்த புத்தகத்தின் முக்கியம்சம் ஆகும். கூசி அரசர் எர்ரண்ணா தம்முடைய 'சகலநீதி கதாநிதானம்' என்ற நூலில் வெங்கடேஸ்வரருக்கு முக்கியத்துவம் அளித்தார். சித்தி ராஜு திம்ம ராஜு என்பவர்' பரமயோகி விலாசம் என்ற நூலில் வெங்கடேஸ்வரரைத் துதிப்பதாக எழுதியுள்ளார். வெங்கலபூடி வெங்கனார் என்பவர் ஸ்ரீ கிருஷ்ணா கர்ணாம்ருதம்' என்ற நூலை எழுதி வெங்கடேஸ்வரருக்கு அர்பணித்தார் 'தரிகொப்புல மல்லனா' என்பவர் சந்திரா பானு சரித்திரா' என்ற நூலில் திருமலையில் நடைப்பயணமாக ஏறிச்செல்லும் யாத்ரிகர்களைப் பற்றி வர்ணித்தார். பெண்கள் ஏழு மலைகளை ஏறும் போதுப்படும் சோர்வையும், சலிப்பையும் உணர்ச்சித் ததும்ப வர்ணித்துள்ளார். லிங்கமகுண்டா கிராம கவி எழுதின 'வேங்கட்ட மகோத்ய்ம்' என்ற நூலில் சுவாமியின் மகிமைகளை எடுத்துரைக்கின்றார்.

பாஸ்கர்ராவ் படைப்பான' வைஸ்யபுராணத்தில் வெங்கடேஸ்வரரைப் பற்றியக் குறிப்புக் காணப்படுகின்றது.

17-ஆவது நூற்றாண்டில் காகமானி மூர்த்தி ''ராஜவாகன விஜயம்'' என்ற நூலை எழுதினார். இதனை திருமலை நாதருக்கு சமர்ப்பணம் செய்தார். டேக்குமள்ள ரங்கசாயி எழுதிய வாணி விசைமாலிகா' என்ற நூலில் அலுமேலு மங்கம்மா, வெங்கடேஸ்வரர் ஸ்தோத்திரங்கள் ஏழுமலைகள் புண்ணிய தீர்த்தங்கள் போன்றவற்றைப் பற்றி நேர்த்தியாக எடுத்துரைக்கக் காணலாம் எர்ர குடிபாட்டி வெங்கட்டகவி என்பவர் 'விஷ்ணு மாலா விலாசம்' என்ற நூலை வெளியிட்டு வெங்கடேஸ்வரருக்கு அங்கிதம் செய்தார். கணப வருவு வெங்கட்டகவி எழுதிய பிரபந்தராஜு விஜய வெங்கடேஸ்வர விலாசம் 'ஸ்ரீ வெங்கடேசாந்த்ர நிகண்டு' என்ற நூலைப் படைத்து ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்கு அங்கிதம் செய்தார்.

கி.பி. 18-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சல்லபல்லி வெங்கனார்யடு 'ஸ்ரீ கிருஷ்ண விலாசம்' என்ற நூலை எழுதி வெங்கடாசலபதிக்கு அங்கிதம் ஆக்கினார். ஸ்ரேஸ்டலூரி வெங்கட்டார்யடு 'ஸ்ரீநிவாச விலாச சேவதி' என்ற நூலை எழுதி வெங்கடேஸ்வரருக்குப் படைத்தார். சிரிப்ரேக்கடா தர்மணாமத்தன் எழுதிய 'நளசரித்திரம்' என்ற நூலை பெருமாளுக்கு அர்ப்பணம் செய்தார். சிநதலபல்லி வீரராகவ கவி 'மதுரவாணி விலாசம்' என்ற நூலை சுவாமிக்கு அங்கிதம் செய்தார். கிருஷ்ணகவி எழுதிய 'சகுந்தலா பரிணயம்' என்ற நூலில் வெங்கடேஸ்வர சுவாமியின் மீது கீர்த்தனம் பாடி போற்றிப் புகழ்ந்திருக்கின்றான், வத்தி பர்த்து கோணம ராஜுகவி 'வெங்கடேஸ்வரோபாக்யானம்' என்ற நூலில் பெருமாளைப் பற்றியக் கதைகள் சொல்லப் பட்டிருக்கின்றன. காண்டூரி வெங்கட்டதாசு பார்கவ புராணம் என்ற நூலில் திருமலை நன்றாக விமர்சிக்கப்பட்டுள்ளது. தாமெர சின வெங்கட்டராயகவி 'வெங்கடாசல மகோத்மயம்' என்ற நூலில் வெங்கடாஜலபதியின் புகழைப் பறைசாற்றியிருக்கிறார்.

கி. பி. 19-ஆம் நூற்றாண்டில் தரிகொண்டி வேங்கமாம்பா எழுதிய வெங்கட்டாசலம் மகோத்மியம் என்ற நூலில் 'ரமா பரிணயம்' 'செஞ்சு நாடகம்' போன்றவற்றில் வெங்கடேஸ்வரரின் லீலைகள், பிரார்த்தனைகள்

போன்றவை சொல்லப்பட்டிருக்கின்றன. செல்ல பிள்ளை நரசகவி எழுதிய 'வெங்கடேஸ்வர விலாசம்' என்ற நூலில் வெங்கடேஸ்வரர் செஞ்சு கன்னுவை மணம் முடித்தக் கதை இடம் பெற்றுள்ளது. நாரப்பராஜூ காந்தகவி ''கவிஜன சகோர சந்ரோதயம்'' என்ற நூலில் வெங்கடேஸ்வர சுவாமியைத் துதிக்கின்றார். தக்கெள்ளபாட்டி லிங்கன்னா மதன மோகினி என்ற நூலிலும், முனிபல்லி சுப்பிரமணி என்பவர் ஆத்யாத்ம இராமாயண கீர்த்தனைகளிலும், சிஷ்டி கிருஷ்ணமூர்த்தி ''வெங்கட்டாசலம் மகோத்மியம்'' என்ற நூலிலும், தூமு என்பவர் இராமசந்திரா கவி அலமேலு மங்கா பரிணம் என்ற நூலிலும் மூலுசாக்க புச்சய்யா சாஸ்திரி என்பவர் வெங்கடேஸ்வர மகாத்மியம் என்ற நூலிலும் ஸ்ரீபாத கிருஷ்ணமூர்த்தி ''வெங்கடேஸ்வரீயம்'' என்ற நூலிலும் யதிராஜதாஸ் என்பவர் வெங்கடாசல மகோத்மியம் என்ற நூலிலும் ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் கீர்த்தனைகளையும், லீலைகளையும் எடுத்துச் சொல்லியுள்ளனர்.

ஸ்ரீ வெங்கடேஸ்வரர் காவியங்களிலும் பிரபந்தங்களிலும் மட்டுமல்லாது சதக நூல்களிலும், யக்ஷ கானங்களிலும், நாடகத்திலும் இடம் பெற்றிருப்பது போற்றுதற்குரியது. சதக நூல்களில் குறிப்பாக இடம் பெற்றிருப்பதைக் காண முடிகின்றது. தாள்ளபாக்க அன்னமய்யா எழுதிய வெங்கடேஸ்வர சதகம்' என்ற நூலிலும் தாள்ளபாக்க பெத்த திருமலேஸ்வரர் எழுதிய 'ஸ்ருங்கார வருத்த பத்ய சதகம்' என்ற நூலிலும் 'நீதி சீஸ சதகம்' என்ற நூலிலும் படிப்பறிவு இல்லாத ஒரு கவிஞர் பாடிய வெங்கட்டாசல விகார சதகம் என்ற நூலிலும் மஞ்சென்ன கிருஷ்ணகவி 'வெங்கட்ட நகாதிப சதகம்' என்ற நூலிலும் முப்பகிரி தும்மனா என்பார் சேஷ்ட சதக விகார சதகம் என்ற நூலிலும் புஜ்ஜினமள்ள பகவச்சாஸ்திரி 'திருமலா ஸ்ரீ வெங்கடேஸ்வர சதகம்' என்ற நூலிலும் கேசவதாஸ் என்பவரின் சப்தகிரீஸ்வரர் சதகம் என்ற நூலிலும் ரத்னாம்பா எழுதிய வெங்கட் ரமணா சதகம் என்ற நூலிலும், தர்மபுரி வெங்கட்ட சாஸ்திரி 'வெங்கடேஸ்வர சதகம்' என்ற நூலிலும் படிப்பறிவில்லாத பெயர் அறியப்படாதக் கவி எழுதிய பங்கஜாத பவாண்டேச சதகம் வெங்கடாசலேச சதகம், வெங்கட்டாசலபதி சதகம் போன்ற நூல்களில் வெங்கடேஸ்வரர் அழகாக வர்ணிக்கப் படுகின்றார்.

யக்ஷகான இயலில் கூட வெங்கடேஸ்வரர் சம்பந்தப்பட்ட பாடல்கள், காணப்படுகின்றன. இராமலிங்க தாஸ் என்பவர் எழுதிய ''ஸ்ரீநிவாச விலாசம்'' என்ற நூலிலும், பெயர் அறியப்படாதக் கவிஞர் எழுதிய அலமேலு மங்கை விலாசம் என்ற நூலிலும் காட்டூரி வெங்கடேஸ்வரர் எழுதிய ஸ்ரீநிவாச கல்யாணம் என்ற நூலிலும் வெங்கடேஸ்வரர் லீலைகள் காணப்படுகின்றன.

விக்ரதேவ வர்மர் எழுதிய 'ஸ்ரீநிவாச கல்யாணம்' என்ற நாடகத்திலும், தங்குடூரி வெங்கட் ராமய்யா எழுதிய பத்மாவதி பரிணய நாடகம் என்ற நூலிலும் த்ரோணம் ராஜு சீதா ராமாராவு எழுதிய ''ஸ்ரீனிவாச கல்யாணம்'' என்ற நூலையும் ஜம்பன சந்திர சேகரராவு எழுதிய வெங்கடேஸ்வர மகோத்மியம் என்ற நாடக நூலிலும், லாலா கன்னய்யா எழுதிய ஸ்ரீ வெங்கடேஸ்வர பத்மாவதி பரிணய நாடகம் என்ற நூலிலும், சூர்ய நாராயண கவி எழுதிய வெங்கடேஸ்வர நாடகம் என்ற நூலிலும் ராஜவேலு மொதலி எழுதிய ''வெங்கடேஸ்வர பத்மாவதி பரிணய நாடகம்'' என்ற நாடக நூலிலும் வெங்கடேஸ்வரரின் லீலைகள், மகிமைகள், சத்தியங்கள் போன்றவை சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கலாம்.

இவ்விதமாக வெங்கடேஸ்வரர் காவியங்களிலும், புராணங்களிலும், பிரபந்தங்களிலும், கீர்த்தனைகளிலும், மகாத்மிய கிரந்தங்களிலும், சதக நூல்களிலும், தண்டகங்களிலும், யக்ஷ கானங்களிலும், நாடகங்களிலும் இடம் பெற்றிருப்பதைக் காண முடிகின்றது.

## பிறப்பு

நாட்டுப்புற மக்கள் தங்கள் வாழ்க்கையில் அன்றாடம் பாடிக்கொள்ளும் நாட்டுப்புறப் பாடல்களில் வெங்கடேஸ்வரரின் பிறப்பின் மகிமையும், தனித்தன்மையும் காணப்படுகின்றன. ஸ்ரீ வெங்கடேஸ்வரர் தந்தை பெயர் சேஷாசலம் என்றும் தாய் பெயர் பேரூரம்மாள் என்றும் சொல்லும் வழக்கம் இருந்து வருகின்றது. இத் தம்பதிகளுக்கு ஏழு பேர் பிள்ளைகள் என்றும் அந்த ஏழு பேரில் இளையவரே ஸ்ரீ வெங்கடேஸ்வரர் என்றும் நாட்டுப்புற மக்கள் தங்களது பாடல்களில் பாடிக்கொள்ளும் வழக்கம் இன்னும் சித்தூர்

மாவட்டத்தில் காணப்படுகின்றது. இராமா, இராமா, ஓ இராமா என்ற பாடலில் ''பச்சை பந்தாரி'' என்ற தேசம் இந்தியாவின் மேற்கே இருப்பதாகவும் அந்த தேசத்தை 'சேஷாசலம்' என்பவர் ஆண்டு வருவதாகவும் அவருடைய மனைவி பெயர் 'பேருரம்மா' என்றும் வழங்கப்படும் கதைகள் இம்மாவட்டத்தில் வாழும் தமிழ் மக்களிடம் பரவளாக காணப்படுகின்றது. இக்கதையினை பாடலாகவும் பாடும் வழக்கம் இன்றும் இருந்து வருகின்றது.

ராமா ராமா ஓ ராமா ராமா
பேருரம்மா ஓ ராம ராமா
பெத்து எடுத்தா ஓ ராமா
ஏயி பேரு ஓ ராம ராமா
ஏயி லட்சம் ஓ ராம ராமா
பெரியவர் பேரு ஓ ராம ராமா
பெரிய சாமி ஓ ராம ராமா
பெரிய சாமிக்கு அடுத்து வந்தது.
சின்னசாமி ஓ ராம ராமா
சின்னசாமிக்கு அடுத்து வந்தது
மத்திலசாமி ஓ ராம ராமா
மத்திலக்கு அடுத்து வந்தது
பெஞ்சலய்யா ஓ ராம ராமா
பெஞ்சலய்யாக்கு அடுத்து வந்தவர்
கதிரிசாமி ஓ ராம ராமா
கதிரிசாமிக்கு அடுத்து வந்தவர்
கோவிந்தராஜு ஓ ராம ராமா
கோவிந்தராஜுக்கு அடுத்து வந்தவர்
வெங்கடேசன்னா ஓ ராம ராமா

என்ற பாடல் மூலம் பெருமாளின் உடன் பிறந்த சகோதர்களைப் பற்றி அறிய முடிகின்றது.

வெங்கடேஸ்வரருக்கு அருகாமையில் இருக்கும் தேவர்களை இவரின் உடன் பிறந்தவர்களாக நாட்டுப்புற மக்கள் கருதினார்கள். அதுபோலவே இவர்களுடைய பெற்றோர்களின் வரலாறும் இருப்பதை அறியலாம். திருப்பதிக்கு அருகில் 5 கல் தொலைவில் இருக்கும் பேரூர் என்ற கிராமத்திற்கருகில் சிறிய மலை உள்ளது. அந்த மலைக்கு 'பேரூர் பாறை' என்று பெயர். இந்த பாறையின்மீது தேவாலயம் ஒன்று உள்ளது. இந்த கோவிலில் மூலஸ்தானம் இல்லை. இந்த கோவிலை

அக்கம் பக்கத்திலுள்ள மக்கள் பேரூரம்மா கோயில் என்று அழைக்கின்றார்களே தவிர சரியான விளக்கம் காணப்படவில்லை. பேரூர் மக்கள் 'பேரூர் அம்மன்' என்ற தேவதையை கிராம தேவதையாக வழிபடுவதின் காரணமாய் இந்த அம்மையை ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் தாய் என்று சொல்லும் வழக்கம். இப்பகுதியிலும் மற்ற அருகருகே வாழும் தமிழ் மக்களிடம் காணப்படுகின்றது. தந்தையின் பெயர் ''சேஷா சலம்'' என்று குறிப்பிட்டிருப்பதால் திருமலையில் உள்ள ஏழு மலைகளுள் ஒன்றான சேஷாசல மலையை இங்கு நினைவுக்குக் கொண்டு வரலாம். இவ்விதமாக வெங்கடாஜலபதியின் பிறப்பை நாட்டுப்புற மக்களின் பாடல் வாயிலாக அறியலாம்.

சுபாவங்கள்

நாட்டுப்புறப் பாடல்களில் ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் சுபாவங்கள் பரவலாகக் காணப்படுவதைக் காண முடிகிறது. வெங்கடேஸ்வரரின் சுபாவங்களை நாட்டுப்புற மக்கள் தங்களதுப் பாடல்களில் தங்களது விருப்பம்போல படைத்துக் கொள்கின்றனர். நாராயணா, நாராயணா என்ற பாடலில்

கருப்புசாமி பொறந்தாரு நாராயணா
நாக்குமேலே நட்சத்திரம் நாராயணா
தோள்மேலே பூ சக்கரம் நாராயணா
பாதத்திற்கு பாதரட்சை நாராயணா
தலைமேலே வைரகிரீடம் நாராயணா
தோளுக்குள்ள சங்குதான் நாராயணா

என்ற பாடலில் ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் உருவம், அமைப்பு, திறம், சிறப்புத் தன்மை போன்றவை வர்ணிக்கப்பட்டிருப்பதை உணர முடிகின்றது. வெங்கடேஸ்வரர் கருப்பு நிறத்தவரை யொத்தும், நெற்றியில் நாமம் போட்டிருப்பதாகவும், நாக்கில் அவருக்கு நட்சத்திரம் இருப்பதாகவும், தோள் பட்டையில் ஒரு புறம் சக்கரமும், மறுபுறம் சங்கும், பாதங்களுக்கு பாதரட்சைகளும், தலைக்கு கிரீடமும், முதுகில் எலுமிச்சை மாலையும் தமது உள்ளங்கையில் தாமரை முள்களையும், பெற்றிருக்கின்றார் என இந்த பாடல் விளம்புகின்றது. நட்சத்திரம், பூ சக்கரம், எலுமிச்சை, தாமரை போன்ற பொருட்களை நாட்டுப்புற மக்கள் புனிதப் பொருட்களாகக் கருதுகின்றது.

கன்னங் கருத்தசாமி நாராயணா
காதோரம் கடுக்கன் சாமி நாராயணா
நட்சத்திரம் பெற்றவரே
நடந்து வாருமய்யா
பூ சக்கரம் பெற்றவரே
பொறண்டு வாருமய்யா
தாமரை பூ மகளை
தட்டிக்கொண்டு வராரே

என்று புகழ்ந்துப் பாடியுள்ளமைக் காணப்படுகிறது.

இந்த பாடலில் பெருமாள் கருப்பு நிறத்தவராகவும், அவரது நாக்கில் நட்சத்திரம் இருப்பதாகவும் தோள் பட்டையில் சங்கும் சக்கரமும் அணிந்துள்ளதாகவும் உடலில் பலவித மணிமாலைகள், அணிகலன்கள் அணிந்துள்ளன வாகவும் சொல்லப்படுகின்றன.

''சிவப்பு நாமம் போட்டவரே பெருமாளே
வெள்ளை நாமம் தீட்டியவரே பெருமாளே''

என்ற பாடலில் அவரது உருவம், நெற்றியில் பூசப்பட்டிருக்கும் திருநீறு போன்றவைப் பற்றியச் செய்திகள் காணப்படுகின்றன. நாட்டுப்புற மக்கள் தாங்கள் பிராயணம் செய்யும்போது எவ்வாறெல்லாம் நடை உடை பாவனைகளில் இருப்பார்களோ அதுபோலவே அவருடைய உருவப்படத்தை வரைந்துக் கொள்கின்றனர். கீழ்க்கண்ட பாடலில் வெங்கடேஸ்வரர் நாட்டுப்புறத்தானாகவே கருதப்படுகின்றார்.

கருப்பு மூஞ்சிக்கு மேலே
வெள்ளத் திருநாமமய்யா
நாமத்தைக் கண்டாலே
நாட்டு மக்களெல்லாம்
நமஸ்காரம் போடுறாங்கோ
நலம் பெற்று வாழுறாங்கோ

மேற்கண்ட பாடலில் ஸ்ரீ வெங்கடேஸ்வரர் நாம மகிமையும், மக்கள் பெறும் பலனும் பேசப்பட்டுள்ளன. பெருமாளின் கருப்பு முகத்தில் வெள்ளை நாமம் போட்டிருப்பது மக்களுக்கு ஆனந்தத்தையும், நித்திய மனச் சாந்தியையும் தருவதாக பாடல் விளம்புகின்றது.

அலுமேலு மங்கா கொய்லுன்னா சிரிச்சா
காக்கா கருப்பு போறரு சாமி

கரிவரதன் வர்றாரு சாமி
கறடு முறடு பாதையில் நடந்து
காட்டுப் பக்கம் போறாரு சாமி

என்று சொல்லி 'அலுமேலு' திருமாளின் நிறம் மற்றும் செயல், காரியம் ஆகியவற்றை எடுத்துச் சொல்லி சிரித்ததாகப் பாடல் அமைந்துள்ளது.

''தனங்களை பெற்ற தசாவதாரக்காரன்
வட்டிக்காசு பெற்ற வைகுண்ட நாதன்
நாம தீர்த்தம் பெற்ற நாராயண தேவன்''

என்ற பாடல் பல கருத்துக்களைக் கொண்டு விளங்குகின்றது. வெங்கடேஸ்வரர் தசாவதாரம் எடுத்தவர் என்றும், வட்டிக் காசு பெறுபவர் என்றும், வைகுண்ட நாதன் என்று நாமம் தீர்த்தம் பெற்றவர் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

கோட்டி சூரியன் வெளிச்சம்போல
கிரீடம் உந்தன் தலைமேலே
மாட்டி வைச்சிருக்கும் மகிமை
வாட்டி வதைக்குது என்ன

என்று பாடப்பட்டிருக்கின்றது. வெங்கடேஸ்வரர் தலையில் ஒளி வீசும் வைரக் கிரீடம் கோடி சூரியனின் ஒன்று சேர்த்த வெளிச்சத்திற்கு ஒப்பாய் இருக்கின்றது என்றும்; அதனைக் கண்ணுற்ற எனது மனம் அன்பு மிகுதியாய் பொறுகக் இயலவில்லை என்றும் பாடல் கருத்துக்கள் உணர்த்துகின்றன.

மேலும் இவர் பாதங்களுக்கு பொன் வளையங்கள் அணிந்துள்ளமையையும், பொன் தடியைக் கையில் பிடித்திருப்பதையும் பார்த்தால் நாட்டுப்புறத்தானைக் காட்சியளிப்பது உறுதியன்றோ. மேலும் வெங்கடேஸ்வரர் காதில் வளையம் அணிந்திருப்பதையும், உடல்மேல் துண்டு போட்டு இருப்பதையும் கூட பல பாடல்கள் உணர்த்துகின்றன, இவ்வாறாக ஒரு இறைவனை நாட்டுப் புறமக்கள் தங்கது நெருக்கமான இனத்தவராகச் சிந்தனைச் செய்துப்பாடியமை சிந்திப்பதற்கு உரியது இவர்களுடைய கள்ளங்கபடமற்ற உள்ளம் இப்பாடலின் மூலம் கெள்ளதின் விளங்கும் என்பது வெள்ளிடைமலை.

**ஆபரணங்வள்**

சித்தூர் மாவட்டத்தில் பாடப்பெறும் தமிழ் நாட்டுப்புறப் பாடல்களில் ஸ்ரீ வெங்கடேஸ்வரர் ஆபரணங்கள் பல இடம் பெற்றுள்ளமையைக் காணலாம்.

"தங்க மோதிரம் அணிந்தவரே தங்கசாமி
பவள மோதிரம் போட்டவரே சாமி
ரத்தின தோடு மாட்டிய சாமி
நாராயணா நாராயணா நாராயணா"

தங்கத்தினாலான மோதிரத்தை விரலில் அணிந்தவரும், பவளத்தில் மோதிரத்தை அணிந்தவரும், இரத்தினங்கள் பதிக்கப்பட்ட தோடுகள் மாட்டியவரும் சிறப்புமிக்க நாராயணனே என இப் பாடல் தெளிவுறுத்துகின்றது. பண்டைய அரசர்கள் தங்களை அரசு சின்னங்கள் பதிக்கப்பட்ட முத்திரைகளை கை விரல்களில் அணிந்துக் கொள்வார்கள். அதுபோலவே நாட்டுப்புறமக்களும் வெங்கடேஸ்வரனை அரசனாகவும், ஆபரணம் அணிவதில் விருப்பமுடையவராகவும் தங்களது படைப்பிலே படைத்திருப்பதைக் காணலாம்.

இம்மாவட்டத்தில் பெண்களால் பாடப்படும் கும்மில் பாடல்களிலும் வெங்கடேஸ்வரர் அணிந்துள்ள அணிகலன்களில் சிறப்பையும் பெருமையையும் காணலாம்.

கும்மியடி பெண்கள் கும்மியடி-நம்ம
வெங்கடேசு சாமிக்கு கும்மியடி
வைர மோந்தரம் வெரலில் போட்ட
விஷ்ணு சாமிக்கு கும்மியடி
இடுப்புக்கு ஒட்டாணம் போட்டிருப்பார்
கடுக்குன காதுக்கு மாட்டிருப்பார்
கொடுக்கிற மக்களும் பலருண்டு அங்கு
திடுக்கெனனும் நெஞ்சமும் சில உண்டு

என்ற பாடல் மூலம் பல கருத்துக்களை நாம் உணர முடிகின்றது. விரலில் வைர மோதிரம் அணிந்துள்ளமையும், இடுப்புக்கு 'ஒட்டியாணம்' அணியப்பெற்றிருப்பதனையும், காதுக்குக் கடுக்கன் மாட்டி இருப்பதனையும் இம்மாவட்டத்தில் பாடல் பெறும் கும்மிப்பாடல்கள் நமக்கு உணர்த்துகின்றன.

**சுபாவங்கள்**

நாட்டுப்புறப் பாடல்களில் வெங்கடேஸ்வரர் சுபாவத்தையும், தனிதெய்வ சிறப்பையும் காணும்போது நமக்குப் பல விதமான உண்மைகள் புலப்படுகின்றன.

''அம்மா என்னெ பெத்தவளே
பேரு வெச்சவளே
எங்கள் குல தெய்வமகளே
ஆசீர்வாதம் தாருங்கம்மா
அன்பை பெரிதும் கொடுங்கம்மா
வழியனுப்ப வேண்டியம்மா
வாழ்த்தியனுப்ப கோருகின்றேன்''

அதாவது ஸ்ரீ வெங்கடேஸ்வரர் தம்முடைய தாயின் மீது அளவு கடந்தப் பாசத்தை வைத்திருந்தார். தாம் பிரயாணப் பட்டு வெளியூர் செல்லும் போதெல்லாம் தம்முடைய அம்மா விடம் ஆசீர்வாதம் பெற்றுச் செல்வதைப் பாடல் உணர்த்து கின்றது,

''ஆறுபேறு அண்ணமாருக்கு
ஆளுக்கொரு இடம் கொடுத்தீங்களே யம்மா
எனக்கு ஏற்ற இடம்
எங்ஙனம் இல்ல இல்ல
ஏற்ற இடம் எனக்கு கொடுத்தா
எருமைக்கிடா வெட்டுறேன் அம்மா
ஏழு ஜாத்தர செய்யிறேன் அம்மா
திருப்பதி கங்கம்மாளுக்கு நா
திர்ணா செய்து பார்க்கிறேன் அம்மா''

என்ற பாடலில் பல கருத்துக்கள் காணப்படுகின்றது திருமலை நாதருடன் பிறந்தவர்கள் ஏழு பேர் என்பதும் அவர்களுள் கடைசி எட்டாவது பிள்ளையாகப் பிறந்தவரே வெங்கடேசப் பெருமாள் என்றும் சொல்லப்படுகின்றது. உடன் பிறந்த சகோதரர் அனைவருக்கும் தாங்கள் வாழ்வதற்கு ஏற்ற இடம் ஒதுக்கியுள்ளமையும், தனக்கு ஏற்றவகையிலே இடம் இல்லா மல் இருப்பதையும் இந்த பாடல் உணர்த்துகின்றது. தனக்கு ஏற்ற இடத்தை வழங்கினால் திருப்பதி கங்கையம்மனுக்கு ஆண்டுக்கு ஒரு முறை சிறப்பாக விழா எடுப்பதாகவும், எருமைக்கிடாவை பலியிடுவதாகவும் மேற்கண்டப்பாடல் குறிக்கின்றது. பிறகு இரத்தமும் சோறும் கலந்த நிறைச் சோற்றைப் படைப்பதாகவும், பாடலில் சொல்லப்பட்டிருக் கின்றது. வெங்கடேஸ்வரர் தனக்கு சிறிய உதவிகள் எவரே னும் முன்வந்து செய்தால் அவருக்குத் திரும்ப பெரிய உதவி கள் செய்வதாகப் பாடல் நமக்குச் சுட்டிக்காட்டுகின்றது. இதன் மூலம் அவறது நன்றியுள்ளம் தெளிவாகப் புலப்படு வதைக் காணலாம்.

இராம ராமா ஓ ராமா ராமா
மூன்றடி மண் கேட்டேன் ஓ ராமா ராமா
ஒரு பாதம் வரை இடம் கேட்டேன்
இன்னொரு பாதம் எங்கே வைப்பது
ரெண்டாம் பாதம் தலைமீது வைச்சி வெங்கடேசா
முதல் பூசை உத்தனுக்கு சாமி
இரண்டாம் பூசை எனக்கு சாமி

என்று பாடப்பட்டுள்ளது. வரம்கொடுக்கும் சுவாமியிடம் வெங்கடேச பெருமாள் சென்று தம்முடைய பாதத்திற்கு சரி படும் அளவுக்கு இடம் வேண்டும் என கேட்டுப் பெற்றுக் கொண்டார். அந்த நன்றிக் கடனுக்காக வரசாமி அவர் களுக்குத் முன்னதாகப் பூசை மேற்கொண்டு பின்னர் தமக்குப் பூசை ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று தம்முடைய பக்தர்களுக்குக் கட்டளை இட்டார். இந்த இடத் தில் வெங்கடேச பெருமாளின் நன்றியுள்ள உண்மை இருதயத் தைக் கண் கூடாகக் காணலாம்.

கோவிந்தா கோவிந்தா கோவிந்தா ஹரி
ஏழுமலை தாண்டி வந்தேன் வெங்கடேசா
ஆபத்துகளைக் கடந்து வந்தேன்
ஆட்கொள்ளும் கோவிந்தா திருமலேசா கோவிந்தா

ஏழுமலைகளைக் கடந்து வெங்கடேசப் பெருமாள் எழுந்தருளி யுள்ளார் என்றும், ஆபத்திலிருந்துக் காப்பாற்றி இரட்சிப் பவன் என்றும்; அனாதைகளை ஆதரிப்பவன் என்றும் மேற் கண்டப் பாடலில் சொல்லப்பட்டுள்ளது, ஸ்ரீவெங்கடேஸ்வரர் தமக்குத் தேவைப்படும் போது உருவத்தை மாற்றிக் கொள் ளும் சுபாவம் உடையவர் என்ற பாடலில் ஒன்று சித்தூர் மாவட்டத்தில் பாடப் பெறுகின்றது.

வனவாசம் போயி வந்தேனய்யா
வெங்கடேசா நா என்ன செய்வது
கட கட கடவென்று
நடுங்கியே வந்தேன் நாராயணா
கோயில் பக்கத்திலே நின்னான் வெங்கடேசா
சாணு தாவு கேட்டு நின்னான் நாராயணா
சாகுற நேரம் வருது என்றான் நாராயணா
இது எங்குபீட எப்போபீட ஏனாதி பீட

கோயில் பக்கத்துல மரம் உள்ளது
போய் தூங்கடா எந்தன் நாராயணா
கோயில் பக்கத்துக்கு போனான்டா நாராயணசாமி
மலையை தூக்கி பார்த்து விட்டான் நாராயணா
டியே டியோ டியோ என்று ஆடு மேய்த்தானே
கட, கட கட, என்று காட்டுக்கதை சொல்றே
கோயில் புறம் நின்றான் வெங்கடேசு
சாணு தாவு இல்லை என்றாலும்
நான் வேதனைப்படேன்
எனக்கு ஜான் அளவு நிலம் கொடுக்க
விட்டால் நான் இறந்து விடுகிறேன்.
கோயில் அருகிலே பிளேட்டு உள்ளது
பிளேட்டு பக்கத்துக்கு போடா நாயினா
கோயில் பக்கத்துக்கு போனான் வெங்கடேசு
கட கட கட கடவென்று
நடுங்கியே வந்தான் ஓ வெங்கடேசா
கோயில் பக்கத்துல நின்றிருந்தான் வெங்கடேசா
ஜாணு தாவு கொடுக்கணும் குய்யா
இல்லேண்ணா நானு செத்துடுவேனே
இது என்ன பீடை டப்பா பீடை
என் தலைமேலே காலை வையுடா
மேற்கு பக்கம் திரும்பும் போது வெங்கடேசா
கிழக்கு பக்கம் திரும்பினானே வெங்கடேசா
வராகத்தின் மீது காலை வெச்சி வெங்கடேசா
பூமிக்கடியில் மிதித்துப் போட்டான் வெங்கடேசன்

ஸ்ரீ வெங்கடேசன் தமக்கு வேண்டி நிலத்தைப் பெறுவதற்காக விராக சுவாமியை கலங்க வைத்து பிறகு அவரைப் பாதாளத் வரை அழுத்திப் போட்டு விட்டு அந்த பகுதியை ஆக்ரமிம் துக் கொண்டதாக மேற்கண்டப் பாடல் அமைந்துள்ளது.

''அலமேலு மங்கையை பாக்க
போறாங்கோ
அழகர் அவளுக்கு மாலை சூடியே
ஆட்கொள்ள போறாங்கோ''

என்ற பாடிலில் வெங்கடேசுவரன் அலமேலு மங்கையைத் திருமணம் செய்துக் கொள்வதற்கு விருப்பம் உடையவராகவும் இவருக்குத் தமது வீட்டிலுள்ளப் பெரியவர்கள் பெண் பார்ப் பதற்காகச் சென்றிருப்பதாகவும் பாடலில் குறிப்புக் காணப் படுகின்றது.

வெங்கடேசர் விருப்பப்படி அலமேலுவைப் பெண் கேட்டுச் செல்கின்றனர். ஆனால் பெண்ணைத் தரப்போவதில்லை என்று அலமேலு மங்கைக்கு உரிய பெரியவர்கள் திட்டவட்டமாகச் சொல்லிவிட்டார்கள். இதனைக் கேள்விப்பட்ட வெங்கடேசர் கண்களில் கோபக்கனல் வீசக் கொதித்தெழுந்தார். தன்னைக் குறித்து இழிவாக எண்ணியதை நினைத்து மனம் வருந்துவதாகப் பாடல் ஒன்று கிடைத்துள்ளது.

கோபம் வந்தது கோபம் வந்தது பெருமாளுக்கு
அருபத்தாறு பதுனு மழையை வருவித்தாரு
ராமா ராமா ஓ ராமா ராமா
மீசையை முறுக்கினாரு
கண்ணு சிவப்பானது
வாந்தியும் பேதியும் உண்டானதே ஓ கங்காதேவி
கலகம் வந்ததே ஓ வெங்கடேசா
நிம்மதி போச்சே ஓ வெங்கடேசா - உம்
மாயம் என்ன ஓ வெங்கடேசா

ஸ்ரீ வெங்கடேஸ்வரருக்கு கோபம் வந்தால் பலவிதமான தீமைகளை ஈவு இரக்கமின்றி செய்வார் என்ற குணம் மேற்கண்டப் பாடலில் இருந்து அறியலாம்.

### திருப்பதி புண்ணிய ஸ்தலம்

நாட்டுப்புற மக்கள் தாங்கள் பாடிக்கொள்ளும் நாட்டுப்புறப் பாடல்களில் திருப்பதி புண்ணிய ஸ்தலத்தைப் பற்றி பெருமையாகவும் மிகவும் சிறப்பாகவும் சொல்லப்படுவதைக் முடிகிறது. புராணங்களில் திருப்பதி புண்ணிய ஸ்தலம் இலக்கிய வழிகளின் கற்பனைகளுக்குத் தகுந்தவாறு வருணனைச் செய்துக்கொண்டார்கள். அதுபோலவே நாட்டுப்புற மக்களும் தாங்கள் அன்றாடம் பாடிக்கொள்ளும் நாட்டுப்புறப் பாடல்களில் கற்பனை நயத்துடன் திருப்பதியை சிறப்பித்துப் பாடியமை புலப்படுகின்றது.

வெங்கட்ட வெங்கட்ட வெங்கட்ட ரமணா-ஓ சாமி
வெங்கட்ட ரமணா
வெட்ட வெயில் காட்டு நடுவிலே
எப்படி உள்ளாய் வெங்கட்ட ரமணா
காட்டுப்பகுதி அல்ல கானகம் அப்பா
கானகம் அல்ல திருப்பதி ரமணா
திருப்பதி அல்ல மேல் திருப்பதி
மேல் திருப்பதில மேகங்கள் கூட்டம்

மேக கூட்டத்தில மேகநாதன் ஐயா
கானக நடுவில் கண்ணன் ஐயா
பெரிய மலையில் பெருமாள் ஐயா
திருமலையில் திருமால் ஐயா
வெங்கட்ட வெங்கட்ட வெங்கட்டரமணா

என்று வருணனைச் செய்யப்பட்டுள்ளதைக் காணலாம். திருமாலுக்குரிய வேறு பெயர்கள், அவரை அடையவேண்டுமெனில் ஏழுமலைகளைக் கடந்தாக வேண்டும் என்றும் மலை முகடுகளில் மேகக் கூட்டம் பார்க்க எழிலாகத் தோற்றம் என்றும் பாடல் குறிப்பிடுகின்றது.

''வைகுண்ட நாதா
வெங்கட்ட ரமணா''

ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் இருப்பிடம் ''வைகுண்டம்'' என்று மேற்கண்ட பாடல் விளம்புகின்றது.

''திருலோகத்தில் இல்லாத திருப்பதியில்
திருமால் இருக்கின்றாரே - அவர்
திருவடி வணங்கி தாள்பணிந்தால்
திருமோட்சம் கிடைக்குமய்யா''

திருமாலை வணங்குபவர்களுக்கு மோட்சம் கிடைப்பது நிச்சயம் என்று மேத்கண்ட பாடல் விளங்குகின்றது.

''திருப்பதி மலை திரு வாசியான
திருமாலைக் காணுதல் வேண்டி
திருமலையில் நடப்போம் ஐயா
ஏறும்போது ஏழுநூறு படிகள்
இறங்குப்போது இருநூறு படிகள்''

இந்த பாடலில் திருமலையில் உள்ள படிகளைப் பற்றிக் குறிப்புக் காணப்படுகின்றது. ஏறும்போது ஏழுநூறு படிகள் இருப்பதாகவும், இறங்குபோது இருநூறு படிகள் இருப்பதாகவும் குறிப்புக் காணப்படுகின்றது. அதாவது ஏறும்போது கடினமாகவும், இறங்கும்போது சுலபமாகவும் இருக்கும் என்பதை இந்த பாடல் எடுத்துக்காட்டுகின்றது.

''வெங்கட்ட வெங்கட்ட வெங்கட்ட ரமணா
கீழ் திருப்பதியில் பித்தளை மேடை
மேல் திருப்பதியில் பங்காரு மேடை''

என்ற பாடல் மூலம் நாட்டுப்புற மக்களின் தெள்ளத் தெளிவான கற்பனை நன்கு புலப்படுகின்றதைக் காணலாம்.

**தீர்த்தம்**

நாட்டுப்புற மக்களின் பாடல்களில் திருப்பதியிலுள்ள தீர்த்தங்கள் கூட இடம் பெற்றிருப்பதை பார்க்கலாம்.

''கண்ணனது கானகத்து அடியில்
கபில தீர்த்தம் பிரம்மானந்தம்''
பக்தர்கள் அங்கு ஸ்நானம் ஆடுவார்
பார்க்க அது பரவசம் ஊட்டும்''

திருப்பதியில் உள்ள கபில தீர்த்தம் ''பிரம்மானந்தம்'' என்றும் அங்கு தினமும் பக்தர்கள் ஸ்நானம் மேற்கொள்வர் என்றும் அந்த காட்சி பார்ப்பதற்குக் கண்கொள்ளா காட்சியாக இருக்கும் என்றும் பாடலில் சொல்லப்பட்டுள்ளது.

**மகிமை**

நாட்டுப்புறப் பாடல்களில் ஸ்ரீ வெங்கடேஸ்வரரின் மகிமைகள் சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம்.

''கருட வாகன அய்யனுக்கு
கண்ணன் மகிமை சொல்ல இயலாது''

திருமாலின் மகிமைகளை தன்னுடைய வாகனமாகவும், நெருக்கமாகவும் விளங்கும் கருடனுக்கும் சொல்லத் தெரியாது இயலாது என்பது மேற்கண்ட பாடலின் கருத்தாகும்.

மய வருது மய வருது
மந்தார நாட்டுல மய வருது
மேடைகளை கீழே தள்ளுது
ஓடை நிரம்பி ஆறாய் ஓடுது
ஏரி குளம் ஏற்றம் காணுது
சேரிப்பக்கம் தண்ணீர் ஏறுது
வெங்கடேசா ஓ .. கோயிந்த ராஜா

அதாவது வெங்கடேசப் பெருமாளும் அவரின் அண்ணனாக விளங்கும் கோவிந்தராஜனும் மழையை வருவிக்கின்றார் என்றும், இதனால் பெரிய மாடி வீடுகள் இடிந்து சாய்கின்றன என்றும் ஓடைகள் நிரம்பி வழிகின்றன என்றும், ஏரி, குளங்களில் நீர்த்

தேக்கங்கள் கொள்கின்றன என்றும் இப்பாடல் கருத்து அமைந்துள்ளது.

ஸ்ரீ வெங்கடேசனின் பூர்வ அவதாரமாக விளங்கும் ஸ்ரீ கண்ணபிரான் தன்னுடைய நெருங்கிய நண்பராக விளங்கும் குசேலர் கொண்டு வந்த அவலைத்தின்று தன்னுடைய சிம்மாசனத்தை அளித்ததின் மகிமையைக் கீழ்வரும் பாடல் விளம்புகின்றது.

''குசேலர் கொண்டு வந்த அவலை
குணமோடு வாங்கி உண்டு
குர்ச்சியைக் கொடுத்தார் கண்ணன்''

இங்கு 'குர்ச்சி' என்ற சொல் சிம்ஹாசனத்தைக் குறிக்கின்ற சொல்லாகும்.

''அண்டி வரும் நொண்டி பக்தர்களை
காண வரும் குருடர் பக்தர்களை
கலங்க வைக்கா நெஞ்சம் உள்ளவரே
காத்து வருகின்றீரே
வழி நடத்துகின்றீரே''

தம்மைக் காண்பதற்கு வரும் நொண்டி மற்றும் குருடர் பக்தரை வழி நடத்துகின்றீர் அவர்கள் கேட்ட வரம் தருகின்றீர் என்று கருத்தமைந்த பாடல் ஒன்று இம்மாவட்டத்தில் பாடப்படுகின்றது.

**பக்தி**

ஒன்றுபட்டு வாழும் வாழ்க்கையானது வாழ்வில் ஆவலையும் விரக்தியையும் தூண்டியது. மக்கள பக்தியிலே ஈடுபடலானார்கள் பக்தி வாழ்க்கைக்கு முதலாவது தோற்றம் எனப்படுவது 'பக்தி' ஆகும். கடவுளோடு ஒன்று படுவதற்கான வழிமுறைகளில் கர்மம், ஞானம், பக்தியோகம் போன்றவைகள் முக்கியமானவைகள் இம்மூன்றிலும் பக்தி என்பது சிறப்புடையதாகக் கருதப்படுகின்றது. கர்ம, ஞான யோகங்களைக்காட்டிலும் பக்தி முதன்மையான இடத்தை வகிக்கின்றது என்று நாரதர் சொல்கின்றார். எனவே தான் பக்தர்கள் மகாமுனிவர் பக்திக்கு முதன்மை இடத்தை வழங்குகின்றனர். மிகவும் புனிதமும் உண்மையும் வாய்ந்த இந்த பக்தியை மகாமுனிவர்கள் குலம், மற்றும் தொழிலுக்கு அனுகூலமாக அமைத்துக் கொண்டார்கள். பக்தி என்றால் சேவை செய்தல்,

உண்ணுதல், அர்ப்பணம் செய்தல் என்று பொருள் முக்கியமாக் ஈஸ்வர சொரூபங்களையும் அல்லது ஈஸ்வரனது தன்மைகளை போற்றிப் புகழ்தலே 'பக்தி' என்று வேத சாஸ்திரிகள் கருத்து தெரிவித்தார்கள். பண்டைய பக்தி மகான்களில் சிறந்தவரான நாராதாச்சாரியர் என்பவர் 'இறைவனிடம் கொள்ளும் காதலே' பக்தி என்று குறிப்பிட்டிருக்கின்றார். சாண்டில்ய மகரிஷி என்பவர் 'ஈசுவரனிடம் நிரந்தரமனத் தொடர்பு கொள்ளலே' என்று வியாக்கியானம் படைத்திருக்கின்றார். பரமேஸ்வரரின் சுபாவங்களை கிரகித்துப் பின்னர் பகவனைப் புனிதமாகவும், புஷ்கலமாகவும் நிரந்தரமாகவும் கைக்கொள் ளலே பக்தி என்றும் கூறுவர் 'நிரந்தரமாக இறைவனிடம் காதல் கொள்ளுதலே பக்தி' என்று ஸ்ரீ இராமானுஜம் சொல்லியிருக்கின்றார். எந்த ஒரு நட்பானது ஞானமாகவும், நித்தியமாகவும், ஒன்றுபட்டும், இருக்க வேண்டும். இத்தகைய எனப்படும்.

பக்தியை பலர் பலவாறு வர்ணித்துள்ளார்கள். ஞானத் தையும், பொருளாதாரத்தையும், குணங்களையும், ஆதார மாகக் கொண்டு பக்தியை மூன்று பிரிவுகளாக பிரிக்கலாம். இந்த பக்தி முக்கியமாக சாந்தி, ஐக்கியம், இனிமை, கலாசாரப் பண்பாடு ஒருங்கிணைப்பு ஆகியவற்றை நல்கு கின்றது.

**சாந்தி பக்தி**

பக்தி மார்கத்தில் தலைசிறந்தவையாகவும், பிரம்ப ஐக்கிய மாகவும் விளங்குவது சாந்தி பக்தி ஆகும். இது சாதாரண ஆத்துமத்தில் தோன்றக் கூடிய ஒன்றே ஆகும். இறைவ னுக்கு அடிமையாக இறைவனுக்கு ஏற்ற சேவையை செய்து அவனைக் காதலித்து மேற்கொள்ளும் பக்தியே சாந்தி பக்தி.

**தாஸ்யபக்தி**

பக்தன் தான் பகவானின் சேவையைச் சம்பாதிப்பதனையே தாஸ்ய பக்தி எனலாம். புனிதமான பக்தனுக்கு தம்முடைய இறைவன் மேல் இருக்கும் அனுராகமே தாஸ்ய பக்தியின் இலக் கணம் என்று சொல்லலாம்.

**சங்ய பக்தி**

பரமேஸ்வரனைத் தம்முடைய உயிர் நண்பனாகக் கருதி ஆதிராக்கும் உபந்நியாசமே சங்ய பக்தி என்பதாகும் சுக்ரீவன்,

சுதாமி பீஷ்மா அர்ஜுனன் போன்றவர்களது பக்தியை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம்.

**மதுர பக்தி**

பகவானைத் தன்னுடைய கணவனாகக் கருதி வழிபடுதலே மதுர பக்தி ஆகும். ராதாதேவி, கோபீஸ்தர்கள், ஜயதேவ போன்றவர்களை மதுர பக்திக்கு உதாரணமாகச் சொல்லலாம்.

**வாத்சல்ய பக்தி**

இறைவனை தந்தையாகவும் மகனாகவும் கருதி வழிபடுதலே வாத்ஸல்ய பக்தி என்பதாகும். வல்லபாச்சர்ய யசோதலு போன்றவர்களை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம்.

**கீர்த்தனம்**

கீர்த்தனம் என்றால் பாடி துதித்தல் என்பது பொருள் படும். அவருடைய மகிமையான லீலைகளையும், ஆனந்த குணங்களையும் மன நிறைவோடு பாடி ஆடி கீர்த்தனம் பண்ணுதலையே பக்தி என்று சொல்லலாம். ஹரிவம்ச காவியத்தில் தேவதைகளான சிவகேசவன், மகரிஷிகள் இடம் பிடித்துக்கொண்டன. இவர் களைப்பாடி மற்றவர்கள் மூலம் சொல்ல வைத்த கவிதை மழைகளே கீர்த்தனம் என்பதாகும். கிருஷ்ணர்மேல் பலர் பலவாறு கீர்த்தனம் பாடி இருக்கின்றனர். அவர்களுள் ரிஷிகள், தேவேந்திரன், வசுந்தரா, அர்ஜுனன், கடோர்கஜன், நாரதர், ஜனார்தனன், சித்த சாத்ய கந்தர்வன் போன்றவர்கள் குறிப்பிடும்படியானவர்கள் சிவன் மீது ஸ்ரீ கிருஷ்ணன், பாணாசூரன் போன்றவர்கள் தம்முடைய கீர்த்தனைப் பக்தியை வெளிப்படுத்தினார்கள்.

**ஸ்மரணம்**

ஸ்மரணம் என்றால் தலை ஸ்நானம் செய்தல் என்பதாகும். பகவானின் திருவிளையாடல்களை அனுசரித்து வழிபாடு மேற்கொள்ளப்படுவதே ஸ்மரண பக்தியின் முதன்மையானக் கொள்கைகளாகும். இதனையும் கூட நாச்சன கோமனா அவர்கள் தம்முடைய காவியங்களில் படைத்தார். ஸ்ரீகிருஷ்ணனிடம் அர்ச்சுனன், ஜனார்த்தனன், தர்மகர்த்தாக்கள் வைத்த ஸ்மரண பக்தி, சிவனிடம் ஸ்ரீ கிருஷ்ண ஹம்சபி

பகர்கள் காட்டிய ஸ்மரண பக்தி நமக்குத் தெள்ளத் தெளி வாய் தெரிவதைக் காணலாம்.

பாத சேவனம்

மூன்று வேளைகளிலும் உடலைச் சுத்தம் செய்துகொண்டு பகவனிடம் சேவை மேற்கொண்டு ஜீவன யாதத்திரை நடப்பித் தலை பாதசேவை எனலாம். கிருஷ்ணனை தரிசித்த துர்வா சன் என்பவர் அவரைச் சேவிக்கும் போது தனக்குள்ள அபிலா சையை கோரிக்கையை வெளிப்படுத்தினர் கிருஷ்ணபாத சேவபக்தரான அவர் வெளிப்படுத்தியதனால் பாதசேவ பக்தி என்று பேர் பெற்றது.

வந்தனம்

பகவானை நமஸ்கரித்தலையே வந்தனம் என்ற பக்தியின் முதன்மை இலட்சியமாகும். முழங்காலில் நின்று இறைவனை வணங்குதல், சாஸ்ட்டாங்கமாக கீழே விழுந்து வணங்குதல், தலையை மொட்டையடித்தல் போன்றவை வந்தன பக்தி மார்கத்தில் சேர்கின்ற கிருஷ்ணபகவானிடம் பக்தி கொண் டுள்ள ருஷிகள், ஈசுவரன், தூர்வாசன் போன்றவார்கள் வந் தன என்ற பக்தியைப் பிற்பற்றியதாக 'சோமனா' என்பவர் தெரிவித்திருக்கின்றார்.

ஐக்கியம்

இறைவனை ஒரு நண்பராகக் கருதி நன்மையிலும், தீமை யிலும் அவருக்குப் பங்கு கொடுத்தொழுவது 'ஐக்கிய பக்தி' எனப்படும். நஸ்டத்தை அனுபவனிப்பனான பிராமணனின் தொழிலையும் கிருஷ்ணா-அர்ச்சுனன் தொழிலையும் 'சோமனா' என்பவர் நமக்குத் தெள்ளத்தெளிவாக நமக்குப் படம் பிடித்துக் காட்டியுள்ளார். கிருஷ்ணன் என் பெயரில் 'நரபுத்திரன்' என்ற பொருளும் இதனை அடிப்படையாகக் கொண்டு அர்ஜுன நாராயணனான கிருஷ்ணபகவானிடம் எவ்வளவோ நெருக்கமாக இருந்துள்ளதை அறியமுடிகிறது. ஆனால் கிருஷ்ண பக்தரான சோமனா என்பவருக்கு இது பிடிக்கவில்லை போலும். அர்ஜுனனது பாத்திரப்படைப்பில் கிருஷ்ணன் அர்ஜுனனது பார்வைக்கு ஒரு சாதாரண மனித னாகவே இருக்கிறான்.

ஆத்ம நிவேதனம்

கஷ்ட நேரத்தில் மனம் தளர்ந்துப் போதல், நல்ல நேரத் தில் சந்தோஷம் பொங்கியிருக்காமல் தன்னைப் பகவானிடம்

அர்ப்பணித்து விட்டு, ஒரே மனதாய் உள்ளதை ஆத்மநிவே தனம் என்பர். இதனையே 'சரகநாதி' என்றும் அழைப்பர்.

### கிருஷ்ணன் மீது மற்றவர்கள் வைத்த பக்தி

வடக்கு ஹரி வம்சத்தில் கிருஷ்ணனே கதாநாயகனாக விளங்குகிறான். சோமனா அவர்கள் அவரை சர்வசக்தி படைத்தவராகவும், சர்வலோகாதிபதியாகவும், சமஸ்தாதி பதியாகவும், துஷ்ட, சிஸ்ட இரட்சகராகவும், கருணா மூர்த்தியாகவும் மாற்றியமைத்தார். தெய்வ உருவமான கிருஷ்ணனை வடக்கு அரிவம்சத்தில் பல பாத்திரங்களில் கையாளப்பட்டார். சில அழிந்தன, பல அழிக்கப்பட்டன, பல கதைகள் மக்களிடையே பரவி புகழ் பெற்றன.

### கட்டோர்கஜன் பக்தி

கட்டோர்கஜன் என்பவர் ஒரு இராட்சதனாக இருந்தாலும் விஷ்ணுவை கடவுளாகத் தொழுபவன் விஷ்ணுவின் சிறப்பில் கவர்ந்தவன் எனவே ஒவ்வொரு நாளும், அவருடைய உரு வத்தை தியானித்து வந்தான். கிருஷ்ணரின் சிறப்பை மட்டு மல்லாது கிருஷ்ணனின் உருவத்தையும் கண்ணெதிரில் இருக்கு மாறு வருணித்தார் இராட்சதர்கள் கூட கண்ணனின் அழகில் தோற்றத்தில் மயங்கி அவர் பால் பக்தி கொண்டனர் என்பது புலனாகின்றது.

### சிவன் பக்தி

கிருஷ்ணன் சிவனின் ஆலோசனையின் பேரில் கைலாசத் திற்குச் சென்று தபசு செய்துக் கொண்டிருந்தான். தவம் பலித்தது, தெய்வம் கண் எதிரில் தோன்றினார். இவ்வுலகம் உள்ளவரை சிவன் கிருஷ்ணனை கீர்த்தனம் பண்ணினார்.

### தேவேந்திர பக்தி

ருஷிகளுக்குச் செய்தது போலவே சயிதம் நரகாசூரன் யக்ஞம் செய்தான் கொடுமையான போரில் அவரைத் தோற் கடித்து அவருடைய உடமைகளையெல்லாம் கொள்ளையடித் துக்கொண்டார். தேவக்கன்னிகளை சிறை பிடித்துக் கொண்டு வந்தார். தேவமாதர்களின் கர்ண குண்டலங்களையும், வர்ண ஓவியங்களையும் முராசு என்பவரின் மூலமாக அபகரித்துக் கொண்டார். தேவேந்திரனுக்கு அவமானம் ஏற்பட்டது.

நரன் வானத்திலேயும் கூட கேடு விளைவிக்கக் கூடும் என்று சந்தேகம் ஏற்பட்டது. ஏதும் புரியாமல் திகைத்தார். கிருஷ்ணனே இந்த ஏற்ற நேரத்தில் துணை எனக் கருதினார். அமராவதியிலிருந்து துவாரபதிக்கு வந்தார் கிருஷ்ணனை சஞ்சரித்துப் பேசி ஒப்பந்தம் செய்துக் கொண்டார். துஸ்ட நினைவுகள் ஒன்றும் இல்லையென சொன்னார். நரனின் பிடியிலிருந்து காப்பாற்றும்படி வேண்டினார் அந்த நேரத்தில் அவர் சொன்ன இரண்டு கந்த வாக்கியங்கள் இருப்பது மட்டுமேயல்லாமல் படிப்பவர்களையும் சிந்தனை யில் ஆழ்த்துகின்றது.

## பூ தேவி பக்தி

நரன் மரணமடைந்தான், தாய் இருதய மிகவும் துயருற்றது. நரனான தன்னுடைய குமாரனை காப்பாற்ற ஆயத்தமானது. பல்வேறு பூசைப்பொருள்களைக் கொண்டு வந்து படைத்தது. கிருஷ்ணனை வேண்டியது. தன்னுடைய மகனை காப்பாற்ற முடியாமல் போனதற்கு மனம் வருந்தியது. இவள் தம்முடையக் கணவனான விஷ்ணுவேக் கிருஷ்ணனை பாவித்துப் பாடுவதாகப் பாடல்கள் பல கிடைத்துள்ள புத்திரனை இழந்து சோகமானக் குரலோடு புகழ்தல், பின்னர் வேலைகளைச் சரிவரச் செய்யாததை எண்ணி வருந்துதல் போன்றவை இந்த பக்தி முறையில் அடங்கும்.

## அர்ஜுனன் - தர்மராஜு பக்தி

மிகவும் கஸ்டமான சூழ்நிலையில் பார்த்தசாரதி அவர்கள் விபுரன் வீட்டுக்குச் சென்றான் கடமையில் அந்நேரம் முழு மூச்சாக ஈடுபட்டிருக்கிறார். அச்சமயத்தில் கிருஷ்ணனுடைய நாமத்தை மனதில் சொல்லிக் கொண்டிருப்பதிலிருந்து அவர்களின் பக்தி தெள்ளாதின் விளங்கும் அர்ஜுனனுக்கு மிகுந்த கோபம் வரும் என்று உணர்ந்த கிருஷ்ணர் மந்திர உபதேசம் வழங்கலானார். அர்ஜுனன் மகிழ்ச்சியில் திளைத்தான், இந்த செய்தியை தர்மராஜுக்கு சொல்லும் போது தான் அப்பொழுதிலிருந்து எந்தக் கஸ்டங்கள், சோதனைகள் வந்தாலும் கிருஷ்ணனோடு பக்தியாக இருப்பேன்.

## மாதா பிதா பக்தி

அம்சடி பக்தர்கள் இறந்து விட்டார்கள் இராமகிருஷ்ணர்கள் கோவர்த்தனாத்ரீ செய்தார்கள். சிநேகிதர்களுடன்

சல்லாபமாகப் பேசிப் பழகுவதில் காலம் கழிந்து வந்தார்கள் இந்த செய்தி கோகுல கிருஷ்ணனுக்குத் தெரிந்தது. புத்திரனைப் பார்க்கின்ற மகிழ்ச்சியில் யசோதை நந்த கோபாலனருகில் வந்தாள். இராமகிருஷ்ணன் அவர்களை நமஸ்கரித்தான் அவர்கள் மேல் தமக்கிருக்கும் பக்தியை வெளிப்படுத்தினான் புத்திரனை அனந்தக் களிப்போடும் பார்த்தான் அவர்கள் பெரியவர்களாக வளர்ந்து விட்டபோது ராமகிருஷ்ணன் தாய்-தந்தை பக்தியை வெளிப்படுத்தி வணங்கலானார்கள் அவர்கள் அன்பான குமாரர்கள் ஆனார்கள்.

யசோதைக்கு கிருஷ்ணன் மீது மிகுந்த பாசம். அவள் கிருஷ்ணனை சிறுவயதிலிருந்து வளர்த்து பெரியவனாக்கினாள் ஒரு பக்கம் தாயின் சேவையை தீர்ப்பதில் தாமதம் இருந்தாலும் கிருஷ்ணன் தம்முடைய தாயின் மீது அளவு கடந்த பக்தியைக் கொண்டிருந்தான்.

# திருவேங்கடவன் நூற்றெட்டு திருநாமங்கள்

1 ஓம் வேங்கடேசாய — ஸ்ரீ வேங்கடேசாய நம
2 ஓம் சேஷாத்ரி நிலையாய — ,,
3 ஓம் வருஷத்ருக் கோசராய — ,,
4 ஓம் விஷ்ணவே — ,,
5 ஓம் சதஞ்ஜனகிரீசாய — ,,
6 ஓம் வ்ருஷாத்ரிபதயே — ,,
7 ஓம் மேருபத்ரகிரீசாய — ,,
8 ஓம் ஸரஸ்வாமி தபீஜுஷே — ,,
9 ஓம் குமாராகல் பஸேவ்யாய — ,,
10 ஓம் வஜ்ரித்ருக் விஷயாய — ,,
11 ஓம் ஸுவர்சலா ஸுதந்யஸ்தஸை நாபத்யடராய — ,,
12 ஓம் ராமாய — ,,
13 ஓம் பத்ம நாபாய — ,,
14 ஓம் ஸதா வாயுஸ்துதாய — ,,
15 ஓம் த்யக்தவை குண்டலோகாய — ,,
16 ஓம் கிரிகுஞ்ஜவி ஹாரிணே — ,,
17 ஓம் ஹரி சந்தன கோத்ரேந்திரஸ்வாமிநே — ,,

18 ஓம் சங்கராஜந்ய நேத்ராப்ஜ விஷயாய ..
19 ஓம் வஸுபரிகரத்ராத்ரே ..
20 ஓம் ஸ்ரீ சருஷ்ணாய ..
21 ஓம் அப்திகரயா பரிஷ் வக்தவட்சஸே ..
22 ஓம் வேங்கடாய ..
23 ஓம் ஸநகாதி மஹாயோகி பூஜிதாய ..
24 ஓம் தேவஜித்பர முகானந்ததைத்ய ஸங்கப் ரணாசிநே ..
25 ஓம் ச்வேதத்லீ பவஸந்முக்தபூஜி தாஸ்கரியுகாய ..
26 ஓம் சேஷபர்வதரூபத்வ ப்ரகாசன பராய ..
27 ஓம் ஸாதுஸ்தாபிததார்ட்சயாய ..
28 ஓம் தார்ட்சயா சல நிவாஸிநே ..
29 ஓம் மாயா கூட விமாநாய ..
30 ஓம் கருடஸ் கந்தவாஸிநே ..
31 ஓம் அனந்தசிரஸே ..
32 ஓம் அனந்தாட்சாய ..
33 ஓம் அனந்த சரணாய ..
34 ஓம் ஸ்ரீசைல நிலயாய ..
35 ஓம் தாமோதராய ..
36 ஓம் நீலமேக நிபாய ..
37 ஓம் ப்ரஹ்மாத தேவதுர்தர் சவிச்வரூபாய ..
38 ஓம் வைகுண்டாக தஸத்தேமவிமா நாநதர் கதாய ..
39 ஓம் அகஸ்த்யாப்யர்தி தாசேஷ ஜனத்ருத் கோசராய ..
40 ஓம் வாஸுதேவாய ..
41 ஓம் ஹரயே ஸ்ரீ ..
42 ஓம் தீர்த்த பஞ்சக வாஸிநே ..
43 ஓம் வாமதேவப்ரியா ..
44 ஓம் ஜநகேஸ்ட ப்ரதாய ..
45 ஓம் மார்கண்டேய மகா தீர்த்த ஜாத புண்ய ப்ரதாய ..
46 ஓம் வாக்பதிப்ரஹ்மதாத்ரே ..
47 ஓம் சந்திரலாவண்ய தாயிநே ..
48 ஓம் நாராயண நகேசாய ..
49 ஓம் ப்ரஹ்மகலுப் தோத்ஸ வாய ..
50 ஓம் சங்க சக்ர வராநம் ரலஸத்கர தலாய ..
51 ஓம் த்ரவர்ப்ரு கமதாஸக்த விக்ரஹாய ..

52 ஓம் கேசவாய ..
53 ஓம் நித்யயௌவன மூர்த்தியே ..
54 ஓம் அர்த்தி தார்த்தப்ர தாத்ரே ..
55 ஓம் விச்வதீர்த்தாக ஹாரிணே ..
56 ஓம் தீர்த்தஸ் வாமிஸரஸ் னாதஜநாபீஷ்
டப்ரதாயிநே ..
57 ஓம் குமாரதாரிகா வாஸஸ் கந்தா
பீஷ்டப்ரதாய ..
58 ஓம் ஜானுதக்ன ஸமுத்பூத போத்ரிணே ..
59 ஓம் கூர்ம மூர்தயே ..
60 ஓம் கிந்நரத் வந்த்வ சபாந்த ப்ரதாத்ரே ..
61 ஓம் விபவே ..
62 ஓம் வைகானஸ முனிச்ரேஷ்ட பூஜிதாய ..
63 ஓம் ஸிம்ஹாசல நிவாஸய ..
64 ஓம் ஸ்ரீமந் நாராயணாய ..
65 ஓம் ஸத்பக்த நீலாண்டார்ச்யந்
ருஸிம்ஹாய ..
66 ஓம் குமதாட்ச கணச்ரேஷ்ட ஸைநாபத்
யப்ரதாய ..
67 ஓம் துர்மேத ப்ராண ஹர்த்ரே ..
68 ஓம் ஸ்ரீதராய ..
69 ஓம் சட்த்ரியாந்தக ராமாய ..
70 ஓம் மதஸ்யரூபாய ..
71 ஓம் பாண்டவாரிப்ர ஹர்த்ரே ..
72 ஓம் ஸ்ரீகராய ..
73 ஓம் உபத்யகாப்ர தேசஸ் தசங்கரத்யாத
மூர்தயே ..
74 ஓம் ருக்மாப்ஜக ஸரஸீகூல லட்சுமீக்ருத
தபஸ்விநே ..
75 ஓம் லஸல்லட்சுமி கரம்போஜ தத்த
கல்ஹார கஸ்ரஜே ..
76 ஓம் ஸாளக்ராம நிவாஸாய ..
77 ஓம் சுகத்ருக் கோசராய ..
78 ஓம் நாராயணர்திதாசேஷ ஜனத்ருக்
விஷயாய ..
79 ஓம் ம்ருகயாரஸிகாய ..
80 ஓம் வ்ருஷபாஸுர ஹாரிணே ..
81 ஓம் அஞ்ஜனா கோத்ரபதாய ..
82 ஓம் விருஷபாசல வாஸிநே ..
83 ஓம் அஞ்ஜனாஸுத தாத்ரே ..

84 ஓம் மாதவீயாக ஹாரிணே ,,
85 ஓம் ப்ரியங்கு ப்ரியபட்சாய ,,
86 ஓம் ச்வேத கோலவராய ,,
87 ஓம் நீலதேனு பயோதாராஸே கதேஹோத்
பவாய ,,
88 ஓம் சங்ரபரியமித்ராய ,,
89 ஓம் சோளபுத்ரப்ரியாய ,,
90 ஓம் ஸுதர்மிணி ஸுசைதன்ய ப்ரதாத்ரே ,,
91 ஓம் மதுகாதிநே ,,
92 ஓம் கிருஷ்ணாக்ய விப்ரவேதாந்த
தேசிகத்வ ப்ரதாய ,,
93 ஓம் வராஹாசல நாதாய ,,
94 ஓம் பலபத்ராய ,,
95 ஓம் த்ரிவிக்ரமாய ,,
96 ஓம் மஹதே ,,
97 ஓம் ஹ்ருஷீகேசாய ,,
98 ஓம் அச்யுதாய ,,
99 ஓம் நீலாத்ரி நிலயாய ,,
100 ஓம் ட்சீராப்தி நாதாய ,,
101 ஓம் வைகுண்டாசல வாஸிநே ,,
102 ஓம் முகுந்தாய ,,
103 ஓம் அனந்தாய ,,
104 ஓம் விரிஞ்சாப்யர் திதாநீத ஸௌம்
யருபாய ,,
105 ஓம் ஸுவர்ண முகரீஸ்னா தமனுஜா
பீஷ்ட தாயிநே ,,
106 ஓம் ஹலாயுத ஜகத்தீர்த ஸமஸ்த
பலதாயிநே ,,
107 ஓம் கோவிந்தாய ,,
108 ஓம் ஸ்ரீநிவாஸாய ,,

# திருவேங்கடேசன்
# 108 திருநாமங்களும் வல்லமைகளும்

### 1. ஓம் வேங்கடேசாய ஸ்ரீ வேங்கடேசாய நம

ஸ்ரீ வேங்கடேச என்கிற முதல் திரு நாமத்திற்கு 'வேங்கடம்' எனப்படும் திருமலைக்கு அரசன் என்று பொருள். எல்லா உயிரினங்களுக்கும் தலைவனாய் விளங்குபவன் என்றும் கொள்ளலாம். ஒரு தனிப்பட்ட புனித இடத்தை இறைவன் கொண்டு விளங்குவதால் இத் திருமலைக்கு உள்ள பெருமை மிக உயர்ந்தது. எனலாம். இறைவனாலும், பக்தர்களாலும் விரும்பி அடையப்பட்ட திவ்விய புண்ணியஸ்தலத்தின் பெருமை மிக உயர்ந்தது என்று வால்மீகியும் பாடியுள்ளார் ஆக பெருமாளுக்குள்ள பெருமை அவன் வசிக்கும் இடத்திற்கும் உண்டு என்ற கொள்கையின் அடிப்படையில் இப்பெயர் வந்தது என்பது வெள்ளிடை மலை.

### 2. ஓம் சேஷாத்ரிநிலயாய ஸ்ரீ வேங்கடேசாய நம

திருமலைக்கு சேஷாத்ரி என்றும் காரணப் பெயருண்டு. ஒரு காலத்தில் இறைவனை வணங்குவதற்கு நாதை முனிவர் சென்றபோது நான் வசிகத் தகுந்த இடத்தை கூறுவாயாக என்று பகவானால் ஏவப்பட்ட ரிஷி ஒருவர் சுவர்ணமுகி நதிக் கரையைச் சொல்ல, பகவானும் பக்கத்திலிருந்த ஆதி சேஷனைப் பார்த்து ''நீ ஒரு மலையாக உருவெடுத்து அந்த இடத்தில் அமையக் கடவீர்; நாங்கள் அங்கு சர்வ ஜனங்களோடும், உயிரினங்களோடு வந்து தங்குவோம் என்று உத்தர விட்டார். ஆதிசேஷனும் உடன் பணிந்தார். ஆதி சேஷனே இம்மலை உருவாய் அமைந்ததால் இதற்கு சேஷாத்ரீ என பெயர் வந்தது என்பர் இப்போதும் பார்ப்பதற்கு பாம்பு உருவாகவே மலை காணப்படுகின்றது.

### 3. வருஷத்ருக் கோசராய ஸ்ரீ வெங்கடேசாய நம

வைவஸ்வதமனு இந்த உலகங்களை ஆட்சி செய்துக் கொண்டிருக்கையில் தர்மன் என்கிற மானிடன் இந்த திரு மலைகரு வந்து வராஹப் பெருமாளைக் குறித்து விசேஷமாய் தபசு செய்தார். இவருக்கு வருஷன் என்று பெயர். (வருஷன் என்றால் தர்மம் என்று பொருள்) இவர் தவஸ் செய்து போது தர்மம் விசேஷமாய் வளர்ந்தது பிறகு வராஹ மூர்த்தி ப்ரத் யட்சமாய் வந்து ஓ தர்மரே நீர் தபஸ் செய்து அதனால்

தர்மம் விசேஷமாய் வளர்ந்தகால் இம்மலைக்கு 'வ்ருஷாத்ரி' என்று உம்முடைய பெயராலே விளங்கக் கடவது என்றும் உமக்கும் உலகச் சம்பந்தமான பதவி கிடைக்கக்கூடும் என்றும் வரம் கொடுத்தார். அன்று முதல் இப்பெயர் விளங்கலாயிற்று.

### 4. ஓம் விஷ்ணவே ஸ்ரீ வேங்கடேசாய நம

''விஷ்ணு ஸகஸ்கார நம'' என்று இத்திருநாமத்தை இட்டே பெயரமைந்தது. அத்தோத்திரத்தில் பெருமாளுக்கு முதல் திருநாமமாய் அமைந்தது 'விச்வம்' என்பது சர்வ பஞ்சரூபி பகவான் என்று பொருள் சர்வ ப்ரபஞ்சரூபியாக அவன் ஆவதற்கு அவன் விஷ்ணுவாயிருப்பதே முக்கியக் காரண மென்பதை உணர்த்துவதற்கு விஷ்ணு என்கிற இரண்டாவது திருநாமம் ஏற்பட்டது, அதாவது எல்லா பொருட்களிலும் அவன் வியாபித்து ஆத்துமாவாயிருப்பதால் எல்லா பொருட்களும் அவனுக்கு சரீரமாய் அமைவதால் சர்வ பிரபஞ்ச ரூபியாய் அவன் திகழ்கிறான் என்று பொருள்.

### 5. ஓம் ஸதஞ்ஜனகிரீசாய ஸ்ரீ வேங்கடேசாய நம

அனுமானின் தாயான அஞ்சனா தேவி நீண்ட காலமாக தபசு செய்து ஆஞ்சனேயன் என்கிற அனுமானை இந்த திருமலையில் பெற்ற படியால் அவள் பெயராலேயே அஞ்சன மலை என்று பெயர் பெற்றது. அப்படி அஞ்சனா தேவியின் மன நிலையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்து வைக்கும் படியான ப்ராபாவம் வாய்ந்த புண்ணிய க்ஷேத்ரமான இவ்வஞ்ஜன மலைக்கு அரசனான ஸ்ரீ வெங்கடேசனை நமஸ்கரிக்கிறேன் அல்லது சரணமடைகிறேன் என்று இத் திருநாமத்திற்குப் பொருள்.

### 6. ஓம் வ்ருஷாத்ரிபதயே ஸ்ரீவேங்கடேசாய நம

இத்திருமலைக்கு 'வருஷாத்ரி' என்று பெயர் ஏற்பட்டதற்கு புராணத்தில் கூறியுள்ள காரணத்தை மூன்றாவது திருநாம வியாக்கியானத்தில் கூறப்பட்டுள்ளது. 'வருஷன்' என்கிற மனிதன் இத் திருமலையில் தபசு செய்து சித்தி பெற்றார் ஆகையால் இம் மலைக்கு அவர் பெயரிலேயே க்ருத யுகத்தில் புகழ் ஏற்பட்டதாய் அங்கு கூறப்பட்டிருக்கின்றது. அப்படி அவர் சித்தி பெற்றதற்கு இம்மலையாகிய திவ்விய க்ஷேத்திரத்தின் ப்ராபவமே காரணம், தர்ம உருவமே

இம்மலை வடிவத்தில் உள்ளது. ஆகையால் இது தர்ம ஸ்தலம் என்றும் இதில் தபசு செய்த காலத்தில் விசேஷமாய் தர்மங்களுக்கு அபிவிருத்தி ஏற்பட்டதென்றும் அவரும் வரம் பெற்றார் என்றும் இதெல்லாவற்றிருக்கும் காரணம் 'க்ஷேத்ர ப்ரபாவமே' என்றும் கொள்ளலாம்.

7. ஓம் மேருபுத்ரகிரீசாய ஸ்ரீ வேங்கடேசாய நம

ஆதி சேஷனுக்கும் வாயு பகவானுக்கும் ஏற்பட்ட போட்டியில் மேருவின் புத்திரனான இம்மலை அம்மேரு பர்வதத்தின் சமீபத்திலிருந்து பெருமானுடைய சங்கல்பத்தால் வாயு பகவானால் ஆதி சேஷனோடுகூட சேர்ந்து இங்கு சுவர்ணமுகி கரைக்கு அடித்துக் கொண்டு வந்து தள்ளப் பட்டது. அப்படிப்பட்ட இம்மலையில் பக்தர்களை அனுக் கிரக்க பகவான் நித்திய வாசம் செய்கிறான். இம்மலையை மேரு புத்ரன் என்று சொல்வதால் மேருவுக்குள்ள ஆபிஜாத் யம் ஸர்வ பர்வத ச்ரேஷ்டத்வம் முதலிய அனேக குணங்கள் இம்மலைக்கும் உள்ளது என்பதாகும்.

8. ஓம் ஸரஸ்ஸ்வாமித டீஜுஷே ஸ்ரீ வேங்கடேசாய நம

உலகிலுள்ள எல்லா சரஸ்ஸுகளுக்கும் சுவாமியாய் விளங் கும் சுவாமி புஷ்கரிணியின் கரையை, அடைந்து வசிக்கும் ஸ்ரீ வெங்கடேஸ்வரனை சரணமடைகிறேன் என்று இதற்குப் பொருள்.

திருமலையில் பெருமாள் சன்னதிக்கு பக்கத்திலிருக்கும் புஷ்கரிணிக்கு சுவாமி புஷ்கரிணி என்று பெயர். இதன் பெருமை பல புராணங்களில் பலவாறு பாராட்டப்பட்டுள்ளது. உலகி லுள்ள சர்வபுண்ய தீர்த்தங்களுக்கும் இது அதிபதியாய் விளங்கு வதால் இது சுவாமி புஷ்கரிணி எனப்படுகின்றது.

9. ஓம் குமாராகல் பஸேவ்யாய ஸ்ரீ வேங்கடேசாய நம

சுப்பிரமண்யன் என்கிற குமார சுவாமியால் இந்த கல்பம் முடியும் வரையில் சேவிக்கப்படுகின்ற ஸ்ரீ வெங்கடேசுவரனைச் சரணமடைகிறேன் என்பது பொருள்.

தேவசேனாதிபதியான ஸ்ரீ குமாரசுவாமி தாரகாஸுரனை வதம் செய்ததால் தனக்கு 'ப்ரஹ்மஹத்யா' என்கிற தோஷம் ஏற்பட அதைப் போக்கிக் கொள்ள, தன் தகப்பனான சிவ பெருமானை உபாயம் கேட்டார், அவர் ஸ்ரீ வெங்கடேசா

ஷ்டாட்சரீ மந்திரத்தை உபதேசித்து வேங்கடேச மலையில் உள்ள குமார தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து இம் மந்திரத்தை ஜெபித்துக் கொண்டு தபசு செய்யக் கடவாய் என்று கட்டளையிட அக்கட்டளையின்படி குமாரசுவாமி இத்திரு மலையில் குமாரதாரை என்கின்ற தீர்த்தத்தின் கரையில் நியமத்துடன் தபசு செய்ய அவர் சிந்தித்தபடி ஸ்ரீ நிவாஸன் ப்ரத்யட்சமாய் வந்து அவருக்கு வரம் கொடுத்து இந்த கல்பம் முடியும் வரையில் இந்த இடத்திலேயே என்னை பூஜித்துக் கொண்டு நீ வசிக்கக் கடவாய் என்று சொல்லி அவரை கையால் தடவிக்கொடுத்தார். அப்படியே இன்றளவும் குமார சுவாமியால் பூசிக்கப்படும் ஸ்ரீ வெங்கடேஸ்வரனை சரண மடைகிறேன் என்று இத்திரு நாமத்தின் பொருளாகும்.

10. ஓம் வஜ்ரித்ருக் விஷயாய ஸ்ரீ வெங்கடேசாய நம

வஜ்ராயுத மேந்திய தேவேந்திரன் கண்களுக்கு பரத்யட்ச மாகிய ஸ்ரீ வெங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பது பொருள்.

தேவேந்திரன் கௌதம மகரிஷியின் பத்தினியிடத்தில் அபசாரம் செய்த போது அம்மகரிஷியால் ஒரு யோனிக்கு ஆசைப்பட்டு வந்த உன் உடலெல்லாம ஆயிரம் யோனிகள் உண்டாகுக என்று சபிக்கப்பட்டு உடலெல்லாம் ஆயிரம் யோனிகள் உண்டாகியது. அதனால் வெட்கிமேரு பர்வதத்தில் தாமரைத் தண்டில் ஒளிந்து வாழ்ந்து வந்தான்' தேவர்களும் இந்திராணிகளும் ப்ருஹஸ்பதியின் உதவியால் இந்திரனை வெளிக் கொணர்ந்தனர். தேவகுரு புருஷாவயவமாய் மாறி விடும்படி உபாயம் செய்தார். இவ்விகார ரூபத்தைப் போக்கிக் கொள்ள திருமலையில் விஸ்வசேனா தீர்த்தத்திற்கு கீழ் வஜ்ராயுதத்தால் பூமியைப் பிளந்து பாதாளத்திலிருந்து தீர்த்தத்தை வர வழைத்து அதில் ஸ்னானம் பூசை முதலியவைகளைச் செய்யும் போது வராக ரூபிண பெருமாள் காட்சி யளித்ததால் இந்திரன் பழைய உண்மை உருவத்தை அடைந்தார்.

11. ஓம் ஸுவர்சலாஸுத ந்யஸ்தஸை நாபத்ய பராய ஸ்ரீவேங்கடேசாய நம

கிரகயுகத்தில் குந்தளை என்கிற அப்ரஸ்தூர்வா மகரிஷியின் சாபத்தால் 'சுவர்சலை' என்ற பெண்ணாகப் பிறந்தாள் ஒரு நாள் நர்மதைக் கரையில் வருணபகவான் அவள் அழகில் ஈடுபட்டு கர்ப்பம் உண்டாக்கினார். குழந்தைப் பிறந்து 103

வது வயதில் தாயார் இறந்து விட்டாள்; பின்னர் இவர் மகரிஷியிடம் சரணமடைந்து 12 வருட காலம் தபசு செய்து பகவானின் அருளைப் பெற்று சேனாதிபதி பதவியில் நியமிக்கப்பட்டு, நாராயணாத்ரியில் நிருருதி திக்கில் ஸர்வ பரிவாரங்களுடன் வசித்து வருகிறார்.

இப்படி ஸூவர் சலையின் பிள்ளையான விஷ்விக்சேனரிடத்தில் 14 உலகங்களுடைய நிர்வஹண பாரத்தை ஒப்படைத்த வெங்கடேசனை சரணமடைகிறேன் என்று இத்திருநாமத்திற்குப் பொருள்.

12. ஓம் ராமாய ஸ்ரீ வேங்கடேசாய நம

தசரத சக்ரவர்த்தி தனக்குப் பிள்ளை பேறு வேண்டுமென்று இம்மலையில் ஸ்ரீநிவாசனைக் குறித்து தபசு செய்து பெருமாளை நான்கு சுலோகங்களால் அவனை தோத்திரம் செய்து ஸ்ரீநிவாசனுடைய அம்சமான நான்கு புத்திரர்களை அடைந்ததாய் சொல்லப்படுகின்றது. ஆக ஸ்ரீராம ஸ்வரூபியான ஸ்ரீவெங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்திற்குப் பொருள்.

13. ஓம் பத்மநாபாய ஸ்ரீ வேங்கடேசாய நம

தசரதனுக்கு வரமளித்த ஸ்ரீநிவாசனை இத்திருமலையிலே நிற்கச் செய்து பக்தர்களுக்கு எல்லா நன்மைகளையும் வழங்கி வரவேண்டுமென்று நான்முகன் வேண்டிக் கொண்டதாகவும் எல்லா உலகங்களையும் படைத்த நான்முகனும் இந்த ஸ்ரீநிவாசனால் படைக்கப்பட்டவன் என்றும் இத் திருநாமத்தில் சொல்லப்படுகின்றது. பரம புருஷனுடைய உந்தியில் ஒரு தாமரைப் புஷ்பம் உண்டானதென்றும் அதில் நான்முகன் உண்டானான் என்பதும் பிரமாணங்களால் ஏற்படுகின்றது;

14. ஓம் ஸதா வாயுஸ்துதாய ஸ்ரீ வேங்கடேசாய நம

சேஷாசலத்தில் வாயு பகவான் ஆயிரம் வருடம் காலம் உக்ரமான தபசு செய்தார். இறுதியில் ஏற்பட்ட ஆனந்தத்தில் மெய் மறந்து வாயு பகவான் பெருமாளைக் குறித்து 64 சுலோகங்களால் மிக அழகாய் ஸ்தோத்திரம் செய்தார்; இதற்கு வாயு பகவானை வரம் வேண்டிக் கொள்ளும்படி கேட்க, வாயுவும் வரம் தனக்கு வேண்டியது இல்லை என்றும் பகவானுடைய சந்நிதியில் தான் எப்போதும் இருக்க விரும்பு

ஷதாகவும் வேண்டினார். இவ்வாறாக வாயு பகவானால் உயர்ந்த வேதாந்தார்த்தங்களைப் பொழியும் வாயு கீதையில் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட ஸ்ரீ வேங்கடேசனைச் சரண மடைகிறேன் என்று இத்திருநாமத்தின் பொருளாகும்.

15. ஓம் த்யக்த வைகுண்ட லோகாய
ஸ்ரீ வேங்கடேசாய நம

விடப்பட்ட வைகுண்ட லோகத்தையுடைய ஸ்ரீ வேங்க டேசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்திற் குரியப் பொருளாகும்.

16. ஓம் கிரிகுஞ்ஜவிஹாரிணே ஸ்ரீ வேங்கடேசாய நம

வேங்கட மலையிலுள்ள லதா மண்டபங்களின் வசிக்கும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திரு நாமத்திற்குரியப் பொருளாகும்.

இந்த இரண்டு திருநாமங்களையும் சேர்த்து அநுபவிப்பது யுக்தம். முதல் திருநாமத்தில் பரம புருஷன் வைகுண்டத்தை விட்டுவிட்டான் என்று சொல்லப்படுகின்றது. வைகுண்டத்தை விடுவது இந்த திருமலையில் வசிக்கவேண்டும் என்ற விருப்பத் தால் ஏற்பட்டதுதான். ஆக அதைவிட்டு இந்த மலையில் மிகவும் ரமணீயமான உயர்ந்த வனங்களில் வசிக்கிறான் என்று திருநாமம் தெரியப்படுத்துகிறது.

17. ஓம் ஹரிசந்தன கோத்ரேந்திரஸ்வாமினே
ஸ்ரீ வேங்கடேசாய நம

திருமலையில் ஹரிசந்தனம் எனப்படும் உயர்ந்த சந்தன மரங்கள் இப்போதும் ஆயிரக்கணக்கில் உள்ளன. அப்படிப் பட்ட சந்தனக் காட்டில் குளிர்ச்சிக்கும், வாசனைக்கும் குறையில்லை என்று பத்மபுராணம் கூறுகிறது. எனவே ஹரிசந்தன மரங்களால் நிறைந்த பர்வத சிரேஷ்டமான வேங்கட மலைக்கு அரசனான ஸ்ரீ வேங்கடேசனைச் சரண மடைகிறேன் என்பது இத்திருநாமத்திற்குரிய பொருளாகும்.

18. ஓம் சங்கராஜந்யநேத்ராப்ஜ விஷயாய
ஸ்ரீ வேங்கடேசாய நம

ஹைஹய குலத்தில் சருகன் என்கிற அரசனுக்குச் சங்கன் என்ற குமாரன் இருந்தான். அவன் விஷ்ணு பக்தி உடையவன்;

அவன் பகவானை நேரில் காணும் பொருட்டு அநேக யாகங்களைச் செய்தான். ஆனாலும் பகவான் காட்சியளிக்க வில்லை. அவன் வருத்தமாக இருந்த நேரத்தில் பகவான் அசரீரி வாக்கினால் ''நாராயணாத்ரி'' எனப்படும் வேங்கட மலையில் புஷ்கரணியில் 1000 வருட காலம் தபசு மேற் கொண்டால் சேவை கிடைக்கும் என சொல்ல; அவரும் அப்படியே செய்ய 1000 வருடங்கள் முடியும்போது பகவான் காட்சியளித்து'' கல்பம் முடியும் வரையில் சொர்க்கலோகத்தில் அங்குள்ளவர்களால் பூஜிக்கப் பட்டவனாய் சுகமாய் வசிக்கக் கடவாய் என்று வரமளித்தார். அவன் கேட்டது மோட்சம் இவர் அளித்தது சொர்க்கம், இப்படி சங்க மகாராஜாவின் கண்களுக்கு காட்சியளித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரண மடைகிறேன் என்று இத்திருநாமத்தின் பொருள்.

19. ஓம் வஸு பரிசரத்ராத்ரே ஸ்ரீ வேங்கடேசாய நம

'உபரிசரன்' என்கிற அரசன் விஷ்ணு பக்தனாய் இருந்தான், ஒரு நாள் தேவர்களும், ரிஷிகளும் அரசனிடத் திற்கு வந்து பசுபட்சம் சிறந்ததா, ஔஷதி பட்சம் சிறந்ததா என்று கேட்க, தேவர்களின் முக்கியத்துவத்தையும், உயர்வை யும் மனதில் நினைத்து பசுபட்சம் தான் சிறந்தது அதாவது பசுவைக் கொண்டு யாகம் செய்வதுதான் சாஸ்திர சம்மதம் என்று தேவர்கள் பட்சத்தை ஆதரித்தான். இதைக் கேட்ட ரிஷிகள் சாபமிட்டதின் பலனால் பாதாள லோக தில் விழுந்து விட்டான் அரசன். பாதாளத்தில் விழுந்துவிட்ட போதி லும் விஷ்ணுவை எப்போதும் பிரார்த்தனைப் பண்ணிக் கொண்டிருந்தான் விஷ்ணு அவனை மீட்டு மறுபடியும் அவனை அரசனாக்கினார் இப்படியாக மகா பாகவதனான உபரிசரனைக் காப்பாற்றிய ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடை கிறேன் என்பது இதன் பொருளாகும்.

20. ஓம் ஸ்ரீ கிருஷ்ணாய ஸ்ரீ வேங்கடேசாய நம

கீழ் திருநாமத்தில் உபரிசரவஸு ஸ்ரீ கிருஷ்ணனையே தியானித்ததாக புராணத்தில் கூறப்பட்டுள்ளது. ஆக அந்த கிருஷ்ணனும் இந்த வேங்கடேசனே என் இத்திருநாமம் கூறு கின்றது. மேலும் வைணவ ஆச்சாரிகளுடைய வழக்கத்தில் ஸ்ரீ ரங்க நாதனை இராமனாகவும், திருவேங்கடமுடை யானைக் கிருஷ்ணனாகவும், காஞ்சி தேவ பெருமானை இராமகிருஷ்ணப்பய ரூபியாகவும் அனுபவிப்பது வழக்கமா யுள்ளது.

### 21. ஓம் அப்திகந்யாபரிஷ் வக்தபட்சசே ஸ்ரீ வேங்கடேசாய நம

ஒரு காலத்தில் பரதேவதை எது என்கிற ரிஷிகளின் சந்தேகத்தைத் தீர்க்க நாராயணனின் மார்பில் எட்டி உதைத்தார். 'மிகவும் கடினமான என் மார்பில் உதைத்ததால் தங்கள் பாதத்திற்கு எவ்வளவு நோவு ஏற்பட்டதோ' என்று வருத்தி உபசாரங்கள் செய்தார். நாராயணனே பரமதேவன் என்றும் நிர்ணயித்தார். பின்னர் மகாலட்சுமியிடம் 12 ஆண்டுகள் தபசு செய்ய அதன் பயனால் தாமரைப் பூவில் தோன்றினார். இப்படியாக ஸ்ரீநிவாசனின் தயைக்குப் பாத்திரமாகி அவரவர்கள் கோரிய பலனை இக்கலியுகத்திலடைவது இப்படி மகாலட்சுமியினால் ஆலிங்கனம் செய்துக் கொள்ளப் பட்ட ஸ்ரீ வெங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பது இத் திருநாமத்திற்குப் பெயராகும்.

### 22. ஓம் வேங்கடாய ஸ்ரீ வேங்கடேசாய நம

பரம புருஷன் சர்வ புருஷாத்தங்களை அளிப்பதும் முமுசூக்களின் சர்வ கர்மங்களை தொலைப்பதும் பிராட்டியின் தன்மையாகும். வேங்கடம் என்ற சொல் திருமலையைச் சொல்லும்போது அதற்குள்ள பொருளை முதல் திருநாமத்தில் கூறப்பட்டுள்ளது. இங்கு இச்சொல் ஸ்ரீநிவாசனையே நேராகவே சொல்லக் கூடுமாதலால் அவனுக்கே இது திருநாமமாகலாம் என விளக்கப்படுகிறது. 'வேம்' என்றால் தக்தமாம் கடங்கள் • என்றால் ருணவித் ப்ரதி பந்தங்களான கர்மங்கள். இத்தன்மை பகவானுக்கே நன்கு பொருந்துகிறது. புராணங்கள் வேங்கடம் என்ற சொல்லுக்கு ஐஸ்வர்யம், மோட்சம் என்ற பொருளைத் தருகிறது. எனவே அவரவர் விருப்பப்படி எல்லோருக்கும் ஐஸ்வர்யத்தையும், மோட்சத்தையும் அளிப்பவன் வேங்கடவன் என்று கொள்ளலாம்.

### 23. ஓம் சனகாதிம ஹாயோகிபூஜிதாய ஸ்ரீ வேங்கடேசாய நம

பகவானுடைய உத்தம குணங்களானால் ஏற்படும் சாது சம்ரட்சணம், துஷ்க்ருதி விநாசனம் என்ற இரண்டு க்ருத்யங்கள் அடையவே இத்திருநாமத்தில் பேசப்படுகிறது. இதற்கு மூலகாரணம் பிராட்டியவர்கள். பிராட்டியின் இசைவால் நாசம், ரட்சணருபமாகவே அமையுமென்கிற சாஸ்திர

மகாலட்சுமியுடன் அங்கு தங்குவேன்' என்றார். ஆதிசேடனும் பணிந்தது. இதை அனுசரித்து எழுந்ததே இத்திருநாமம் ஆகும்.

27. ஓம் ஸாநுஸ்தாபித்தார்க்ஷ்யாய
ஸ்ரீ வேங்கடேசாய நம

நித்ய சூரிகளாகத் திகழும் கருடாத்வானின் பக்தி இங்கு வர்ணிக்கப்படுகிறது. பெருமாள் வெகு காலம் வேங்கட மலையிலேயே எழுந்தருளியிருந்து அதைவிட்டு வராமையைக் கண்ட கருடன் இந்த வேங்கட மலையைப் பெயர்த்து அப்படியே எடுத்துக்கொண்டு போய் விஷ்ணு லோகம் சேர்க்கக் கடவேன் என்று எண்ணினார். இவ்வெண்ணத்தை அறிந்த பகவான் புன் சிரிப்புடன் கருடனைப் பார்த்து "மிக பலசாலியான பட்சி ராஜரே! ஜகத்தை இரட்சிக்க வேண்டி இருப்பதால் இந்த கல்பம் முடியும் அளவும் நான் இங்கு வசிப்பதாய் நிச்சயித்துள்ளேன். நீயும் ஆதிசேஷனுடன் இங்கேயே வசிக்கக் கடவாய் இம்மலையின் எதற்கு தாழ்வாரத்தில் நித்ய வாசம் செய்யக் கடவீர் என்று உத்தரவிட்டு, ஆதிசேஷனை அழைத்து நீயும் மலையுருவத்தில் கருடாழ்வாரைத் தாங்கிக்கொள் என்று சொன்னார். திருமலையின் தாழ்வரையில் கருடாழ்வானை நிலைசிக்கச் செய்த வேங்கடேசனைச் சரணடைகிறேன் என்பது இத்திருநாமத்திற்கு பொருத்தமாம்.

28. ஓம் தார்க்ஷ்யாசல நிவாஸிநே ஸ்ரீ வேங்கடேசாய நம

ஸ்ரீ பகவத் ராமானுஜர் ஸ்ரீநிவாசனை வேத சிரஸ்ஸில் பிரகாசிப்பதாய் கூறியுள்ளார். வேத சிரஸ்ஸாவது வேதாந்தம், பரப்ரஹ்மம் என்கிற ரூபத்தில் பரம புருஷன் வேதாந்த ப்ரதி பாத்யனாகினும், ஸ்ரீநிவாசன் என்கிற ரூபத்தில் வேத சிரஸ்ஸில் எங்கு பிரகாசிக்கிறான் என்கிற சிறிய கேள்விக்கும் 'வேதாத்மா விஹகேச்வர' என்ற தொடர் விடையளிக்கிறது இம்மலை வேத மலையாதலால் இதன் உச்சியில் பிரகாசித்தால் வேத சிரஸ்ஸில் பிரகாசித்தாகிறதன்றோ ஆக இந்த வேங்கட மலை வேத வெற்பாய் விளங்குவதால் இதன் சிரஸ்ஸில் ப்ரகாசிக்கும் ஸ்ரீ நிவாசன் என்கிற ப்ரஹ்மத்தினிடம் எனக்கு உயர்ந்த பக்தியுண்டாகட்டும் என்று ஸ்ரீ பகவத் ராமானுஜர் பிரார்த்தித்தது. இத்திருமலைக்கு அதிபதியான ஸ்ரீ நிவாசனையே குன்றின்மேல் இட்ட விளக்கு எப்படி எல்லோருக்கும் பிரகாசம் அளிக்கிறதோ அப்படியே வேதத்

குன்றின் உச்சியில் விளங்குபவன் எங்கும் பிரகாசிக்கிறான். இப்படி சர்வவேத வேதாந்த ப்ரதிபாத்யான ஸ்ரீவேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்று இத்திருநாமத்தின் பொருளாகும்.

29. ஓம் மாயாகூடவிமாநாய ஸ்ரீ வேங்கடேசாய நம

பல காலம் சுவாமி வேங்கட மலையில் புஷ்கரிணிக் கரையில் வசித்து வந்த போதிலும் அதுவரையில் கண்டறியாத ஒரு அற்புதமான விமானத்தைக் காண்கிறார்கள். இறைவன் இதுகாலம் விமானத்தைத் தமது சக்தியால் மறைத்து வைத்திருக்க வேண்டும் என்று பல இடங்களில் பேசப்பட்டது. விமானம் முதலில் காணப்படாமைக்கும், பின்னர் கண்டதற்கும் ஜனகர் கேள்வி எடுப்ப! இந்த மகரிஷிகள் என்னையும், என் விமானத்தையும் தேடிக்கொண்டு வசிக்கவேண்டும் என்கிற எண்ணத்தாலேயே சர்வேஸ்வரன் அப்படி செய்தான். பிறகு 12 வருட காலம் இவ்விமானத்தைக் சேவித்துக்கொண்டு இருக்கையில் ஒரு வினாடி விமானம் மறைந்துவிட்டது. இதனால் ஆச்சர்யம் அடைந்தார்கள். இக்கதைகள் எல்லாம் யுகாந்தரத்தில் நடந்தவை. விமானம் பெருமானுடைய, சங்கல்பத்தால் மறைந்தது. யாராவது ஒருவர் மாகத்தும தபசு செய்து சித்தி அடைந்தால் விமானத்தைக் காணமுடியும் ஆனால் வரும் கலியுகத்தில் எல்லோரும் காணும்படியாக ஸ்ரீநிவாசப் பெருமானுடன் கூடி விளங்கப் போகிறது. ஆகையால் எவனும் இம்மலைக்கு வந்து இவ்விமானத்தை ஒரு முறையாவது சேவித்தால் நற்கதியடையலாம் என்பதற்கு அனுகூலமாய் விமானத்துடன் இங்கு சன்னித்யம் செய்யக்கடவோம் என்கிற சீனிவாசனுடைய பரமகருணையே என்பது ஆகும்.

30. ஓம் கருடஸ்கந்தவாஸிகே ஸ்ரீ வெங்கடேசாய நம

வெகு காலம் தபசு செய்த சங்கராஜனுக்கும் மற்றும் அங்கு வந்து கூடிய அகஸ்தியர், பிரம்மா, ருத்திரன், சுக்கிராச்சாரியார், ப்ருஹஸ்பதி, சவேதத் விபவாஸிகளான முக்தர்கள், பல்மஹர்ஷிகள், முதலியோருக்கும் முதலில் பெருமாள் ஆசிர்வதித்து சேவை செய்து கருடாழ்வானின் தோளில் எழுந்தருளியிருந்த படியேயாம்.

31. ஓம் அனந்தசிரஸே ஸ்ரீ வேங்கடேசாய நம

32. ஓம் அனந்தாக்ஷாய ,,

33. ஓம் அனந்த சரணநய ,,

கணக்கில்லாத தலைகளையும், கணக்கில்லாத திருக்கண்களையும், கணக்கில்லாத திருவடிகளையும் உடையவராய் விஸ்வரூபத்தில் சேவை சாதித்த ஸ்ரீ வெங்கடேசனை சரணமடைகிறேன்.

34 ஓம் ஸ்ரீ சைல நிலயாய ஸ்ரீ வெங்கடேசாய நம

ஸ்ரீ சைலம் என்கிற திருவேங்கடமலையைத் தனது வாஸ ஸ்தலமாய்க் கொண்ட ஸ்ரீ வேங்கடேஸ்வரனைச் சரணமடைகிறேன். ஸ்ரீ வெங்கடேசன் என்கிற திருநாமத்துடன் எழுந்தருளியிருக்குமவன் என்பதை தெரியப்படுத்த இத்திருநாமம் அவதரித்தது. சம்பத்தை அளிப்பதாலும், அந்த சம்பத்திற்கு அதிதேவதையான மகாலட்சுமி நித்யவாசம் செய்வதாலும் இம்மலைக்கு ஸ்ரீ சைலம் என்று பெயருண்டானது.

35 ஓம் தாமோதராய ஸ்ரீ வேங்கடேசாய நம

தாமோதரன் என்கிற பதம் கிருஷ்ணாவதாரத்தில் யசோதைப் பிராட்டி கண்ணனை உடலோடு கட்ட வேண்டுமென்பது பலவாறு முயற்சி செய்தும் முடியாமல் போகவே அவ்வன்னை மிகவும் சோர்வடைந்து பரிதாப நிலை எய்தினாள். பிறகு தாமோதரன் என்பதால் தன்னையே தானம் பண்ணும்படி பரமௌதார்ய முள்ளவனென்றும் பெயராகும். இதற்காக அவருக்கு 'வேங்கட நல்வெற்பன்' தாமோதரன்'' என்ற பெயரும் விளங்கிற்று.

36 ஓம் நீலமேக நிபாய ஸ்ரீ வெங்கடேசாய நம

கார்முகில் வண்ணனான ஸ்ரீ வெங்கடேசனைச் சரணமடைகின்றேன். நீர் கொண்ட கருமேகம் போன்ற திருமேனியையுடைய பரபிரம்மரூபியான் வெங்கடேசனைச் சரண் மடைகின்றோம். ஆழ்வார் போன்ற பக்தர்கள் பெருமானின் இந்த நீலவர்ணத்தில் மிகவும் ஈடுபட்டுள்ளனர். இப்படி எல்லோரையும் வசீகரிக்கப் கிருஷ்ணவர்ணம் பெருமானுக்கு கலியுக வர்ணமென்று சாஸ்திரங்கள் பேசுகின்றன. அப்படிப்பட்ட கார்முகில் வண்ணனான வேங்கடவனைச் சரணமடைகின்றேன் என்று இத்திருநாமத்தின் பொருளாகும்.

### 37. ஓம் ப்ரஹ்மாத தேவதுர்தர்சுவிச் வருபாய ஸ்ரீ வேங்கடேசாய நம

நான்முகன் முதலியவர்களாலும் பார்க்க முடியாத தேஜஸ்ஸை உடைய விஸ்வரூபம் கொண்ட ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். இந்த அண்டம் முழுவதும் பெருமாள் திருமேனியில் கண்டபோது நான்முகன் மிகவும் பயந்து ஆச்சர்யமடைந்தார்கள். விஸ்வரூப சேவை சாதிப்பதற்கு முன்னே பகவானுடைய தேஜஸ்ஸை பார்க்க முடியாமல் கண் கூசி நின்றன என்றும் சொல்லப்பட்டுள்ளது. திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு ஒவ்வொரு நாளும் இரவில் பிரம்மா வந்து ஆராதனம் செய்வதாயும், அவர் ஆராதனம் செய்த தீர்த்தம் முதலியவைகளே காலையில் விஸ்வரூப தரிசன மையத்தில் சேவார்த்திகளுக்கு வினியோகிக்கப் படுகின்றனவென்றும், ஐதிஹ்யம் சொல்லுகிறார்கள். இதை ஆலோசித்தால் பிரம்மாவுக்கு பெருமாள் விஸ்வரூபத்தில் ராத்திரி சேவை சாதிப்பதாயும், அதே சேவையுடன் காலையில் முதலில் தரிசனம் செய்யும் அவர்களுக்கும் சேவை சாதிக்கிறார் என்றும் ஆதலாலேயே முதல் தரிசனத்திற்கு விஸ்வரூப தரிசனம் என்று பெயர் ஏற்பட்டதென்றும் இது இத்திருமலையில் மாத்திரமே ஏற்பட்டதென்றும் சொல்லப்படுகின்றது.

### 38. ஓம் வைகுண்டாகத ஸத்தேம விமாநாந்தர் சதாய ஸ்ரீ வெங்கடேஸ்வரா

வைகுண்டத்திலிருந்து வந்ததும் மிக உயர்ந்ததுமான ஸ்வர்ண மயமான விமானத்துள்ளிலிருந்து சேவை சாதித்த ஸ்ரீ வேங்கடேஸ்வரனைச் சரணடைகிறேன் என்பது இத்திருநாமத்திற்குரிய பொருளாகும்.

சங்க ராஜனின் தபசிற்கு பலமளிக்க பகவான் விஸ்வரூபம் எடுத்து வந்ததை அகஸ்தியர் முதலிய ரிஷிகளும், மற்றும் பல பேர்களும் வந்து பெருமாளைக் கண்டு களித்தனர். அப்படி பெருமாள் சேவை சாதித்தபோது வைகுண்டத்திலிருந்து இத்திருமலைக்கு வந்துள்ள ஸ்வர்ண மயமான விமானமும் அவர்களால் சேவிக்கப்பட்டதென்றும் ''மாயாகூட'' என்கிற திருநாமத்தில் வர்ணிக்கப்பட்டது. இதில் அகஸ்தியர் 12 வருட காலம் தபசு செய்துகொண்டு அஷ்டாட்சர மந்திரத்தை ஜெபித்து வந்தார். வாமன புராணத்தில் உள்ளது. இவ்விதம் பெருமாள் மறைந்தபோது இவ்விமானத்திலேயே சேர்ந்து

விமான ரூபியாகவே எழுந்தருளியிருந்தார் என்பதையும் இத்திருநாமம் சொல்லக்கூடும். வைகுண்டத்திலிருந்து வந்த அந்த விமானமே கலியுகத்தில் மனிதர்களால் பரிஷ்கரிக்கப் பட்டு இன்றளவும் எல்லோராலும் சேவிக்கப்பட்டு வரும் ஆனந்த நிலைய விமானம் என்று அப்புராணத்திலேயே உள்ளது. விமானம் என்கிற சொல் விசிஷ்டமான மானம் - ப்ரமாணம், உயர்ந்த ப்ரமாணம், அதாவது - பெருமான் என்கிற பொருளில் வழங்கப்படுவதாய் பெரியோர் பணிப்பர்.

39. ஓம் அகஸ்த்யாப்யர்திதாசேஷ ஜனத்ருக் கோசராய ஸ்ரீ வெங்கடேசாய நம

அகஸ்திய மகரிஷியால் பிரார்த்திக்கப்பட்டு எல்லா ஜனங்களின் கண்களுக்குப் புலப்படும் வகையில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ வெங்கடேஸ்வரனை சரணடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் விளக்கமாகும்;

திருமால் அகஸ்தியரைப் பார்த்து ஹே மகரிஷி! யாதொருவர் இந்த நாராயணகிரியை ஏறிவந்து ஸ்வாமி புஷ்கரிணியின் புண்யதீர்த்தத்தில் நீராடி பரம புண்யமான விமானத்திலுள்ள என்னை உள்ளன்புடன் சேவித்து பூஜிக்கின்றனரோ அவர் களுக்கு சர்வஹிதமான இஷ்டங்களையும் பூர்த்தி செய்து அனுக்கிரகம் செய்யக்கடவேன். இப்படியே நூறுயோசனைக்கு அப்பாலிருந்தாலும் யாதொருவன் இம்மலையை உத்தேசித்து வணங்குகிறானோ அவனும் என்னுடைய அனுக்கிரகத் தால் உயர்ந்த புண்யலோகங்களை அடையக்கூடும் என்ற வாறு இப்படி அகஸ்தியரின் பிரார்த்தனைக் இணங்கி சர்வ ஜனங்களுக்கும் புலப்படும் வேங்கடவனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்திற்குரிய பொருளாகும்.

40 ஓம் வாஸுதேவாய ஸ்ரீ வெங்கடேசாய நம

இத்திருநாமத்தில் வரமளித்த ஸ்ரீநிவாஸன் வைகுண்ட லோகத்திலுள்ள சாட்சாத் பரவாசுதேவனே என்பது விளக் கப்படுகிறது. இத்திருநாமம் இங்கு அமைய வாமன புராணக் கதை சொல்லப்படுகிறது.

திருமலையில் தேவர்கள் ரூபத்திலும், மனிதர் ரூபத்தி லும், பறவை-மிருக ரூபத்திலும் பகவான் வசிக்கிறான். எல் லாம் பகவத் ஸ்வரூபமே வைகுண்டத்தை விட்டு வந்த பரவாஸுதேவன் என்கிறபடி சர்வ பிராணி ரூபனாய் வசிக்

கிறான். ஆகையால் யாதொருவன் இம்மலையில் எந்த இடத்திலாவது வந்த பகவானை தியானித்து பூசை மேற்கொண்டாலும் அங்கு பெருமாள் சன்னிதானத்தியத்தை வகித்து அவனுடைய மனோவ்வியாதியை போக்கடிக்கிறான் என்று வாமதேவர் வர்ணிக்கக் கேட்டு ஜனகர் மகிழ்ந்து தானும் இம்மலையை அடைந்து வாசுதேவனை வழிபட்டு விமுக்தியடைந்தார் வாசுதேவ பதத்தைக் கொண்ட மந்திரமும், உபநிஷத் வாக்கியங்களும், பல இதிகாச புராண சுலோகங்களுக்கும் உள்ளன. ஸ்ரீநிவாசனை கிருஷ்ணனாய் அனுபவிப்பது சம்ப்ரதாயமாதலால் வாசுதேவ புத்திரரான ஸ்ரீ கிருஷ்ணனைச் சரணடைகிறேன் என்றும் சொல்ல இடமுண்டு.

41. ஓம் ஹரயே ஸ்ரீ வேங்கடேசாய நம

ஹரி சொரூபியான ஸ்ரீ வெங்கடேசனைச் சரணடைகிறேன் என்பது இத்திருநாமத்திறகுரியப் பொருளாகும். வாசுதேவா என்கிற திருநாமத்திற்கு பிறகு ஹரி என்கிற இத்திருநாமம் அமைந்ததற்கு காரணம் யாதெனில் பரவாசுதேவன் அத்திருநாமத்திற்கு ஏற்ப இம்மலையில் சர்வ வடிவத்திலும் அமைந்திருக்கிறான். இமமலையில் எந்த வஸ்துவை எவன் தரிசித்தாலும் அவன் பரமாத்துமாவையே சேவித்ததாக ஆகிறது. ஹரி என்கிற பதத்திற்கு துஷ்டர்களால் நினைக்கப் பட்டாலும் பகவான் அவனுடைய பாபங்களைத் தொலைந்து விடுகிறான். அக்னி தன் ஸ்வரூபத்திற்கு ஏற்ப அபுத்தி பூர்வமாய் தீண்டினவனையும் சுடுகிறதன்றோ என்கிற இது முதலான ப்ராமணங்களின்படி பாபங்களைப் போக்கடிப்பவன் என்று அர்த்தம். ஆக சர்வ ஜனங்களின் பாபங்களைத் தொலைக்கவே அப் பரம புருஷனான வாசுதேவன் இங்கு வெங்கடேச வடிவத்திலும், மற்றுமுள்ள சராசர வஸ்து ரூபத்திலும் சாந்நித்யம் செய்கிறான். இவ்வாறு இந்த இரண்டு திருநாமங்களுக்கும் உள்ள தொடர்பை தெரியப் படுத்துதலை வாமன புராணத்தில் காணலாம்.

42. ஓம் தீர்த்த பஞ்சக வாஸினே ஸ்ரீ வேங்கடேசாயா நம

பஞ்ச தீர்த்தமென்கிற புண்ணிய தீர்த்தத்தில் வசிக்கின்ற ஸ்ரீ வெங்கடேசனைச் சரணடைகிறேன் என்பது இத்திருநாமத்திற்குரிய பொருள்.

பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரியர், சண்டாளர் என்கிற ஐந்து சாதியினர்களுக்கென்று இவ்வைந்து தீர்த்தங்கள்

அமைந்துள்ளன. பிராமண தீர்த்தம் மேல் பாகத்திலும், அதற்குக் கீழ் சத்திரிய தீர்த்தமும் கடைசியான பஞ்சம தீர்த்தம் மலையின் அடிவாரத்திலும் உள்ளன. வர்ணாச்ரமாசாரங்கள் சோபித்தவன் இவைகளில் ஸ்நானம் செய்தால் அந்த லோபம் நீங்கி முக்தி அடைவான்.

43. ஓம் வாமதேவ ப்ரியாய ஸ்ரீ வேங்கடேசாய நம

கீழ்த் திருநாமத்தில் வாமதேவர் ஜனகருக்கு உரைத்த பஞ்ச தீர்த்த மாஹாத்மியம் வர்ணிக்கப்பட்டது. இத்திருநாமத்தில் அவ்வாமதேவ மகரிஷியின் பிரபாவத்தை வர்ணித்து அது வழியாய் இத்திருமலையப்பனான ஸ்ரீநிவாசனின் மகிமை வர்ணிக்கப்படுகிறது.

வாமதேவர் நூறு வருஷம் தபசு செய்து பிரம்மாவை சேவித்து அவரை இத் திருமலையில் உள்ள புஷ்கரிணியின் மாஹாத்மியத்தையும் அதன் கரையில் செய்யும் தானங்களுக்குள்ள பெருமையையும் உள்ளவாறு எனக்கு உரைக்க வேண்டுமென்றும் பிரார்த்தித்தார். பிரம்மாவும் - இந்திரனும் மன்மதன், சந்திரன், குபேரன், வாக்பதி என்கிற பிராமணன் இவர்கள் இப்புஷ்கரிணியின் கரையில் செய்து அவ்வோதானங்களினால் அவரவர்கள் கோரின உத்தம பலன்களை அடைந்தார்கள். இவ்வளவுக்கும் இங்கு எழுந்தருளியிருக்கும் பகவான் தான் காரணம் என்றும் புரட்டாசி மாதம் உத்ஸவம் செய்து வைத்தேன் என்றும் சொல்ல வாமதேவன் கேட்டு மகிழ்ந்தார்.

43. ஓம் ஜனகேஷ்ட ப்ரதாய ஸ்ரீ வெங்கடேசாய நம

கீழ்த் திருநாமத்தில் நிமிபுத்திரரான ஜனகருக்கு உபதேசம் செய்த வாமதேவருடைய மகிமை பேசப்பட்டது. இத்திருநாமத்தில் அவரிடம் உபதேசம் பெற்ற ஜனகருடைய விருத்தாந்தம் அறிவிக்கப்படுகிறது. இப்படியே இவ்விருவர்களுக்கும் நடந்த சம்பாஷணத்தை சீதா பிதாவான ஜனக மகராஜனுக்குச் சதாநந்தர் சொல்ல, அதைக் கேட்ட இந்த ஜனகரும் அடைந்த நன்மைகளையும் இத்திருநாமம் அறிவிக்கின்றது.

45. ஓம் மார்கண்டேய மஹா தீர்த்த ஜாத புண்யப்ரதாய ஸ்ரீ வேங்கடேசாய நம

ஸ்ரீ மார்கண்டேய மஹர்ஷியின் பொருட்டு சர்வ புண்ணிய தீர்த்தக் கூட்டங்களிலும் ஸ்நானம் செய்வதால் ஏற்படும்

புண்ணியத்தை அளித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். மார்கழி மாதம் சுக்லபட்சம் துவாதசியன்று அருணோதய காலத்தில் மூன்று லோகங்களிலுமுள்ள $3\frac{1}{2}$ கோடி புண்ணிய தீர்த்தங்களும் அதில் வந்து சேருகின்றன. மார்கண்டேயரும் அப்படியே இம்மலைகளும் வந்து மூன்று வருடங்களிலிருந்து அந்த புண்ணிய காலத்தில் சுவாமி புஷ்கரிணியில் நீராடி, எல்லா புண்ணிய தீர்த்தங்களும் அதில் வந்து சேரும் வகையை சேவித்து ஸ்ரீநிவாசனுடைய அனுக்கிரகத்தால் எல்லா புண்ணியத் தீர்த்தங்களிலும் நீராடின புண்ணியத்தை அடைந்தார்.

46. ஓம் வாக்பதி ப்ரஹ்மதாத்ரே ஸ்ரீ வேங்கடேசாய நம

வேங்கடேசனுடைய அனுக்கிரகத்தால் 'காவ்யவித்' என்கிற பிராமணர் மற்றொரு பிராமணனுக்கு பிரம்ம ஞானத்தை உபதேசித்து வாக்பதி என்றும் பிரஹஸ்பதி பதத்தை அடைந்தாரே அந்த வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் வரலாறு.

நிமிபுத்திரரான ஜனகருக்கு உபதேசம் செய்து வந்த வாமதேவர் தன்னுடைய அனுபவத்தைச் சொல்லும்போது தனக்கு நேரில் நான்முகன் உபதேசித்த இத்திருமலையினுடையவும் ஸ்வாமி புஷ்கரிணியினுடையவும், பரபாவங்களையும், இதற்கெல்லாம் அடியான பரமபுருஷனான ஸ்ரீநிவாசனின் மகிமையையும் வர்ணித்தார். அப்போது காவ்யத் என்கிற ஒரு ப்ராஹ்மணர் இந்த திருமலையில் ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் பிரம்ம ஞானத்தை விரும்பி வந்த ஒரு பிராம்மணரைத் தானாகவே கூப்பிட்டு பிரம்ம ஞானத்தை உபதேசித்து அதற்குப் பலமாய் தான் வாக்பதியானார்.

47. ஓம் சந்திரலாவண்யதாயிநே ஸ்ரீ வேங்கடேசாய நம

சந்திரனுக்கு மிகுந்த அழகை அளித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். இத்திருநாமத்திற்குள்ள அவதாரிகை மேற்த் திருநாமத்திலேயே கூறப்பட்டுள்ளது. இதிலுள்ள விருத்தாந்தமும் அதே வாமன புராணம் 43வது அத்தியாயத்தில் வாமதேவரின் உபதேச ப்ரகரணத்திலுள்ளது. இந்த ஸ்வாமி புஷ்கரிணியின் கரையில் சந்திரன் ஸ்வர்ணாபரண தானம் செய்து மிகுந்த அழகை அடைந்தான் என்று உபதேசித்து இம்மலையின் பெருமையை விளக்கினார்,

48. ஓம் நாராயண நகேசாய ஸ்ரீ வெங்கடேசாய நம

அகஸ்தியர் முதலானவர்கள் வெகுகாலம் இம்மலையில் பெருமாளைத்தேடி அலைந்து வரும் சமயத்தில் ஒருநாள் ஒரு பெரிய பாறையின் மேல் உட்கார்ந்திருந்த ஒரு மகா புருஷனைக் கண்டார்கள். அவருடைய தேஜஸ்ஸும் ரூபமும் இவர்கள் கண்களைப் பறித்தன. அந்த மகா புருஷனை 'நீ யார்' என்று அகஸ்தியர் கேட்டார். அவர் பதில் சொல்லாமல் மறைந்து விட்டார். என்று வாமதேவர் ஜனகருக்குச் சொன்னார். முன்பு ஒரு நாள் மகா புருஷனைக் கண்டதாகச் சொன்னீர்களே அந்த புருஷன் யார் ? என்று வாமதேவரைக் கேட்க வாமதேவரும் நாராயண பர்வதம் என்கிற மலையே அந்த மாதிரியான திவ்ய ரூபத்தை எடுத்துக்கொண்டு அவர்களுக்கு சேவை செய்தது என்பது இத்திருநாதத்தின் பொருளாகும்.

49. ஓம் பிரம்மகலுப் தோத்ஸவாய ஸ்ரீ வேங்கடேசாய நம

பிரம்மாவினால் ஏற்படுத்தப்பட்ட உத்ஸவத்தையுடைய ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

வேங்கடமலையிலுள்ள அசுரர்களை சக்ராயுதத்தால் பெருமாள் சம்மரித்து பிரம்மா முதலிய பக்தர்களின் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்த பிறகு பிரம்மா மிகவும் பக்தியுடன் பெருமாளிடம் தான் பெருமாளுக்கு உத்ஸவம் செய்து வைத்து சேவிக்க ஆசைப்படுவதை விண்ணப்பிக்க, பெருமாளும் அதை அங்கீகரிக்க நான்முகனும், விச்வகர்மாவைக் கொண்டு விசேஷ நகரங்களும், வீதிகளும் உத்யான வனங்களும் சுருஷ்டிக்கச் செய்து பூமண்டலத்திலுள்ள சர்வஜனங்களுக்கும் தெரிவித்து வரவழித்து, சர்வ தேவர்கள் புடை சூழவிசேஷ வைபவத்துடன் புரட்டாசி மாதத்தில் திவஜாரோஹணமாரம்பித்து 9 நாள் ரதம் உள்பட வாகனங்களில் உத்ஸவம் நடத்தி வைத்து சேவித்தார். பிறகு பெருமாள் திருப்தி அடைந்து பிரம்மா செய்து வைத்த இந்த உத்ஸவத்தை ஒவ்வொரு வருடமும் இப்புரட்டாசி மாதத்தில் யார் செய்து வைக்கின்றார்களோ அவர்கள் இவ்வுலகில் அனுபவிக்கவேண்டிய சர்வ ஸௌக்கியாங்களையும் அனுபவித்து பிரம்ம லோகத்தை அடைவார்கள் என்று வரமளித்தார்.

## 50. ஓம் சங்க சக்ரவரா நம்ரலஸத்கரதலாய ஸ்ரீ வேங்கடேசாய நம

சங்கம், சக்கரம், வர முத்திரை, கடி முத்திரை இவை களால் விளங்கும் திருக்கைகளையுடைய ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

சங்கமும், சக்ரமும் பரதேவதா சின்னங்களானதால் பெருமாளின் பரத்துவத்தைத் தெரியப்படுத்துகின்றன. பெரியாழ்வார் பரதேவதா நிர்ணயம் செய்த தருணத்தில் பெருமாள் கருடன் உருவாய் சேவை சாதித்த போது பல்லாண்டு பாடும் அவசரத்தில் பெருமாளுக்கு பரத்வ நிருபிகையான பெரிய பிராட்டிக்கு வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு என்று கூறியவுடன் அவ்வாறே பரத்வ சின்னமான சங்க சக்ரங்களுக்கும் வடிவார் சோதி வலத் துறையும் சுடராழியும் பல்லாண்டு படை போர்புக்கு முழங்கு மாய் பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே'' என்று கூறினார். முதலாழ்வார்களில் இருவர் விளக்கேற்றியவுடன் பெருமாளை சேவித்த பேயாழ்வாரும் 'பொன்னாழி கண்டேன் புரி சங்கம் கைக்கண்டேன்' தன்னுடைய முதல் பாட்டில் பாடியுள்ளார்.

## 51. ஓம் த்ரவந்ம்ருகமதாஸக்த விக்ரஹாய ஸ்ரீ வேங்கடேசாய நம

கரைந்த கஸ்தூரி, புனுகு முதலிய வாசனை திரவியங்களால் பூசப்பட்ட திருமேனியையுடைய ஸ்ரீ வேங்கடேசனைச் சரண மடைகிறேன்.

ஒரு காலத்தில் பல மகரிஷிகள் ஒன்றுகூடி திருமலையில் யாகம் செய்ய முற்பட்டனர். அப்போது இம்மலையில் சீனிவாசன் விட வேஷம் தரித்து மகாலட்சுமியை தன் வேஷத்திற்குத் தகுந்த முறையில் தாசி வேடம் போடச் செய்து விஹரித்து வந்தார். அவ்வேஷத்துடனேயே மகாலட்சுமி யுடன் இந்த மகரிஷிகள் யாக சாலைக்கு எழுந்தருளினார். வேறு வேடம் தரித்து பிராட்டியுடன் பொன்னாடை உடுத்திக் கொண்டு இடது கையில் கத்தியை ஏந்தி, தாம்பூலம் தரித்துக் கொண்டு கஸ்தூரி முதலிய வாசனை திரவியங்களை விசேஷ மாய் பூசிக்கொண்டதால் நான்கு திக்குகளிலும் விசேஷ வாசனையைப் பரவச் செய்துக்கொண்டு ஜகன் மோகன வடிவத்தோடு சாட்சாத் மன்மதன் போல் சுவர்ண யஜ்ஞோ பவிதமணிந்து அம்மகாத்மாக்களின் மத்தியில் யஞ்ஞ சாலையில்

பிரவேசித்தாராம். இங்கு கஸ்தூரியின் வாசனையினால் எல்லா திக்குகளிலும் வாசனையைப் பரவச் செய்துகொண்டு எழுந்தருளினார் என்று வர்ணித்திருப்பதே ''த்ரவன்ம் ருகமதாசக்த'' என்கிற இத்திருநாமத்திற்கு விஷயம் அவ்விதம் அந்த ரிஷிகளின் யாக சாலைக்கு எழுந்தருளும் மையத்தை ஞாபகப்படுத்தவே இத்திருநாமம் இப்படி அமைந்தால் அக்கதையை இங்கு அனுசரித்து பெருமாளின் சௌரிய்யத்தை இத்திருநாமத்தில் அனுசரிக்க வேண்டும் என்று வியாக்யானம் அளிக்கப்பட்டது.

52. ஓம் ஸ்ரீ கேசவாய ஸ்ரீ வேங்கடேசாய நம

பிரம்ம ருத்திரர்களுக்கும் சுவாமியான ஸ்ரீ வேங்கடேசனை சரணமடைகிறேன்.

கேசவ என்கிற பதத்திற்கு சாஸ்திரக்காரர்கள் பலவிதமாய் அர்த்தம் சொல்லுகிறார்கள். அதில் முக்கியமாய் க: என்றால் நான்முகனுக்குப் பெயர். ஈசன் என்றால் எனக்குப் பெயர். நாங்களிருவரும் மகா விஷ்ணுவே! உன்னுடைய சரீரத்தில் உண்டானவர்கள் என்று ஹரி வம்சத்தில் உள்ள பெருமாளைப் பார்த்து ருத்திரன் பேசியதான வார்த்தையைக் கொண்டு எல்லோருக்கும் மேலான ருத்திரன் நான்முகன் இவர்களுக்கும் மேலானவர் மகாவிஷ்ணு என்று இவ்விதம் அறிவிக்கின்றதாய் சொல்லுகிறார்கள்.

இப்படியே ஆண்டாளும் தன்னுடைய திருப்பாவை கடைசி பாட்டில் ''வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை' என்கிறவாறு புகழ்ந்துள்ளார் கேசவனை என்ப தால் பரத்வமும் பேசப்பட்டிருப்பது நோக்கத்தக்கது.

53. ஓம் நித்ய யௌவனமூர்த்தியே ஸ்ரீ வேங்கடேசாய நம

எப்போதும் யௌவனத்தையுடைய திருமேனியைக் கொண்ட ஸ்ரீ வெங்கடேசனைச் சரணமடைகிறேன். சீனி வாசனுடைய திருமேனி எப்போதும் யௌவனத்த... கூடியது. நம் சரீரத்திற்குள்ளது போல் பல்யம் இழததனம முதலிய அவஸ்தைகள் கிடையாது. யௌவனத்திற்கு ப்ரமாணங்கள் காட்டப் புகுகின்றவர்கள் லாவண்யத்திற்கு ப்ராமணங்களைக் காட்டுவதால் கருணை உள்ளவர்களாக மாட்டீர்கள். இப்படிப்பட்ட யௌவனத்தை சீனிவாச னுடைய அர்ச்சாமூர்த்தியில் எப்போதும் நாம் சேவிக்கலாம்.

## 54. ஓம் அர்த்திதார்த்தப்ரதாத்ரே ஸ்ரீ வேங்கடேசாய நம:

பக்தர்களால் கோரப்படும் எல்லா புருஷார்த்தங்களையும் அளிக்கும் வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

வேங்கடாசல மகாத்மிய புராணத்தில் சீனிவாசனை ஆசாரித்த பல பக்தர்கள் தாங்கள் கோரியதர்மம், அர்த்தம், காமம், மோட்சம் எனப்படும். அந்த புருஷார்த் தங்களை அடைந்த சரிதங்கள் பல கூறப்பட்டுள்ளன. உபநிஷத்து கீதை முதலிய சாஸ்திரங்களின் கொள்கையை ஆராய்ந்தப்போது பரம புருஷனையல்லாது வேறு தேவதை களை ஆசிப்பவர்களுக்கும், அந்த தேவதைகளுக்கு அந்தர்யாமி யாயிருந்து அவர்களின் ஆராதனத்தைத் தானே பெற்று அவர்களுக்குப் பலனையும் பரம புருஷனே வழங்குகிறான் என்பது ஸ்பஷ்டமாய் ஏற்படுகின்றது.

## 55. ஓம் விச்வதீர்த்தாக ஹாரிணே ஸ்ரீ வெங்கடேசாய நம

எல்லா புண்ணிய தீர்த்தங்களின் பாபங்களையும் நீக்கும் ஸ்ரீ வெங்கடேசனை சரணமடைகிறேன். என்பது திருநாமத்தின் உபயமாகும். மூன்று லோகங்களிலும் உள்ள எல்லா புண்ய தீர்த்தங்களுக்கும் நீ சுவாமியாய் விளங்குவாய். பாபி ஜனங் களாய் தங்களிடம் விடப்பட்ட பாபங்களை ஒவ்வொரு வருடமும் மார்கழி மாதம் சுக்லபட்சம் அருணோதய காலத்தில் உம்மிடம் வந்து கலந்து நீக்கிக் கொள்ளட்டும் என்று சுவாமி புஷ்கரிணிக்கு பகவான் வரமளித்தார்.

மார்கண்டேயர் பிரம்மாவைக் குறித்து தபசு செய்ய அவர் வரமளிக்க வந்தபோது மூன்று உலகங்களிலும் உள்ள எல்லா புண்ணிய தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்ய சக்தியை அளிக்கவேண்டும் என்று வேண்டினார். வேங்கட மலையில் உள்ள சுவாமி புஷ்கரிணியில் மார்கழியில் சுக்ல த்வாதசியில் அருணோதய சமயத்தில் ஸ்நானம் செய்தால் அந்த பலனை அடையக் கூடும். அப்போது மூன்று லோகங்களிலுமுள்ள மூன்றரைக் கோடி புண்ய தீர்த்தங்களும் அதில் வந்து தம் பாபங்களை நீக்கிக்கொள்ளும் பொருட்டு கலக்கினவென்று உபதேசித்தார். மார்கண்டேயரும் அப்படியே செய்து அவர் கோரின பலனை அடைந்தார்.

### 56. ஓம் தீர்த்த ஸ்வாமி ஸரஸ்னா தஜநாபீஷ்டப் ரதாயிநே ஸ்ரீ வேங்கடேசாய நம

ஹேகய குலத்தில் முன்னொரு காலத்தில் சங்கன் என்ற அரசன் பூமியை ஆண்டு வந்தான் நாராயணனை தரிசிக்கப் பல பாகங்களை மேற்கொண்டான். 'வேங்கடமலையில் தரிசிக்கக்கடவாய் என வாக்குக்கொடுத்தார். மேலும் சுவாமி புஷ்கரிணியில் ஆயிரம் வருட காலம் தபசு செய்த பின்னர் அகஸ்தியர் என்னை சேவிக்க வருகிறார். அப்போது நீ என்னை தரிசிக்கக் கடவாய். சங்கராஜனும் தன் இராஜ்ஜியத்தை மகனிடம் ஒப்படைத்து விட்டு புஷ்கரணியில் தபசு மேற்கொண்டு இறைவனை தரிசித்தான். பல பல வரங்களைப் பெற்றனர். தசரதசக்ரவர்த்தி இதில் ஸ்னானம் செய்த மகிமையினால் புத்திரப்பேறு அடைந்தார் ஸ்ரீ ராமனும் இதில் நீராடியப் பிறகு தான் ராவணஸம்ஹாரம் செய்து சீதையை அடைந்தார். இப்படி இந்த ஸ்வாமி புஷ்கரீணி தன்னிடம் நீராடினவர்களுக்கு கோரிய பலன்களையளிப்பது அந்த பகவானுடைய சங்கல்பத்தால் ஏற்பட்டதால் இதில் ஸ்னானம் செய்தவர்களுக்கு பலனளிப்பவன் அந்த ஸ்ரீநிவாசனேயாதலால் அவனையே பலனளிப்பவனாய் இத்திருநாமத்தில் அனுசரிக்கப்பட்டுள்ளது.

### 57. ஓம் குமாரதாரிகா வாஸஸ்கந்தா பீஷ்டப்ரதாய ஸ்ரீ வேங்கடேசாய நாம

குமாரதாரை என்கிற புண்ணிய தீர்த்தத்தின் கரையில் வசித்துக் கொண்டிருக்கும் சுப்பிரமண்யருக்கு இஸ்டமான வரன்களையளிக்கும் ஸ்ரீ வெங்கடேசனைச் சரணடைகின்றேன்.

ஸ்வாமி புஷ்கரிணியைக் காட்டிலும் என் அவதார தினமான மாகபூர்ணிமை தினம இந்த தீர்த்தம் விசேஷ மகிமை வாய்ந்ததாய் விளங்கக்கூடும். 'ஹேகந்தரே நீர் தபக செய்து என்னை இந்த குமார தாரிகை தீர்த்தத்தின் ப்ரபாவத்தால் இந்த கல்பம் முடியும் வரையில் நீர் இந்த தீர்த்தத்தின் கரையில் இருந்து கொண்டு என்னை சேவித்து வரப்போவதாலும் இத்தீர்த்தம் உம்முடைய பெயராலேயே 'குமாரதாரை' என்கிற பெயராலேயே விளங்கக் கடவது என்று வரமளித்தார் பெருமான் இப்படியாக பெருமாள் திருவாக்கினாலேயே குமாரதாரை என்று இதற்குப் பெயர் ஏற்பட்டது. இந்த புண்ணிய தீர்த்தத்தின் கரையில் நித்ய வாசம் செய்யும்

ம்க்கா பகவத்பக்தரான கந்தருக்கு பீஷ்டமான பகவத் சேவையை அளித்து வரும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்று இத்திருநாமத்திற்குரியப் பொருளாகும்.

58. ஓம் ஜானுாதக்ன ஸமுத் பூத போத்ரிணே
ஸ்ரீ வேங்கடேசாய நம

முழங்கால் வரையில் புற்றிலிருந்து வெளி வந்துள்ள வராக-ரூபினான ஸ்ரீ வெங்கடேசனைச் சரணமடைகிறேன்.

சுவாமி புஷ்கரிணியின் தென் கரையில் ஸ்ரீ நிவாசன் ஒரு புற்றில் திருவடி வரையில் மறைந்து சேவை சாதிக்கிறார். அந்த புற்றையும் பசுவின் பாலால் கரைத்து அவ்விடத்திலும் இரண்டு மூர்த்திகளுக்கும், ப்ரகாரம் கோபுரம் முதலியவை கட்டி ஆராதித்து வர வேண்டுமென்று பெருமாள் நியமனம் செய்தார். புற்றைக் கபிலா பசுக்களின் பாலால் இடைவிடாத தாரையால் கரைத்து வரும் போது சிரஸ்ஸிலிருந்து முழங் கால் அளவு கரைந்த உடன் பாலின் தாரை கவனக் குறை வால் சற்று தடைபட்டு நிற்கவே அதற்குமேல் எவ்வளவு பால்சேர்த்தும் கரையாததைக் கண்டு அரசன் மயங்க, பகவா னும் 'ஓ அரசனே வீண் முயற்சி வேண்டாம் இம் முழங்கால் அளவே போதுமானது இதற்கு அடியாகம் காணப்பட மாட் டாது. இந்தவராக ரூபத்தை சிலையில் நிர்மாணம் செய்து பிரதிஸ்டை செய்து சர்வ போகங்களையும் சமர்ப்பித்து வைகான சர்களைக் கொண்டு ஆராதித்து வா என்று கட்டளை இட்டார்.

இப்படி முழங்காலளவு புற்றிலிருந்து அவதரித்த வராகப் பெருமாள் சீனிவாசனே பலம் இப்படி சவேதவராக ரூபத் தில் சேவை சாதிக்கும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடை கிறேன் என்பது இத்திருநாமத்திற்குரியப் பொருளாகும்.

59. ஓம் கூர்மமூர்தயே ஸ்ரீ வேங்கடேசாய நம

ஆமை உருவம் கொண்ட ஸ்ரீ வேங்கடேசனைச் சரண மடைகிறேன். தசாவதாரங்களில் வராகத்திற்கு முந்தினது கூர்ம ரூபம் தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த போது மந்தர பர்வதத்தை மத்தாக உபயோகப்படுத்தின சமயத்தில் அது ஆடாமல் நிலைத்து நிற்பதற்காகப் பரம புருஷன் ஆமை உருவெடுத்து அந்த மலையைக் கீழும் மேலும்

அனைத்து நிறுத்தினதாக விஷ்ணு புராணம் செப்புகின்றது. இப்படியாக சாவஜகதா தாரபூதனான கூர்ம ரூபியான வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் பொருளாகும்.

60. ஓம் கிந்நரத்வந்த்வ சாபாந்த ப்ரதாத்ரே
ஸ்ரீ வேங்கடேசாய நம

கிந்நர தம்பதிகளின் சாபத்திற்கு விமோசனம் அளித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

துர்வாச மகா முனிவரின் ஆசிரமத்தில் ஒரு கிந்நர தம்பதிகள் வெட்கமில்லாமல் வந்தார்கள். இதனால் கோபம் அடைந்த முனிவர் ''நீங்கள் என்னுடைய ஆசிரமத்தில் நுழைந்தபடியால் சிம்மாசம் என்கிற மலையில் வேட தம்பதிகளாய் பிறக்கக் கடவீர்கள் என்று சபித்தார். ஒரு அரசன் வராக அவதாரத்துடன் புற்றில் நுழைந்த பெருமாளைக் காண பசுவின் பாலைப் புற்றில் கரக்கச் செய்தார். கடவுளின் தரிசனமும் கிடைத்தது. அருகில் நின்றுக்கொண்டிருந்த கிந்நர தம்பதிகளின் சாபம் நீங்கும்படியாகக் கட்டளை இட்டார்.

61. ஓம் விபவே ஸ்ரீ வேங்கடேசாய நம

சராசரி ரூபமான எல்லா வஸ்துக்களிலும் வியாபித்து விளங்கும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

மேற் கூறப்பட்ட திருநாமத்தில் வராக மூர்த்தியிலும், சீனிவாச மூர்த்தியிலும் ஒரே பகவானே உள்ளான் என்று சொல்லப்பட்டது. இத்திருநாமத்தில் அவ்விரண்டு மூர்த்தியில் பாரத்திரமின்றி பிரபஞ்சத்திலுள்ள சர்வ வஸ்துக்களிலும் ஒரு பகவானே அவைகளுக்கு ஆத்துமாவாய் உள்ளும் வெளியும் வியாபித்துள்ளான் என்று வர்ணிக்கப்படுகிறது. அப்படிப்பட்ட பரமாத்ம ஸ்வரூபமே வேங்கடேச மூர்த்தியிலும் விசேஷ சாந்நித்யத்தை கொடுத்திருப்பதால் விபுவான ஸ்ரீ வேங்கடேசனைச் சரணடைகிறேன் என்று இத்திருநாமம் கூறுகின்றது.

62. ஓம் வைகானஸ முனிச்ரேஷ்ட பூஜிதாய ஸ்ரீ வேங்கடேசாய நம

வைகானஸகுலத்தில் பிறந்த முனிச்ரேஷ்டர்களால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

அனாதிகாலமாய் வைகானஸ குலத்தில் உதித்தவர்களே சீனிவாஸனுக்கு வைகானஸ முறைப்படி பூஜை செய்து வருகின்றனர். இவ்வைகானஸர்களிடத்தில் சீனிவாசனுக்கு பரம அனுக்கிரகம் உண்டு என்பது சீனிவாச தீட்சிதர் போன்ற பெரியோர்களின் சரித்திரத்தால் நன்கு விளங்கும். வராக பகவான் அரசனுக்குக் கட்டளையிடும் ப்ரகரணத்தில் திருமலையில் எழுந்தருளியிருக்கும் வராக பகவானுக்கும் சீனிவாசனுக்கும் இஸ்டமென்றும் இப்பூசையே பகவான் ஆவிர்பவித்த காலம் முதல் இன்றளவும் நடந்து வருகிறது. என்றும் அறியலாம். இப்படி பரம பக்தர்களையும் ரிஷிஸமானர்களுமான வைகாசர்களால் வெகு காலமாய் ஆராதிக்கப்படும் சீனிவாசனைச் சரணமடைகிறேன் என்று இத்திருநாமத்தின் பொருளாகும்.

63. ஓம் சிம்மாசல நிவாசய ஸ்ரீ வேங்கடேசாய நம

சிம்மாசலம் எனப்படும் வேங்கடமலையில் வசிக்கும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

வேங்கடாசலம் எனப்படும் இத்திருமலை ஆரம்பித்து ஸ்ரீ சைலம் எனப்படும் மல்லிகார்ஜுன சேத்திரம் வரையில் சர்பபாகமாய் உள்ள மலைத்தொடரில் தலைபாகமான திருமலைக்கு சேஷாசலம் என்றும் நடுபாகத்திற்கு அஹோபிலம் (கருடாசலம்) என்றும் வால் பாகத்திற்கு ஸ்ரீ சைலமென்றும் பெயர். வெகு காலத்திற்கு முன்பே நரசிம்மனுடைய ஆவிர் பவத்தால் சிம்மாசலம் என்று பெயர் பெற்ற இத்திருமலையில் நித்யவாசம் செய்யும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்று இத்திருநாமத்திற்கு பொருளாகும்.

64. ஓம் மந் ஸ்ரீநாராயணாய ஸ்ரீ வேங்கடேசாய நம

மகாலட்சுமியுடன் கூடிய நாராயண ஸ்வரூபியான ஸ்ரீவேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

நரசிம்மன் வைகுண்டத்தத்தில் மகாலட்சுமியுடன் விளங்கும் நாராயணனே என்றும் அந்நாராயணனே இப்போது

வேங்கடேசனாய் விளங்குகிறான் என்றும் இத்திருநாமத்தில் கூறப்படுகின்றது. திருமலையே வைகுண்டத்திலுள்ள க்ரீடா பர்வதமென்றும், இங்குள்ள சுவாமி புஷ்கரிணியே அங்குள்ள ஐம்மா தீபம் என்கிற சரஸ்ஸு என்றும் நாம் கருதுதல் வேண்டும்.

65. ஓம் சத்பக்த நீலாண்டார்ச்யந்ரு ஸிம்ஹாய
ஸ்ரீ வேங்கடேசாய நம

பக்த சிரேஸ்டனான நீல கண்டனால் ஆராதிக்கப்படும் நரசிம்ம சொரூபியான ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடை கிறேன்.

ஸ்ரீ வெங்கடேசன் எழுந்தருளிருக்கும் இடத்திற்கு 30 மீட்டர் தூரத்தில் நீலகண்டருடைய ஆசிரமம் உள்ளது. அதில் அழகான புஷ்கரிணி உள்ளது. அது உயர்ந்த புண்ணிய தீர்த்தம். அதின் கரையில் ஒரு கல்லா மரத்தின் அடியில் நீலகண்டர் நரசிம்ம மூர்த்தியை பிரதிஸ்டை செய்து உலக சேமத்தின் பொருட்டு ஆராதித்து வந்தார். அந்நீலகண்டருடைய ஆஸ்ரமத்தின் வர்ணமும், அங்குள்ள புண்ணிய புஷ்கரிணியின் வர்ணமும் லட்சுமி நரசிம்மருடைய திவ்ய மங்கள விக்கிர வர்ணமும் நீலகண்டர் ஆராதனத்தின் வர்ணமும் உயர்ந்த முறையில் அமைந்துள்ளது. இப்படி நீலகண்டரால் ஆராதிக்கப்பட்ட நரசிம்ம ரூபியான வேங்கடேசனைச் சரண மடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் பொருளாகும்.

66. குமுதாட்சு கணச்ரேஸ்ட ஸைநாபத்யப்ரதாய
ஸ்ரீ வேங்கடேசாய நம

குமுதாட்சன் என்கிற கணாதிபதிக்கு சேனாதிபதி பதவியை யளித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். ஸ்ரீனிவாசன் தன்னுடைய கணாத்யட்சனான குமுதாட்சன் என்கிற நித்ய சூரியைக் கடாட்சித்து அவருக்கு விஷ்வக்சேனர், என்ற திருநாமத்தையும், சேனாதிபதித் துவத்தையும் அளித்து அஸுரர்களை அமராரி என்ற அசுரர்களை அழித்து தேவதை களைக் காப்பாற்றுமாறு கட்டளையிட்டார்.

67. ஓம் துர்மேத: ப்ராணஹர்த்ரே ஸ்ரீ வேங்கடேசாய நம

துர்மேதஸ்ஸினுடைய உயிரை அபகரித்து வைத்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். சீனிவாச பகவான்

சாதுக்களான தேவதைகளைக் காப்பாற்றுவதற்காக துஷ்டனான துர்மேஸ்ஸை அழித்த வரலாறே இதனிலும் சொல்லப் படுகிறது. தேவதைகளால் சொல்லப்படாமையையும், ஐக்கியப்படாமையையும் வரன் பெற்றவன் என்றும் சொல்லப் படுகின்றது. அவனுடைய பெயர் அரோரி அல்லது துர்மேஸஸ் (கொடிய புத்தியுள்ளவன்).

68. ஓம் ஸ்ரீதராய் ஸ்ரீ வேங்கடேசாய நம

ஸ்ரீ மகாலட்சுமியை தரிக்கும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

உலகிலுள்ள ஒவ்வொருவனும் ஒரு பேச்சைப் பேசுவதற்கோ, அல்லது ஒரு காரியத்தை செய்வதற்கோ முன்பு அவ்விஷயத்தை மனதால் நினைத்தே செய்வான். அப்படியே பரமனும் செய்வார். அப்படி மனதில் தோன்றும் ஒவ்வொரு நினைவுகளும் மக்களுக்கு நன்மை அளிக்கும் செய்தியாகவே இருக்கவேண்டும். அப்படி பரமன் மாறாமல் இருப்பதற்காகவே மகாலட்சுமி மனதின் அருகிலேயே வாசம் செய்கிறாள். இவளுடைய யோசனையால் பெருமாளின் செயல்கள் நல்ல படியாகவே அமைகின்றன. இப்படி லட்சுமி தேவி திரு மார்பிலேயே வசிப்பதென்பது நம் வேங்கடமலை அரசனான சீனிவாச மூர்த்தியின் கண்கூடான விஷயம். ஆகையால் சீனிவாசன் மகாலட்சுமிக்கு இருப்பிடமானவன் என்று இம்மூர்த்திக்கு விளக்கப்படும் திருநாமம்.

69. ஓம் சத்திரியாந்தக ராமாய ஸ்ரீ வேங்கடேசாய நம

ரியர்களுக்கு யமனாய் அமைந்த பரசுராம சொரூபியான ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

சீனிவாசன் தயாமூர்த்தி என்பதில் ஐயமில்லை. அவர் பரசுராமன் அவதாரத்தில் அக்காலத்தில் இருந்த கொடிய அரசர்களை அழித்தார். ஒரு நோயாளியை எப்படியெல்லாம் துன்புறச் செய்து டாக்டர் நோயைக் குணப்படுத்துகின்றாரோ அப்படி இவர் கொடியவர்களை அழித்து நல்வழிப்படுத்தினார். ஆக சத்திரியர்களுக்கு மாத்திரமின்றி அவர்களின் பாவச் செயல்களுக்கும் இரட்சகனாய் அமைந்து அவர்களைக் காப்பாற்றிய பரசுராம ரூபியான ஸ்ரீ வேங்கடேசனைச் சரண் மடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் பொருளாகும்.

70. ஓம் மத்ஸ்யரூபாய ஸ்ரீ வேங்கடேசாய நம

மத்ஸ்யவதாரம் எடுத்து வேதங்களை மீட்டிக் கொடுத்து நான்முகனைக் காப்பாற்றிய ஸ்ரீ வேங்கடேசனை சரண மடைகிறேன்.

சோமகன் என்கிற அசுரன் வேதங்களை அபகரித்துக் கொண்டு பாதாள உலகத்திற்குள் புகுந்துவிட்டான். வேதங்கள் மறைந்து விடவே தர்மங்கள் உலகில் சரிவர நடைபெற வில்லை. அச்சமயம் சதுர்முகன் பரம புருஷனை வேண்டும் போது அவர் மத்ஸ்ய ரூபம் எடுத்து சமுத்திரத்தில் புகுந்து அந்த அசுரனைக் கொன்று வேதத்தை மீட்டு வந்து நான் முகனுக்குக்கொடுத்து நல்லறிவையூட்டி உலகில் தர்மஸ்தாபனம் செய்தார். ஒருவனை பூர்ணமாய் இரட்சிப்பது என்பது அவனுக்கு நல்லறிவை போதிப்பதே ஆகும். ஆக தனக்கு அந்தரங்களான நான்முகனைக் காப்பாற்ற மீன் உருவம் எடுத்த ஸ்ரீ வெங்கடேசனை சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் பொருளாகும்.

71. ஓம் பாண்டவாரிப்ரஹர்த்ரே ஸ்ரீ வேங்கடேசாய நம

பாண்டவர்களின் சத்ருக்களை அழித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

தன்னை உயிராக மதித்து வணங்கி வந்த பாண்டவர்களின் போரில் இவர் பார்த்தசாரதியாக இருந்து அவர்களின் பகைவர்களான கவுரவர்களை அழித்தவன் திருமால் அப்படிப்பட்ட உயர்நத திறம் படைத்த உள்ளம் கொண்ட ஸ்ரீனிவாசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்திற்குரியப் பொருளாகும்.

72. ஓம் ஸ்ரீ கராய ஸ்ரீ வேங்கடேசாய நம

மங்களகரனான ஸ்ரீ வேங்கடேசனை சரண மடைகிறேன்.

ஞானப்பிரதானமும், பரம சம்பத் கரமான விஷயம் என்று வேதத்தில் பேசியபடி வேதங்களையும், அதினர்த்தங்களையும் அறிவதே உயர்ந்த சம்பந்தாம் அப்படிப்பட்ட சம்பத்து பகவத்கீதையினால் ஏற்படுவதால் அதை உபதேசித்த ஸ்ரீ வேங்கடேசனை ஸ்ரீகரன் எனச் சொல்ல தடை உண்டோ கண்ர, என்பதற்கு ஸ்திரீ ஆகிய மகாலட்சுமிக்கு கையாய்

இருப்பவன் என்றும், மகாலட்சுமியை கையாக உடையவன் என்றும் ஏற்படும் அர்த்தங்களே, ஆக இப்படிப்பட்ட மங்களங் களைக் கொடுக்கும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்று இத்திருநாமத்தின் பொருளாகும்.

73. ஓம் உபத்யகாப்ரதே சஸ்தசங்கரத் யாதமூர்தயே ஸ்ரீ வேங்கடேசாய நம

வேங்கடமலையில் தாழ்வரையில் வசிக்கும் சங்கரரால் தியானிக்கப்பட்ட மூர்த்தியையுடைய ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் பொருளாகும். பெருமாள் சங்கர பகவானைப் பார்த்து 'உமது கோரிக்கை என கேட்க' சங்கரன் ஐயா தாங்கள் எங்கு வாசம் செய்கின் றீர்களோ அங்கேயே நானும் வாசம் செய்யும்படி அனுக் கிரகம் செய்ய வேண்டும்படி வேண்டினார். அப்போது பகவான் இவ்வேங்கடமலையில் இந்த கல்பம் முடியும் வரை யில் தான் வசிக்கப் போகிறேன். ஆதலால் நீரும் இம்மலை யின் ஆக்னேயதிக்கில் தாழ்வரையில் வசித்து வாரும் என்று கட்டளையிட்டார். இப்படி மும்மூர்த்திகளுள் ஒருவரான கபிலேஸ்வரன் என்கிற சங்கர பகவானால் தியானம் செய்யப் படும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்று திரு நாமத்தின் பொருளாகும்.

74. ஓம் ருக்மாப்ஜ ஸ்ரஸீகூல லட்சுமிக்ருத தபஸ்விநே ஸ்ரீ வேங்கடேசாய நம

பொன்மயமான தாமரைப் புஷ்பங்களை உடைய பத்ம சரஸ்ஸின் கரையில் மகாலட்சுமியின் பொருட்டு தபசு செய்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

முன்னொரு காலத்தில் உத்தம தேவதை என்பவள் மகா விஷ்ணுவை மார்பில் உதைத்தவள் இதனால் அவர் திருமார் பில் வசிக்கும் லட்சுமிக்குக் கோபம் ஏற்பட்டு திருப்பாற் கடலை விட்டு பாதாளத்திற்குச் சென்று விட்டாள் அங்கு கபிலரால் ஆராதிக்கப்பட்டு வந்தாள். விஷ்ணு லட்சுமியை அடைய விரும்பி அனேக இடங்களில் தேடிவரும் போது கொல்லாபுரத்தில் லட்சுமி விக்கிரகத்தைக் கண்டார். அங்கு பத்து வருடம் தபசு செய்தார். பிறகு ஒரு கார்த்திகை மாதம் உத்திராட நட்சத்திரமும், பஞ்சமியுமான வெள்ளிக்கிழமை யில் அக்குளத்தில் ஒரு தாமரை பூவில் லட்சுமி அவதரித்தாள்.

இப்படி பன்னிரண்டு வருடகாலம் மகாலட்சுமையை அடைவ தற்காக ஸ்வர்ண பத்மங்களையுடைய (இன்று திருச்சானூரில் உள்ள குளம்) திருக்குளக்கரையில் தபசு செய்த ஸ்ரீ வேங்கடே சனைச் சரணமடைகிறேன் என்று இத் திருநாமத்தின் பொருள்.

## 75. ஓம் லசல்லட்சுமி கராம் போஜதத்த கல்ஹாரகஸ்ரஜே ஸ்ரீ வேங்கடேசாய நம

பிரகாசிக்கும் மகாலட்சுமியின் தாமரைப் புஸ்பம் போன்ற திருக்கைகளால் சமர்பிக்கப்பட்ட கல்ஹார புஸ்ப மாலையை யுடைய ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

மேலே பேசியபடி மகாலட்சுமி பத்ம சரஸில் அவதரிக்கும் போது இது விஷயமறிந்த நான்முகனும் ருத்திரனும் இந்திரனும் தம் தம் மனைவி மக்களுடன் குளக்கரைக்கு வந்தனர். அப்படியே சர்வ தேவதைகளும், அசுரர்களும் மகரிஷிகளும் எல்லோரும் வந்தார்கள். எல்லோரும் சேவித்துக் கொண்டு இருக்கும்போது மகாலட்சுமி தாமரை பூவிலிருந்து எழுந்து வந்து தான் தரித்துக்கொண்டிருக்கும் கல்ஹார புஷ்ப மாலையைக் கழற்றி தன் திருக் கைகளால் பெருமாளின் திருமார்பில் அணிந்து அப்பகவானை ஆலிங்கனம் செய்துக் கொண்டு அவனுடைய திருமார்பை அடைந்து சர்வ தேவர் களையும், மகரிஷிகளையும் கடாட்சித்து அனுக்கிரகித்தார். பிறகு பகவான் அக்குளத்திற்கு மூன்று உலகங்களிலும் விசேஷமாய் புகழ் உண்டாகும்படி வரமளித்து மகாலட்சுமி யுடன் வேங்கட மலையை அடைந்து அங்கு வாழ்ந்து வருகிறார்.

## 76. ஓம் ஸாளக்ராம நிவாஸாய ஸ்ரீ வேங்கடேசாய நம

சாளக் கிராமத்தில் வசிக்கும் ஸ்ரீ வெங்கடேசனைச் சரணமடைகிறேன். சாளக் கிராம நிவாசா என்பதற்கு ''சாளக்கிராம சிலையில் நித்ய வாசம் செய்பவன் என்றும், சாளக்கிராமம் என்கிற ஸ்வயம் வியந்த திவ்ய இடத்தில் வசிப்பவன் என்றும், சாளக்கிராமங்களுக்கு இருப்பிடம் என்றும், பலவிதமாய் பொருள் கொள்ளலாம். இங்கு ஒருவாறு பொருந்துவது கடைசியில் சொன்ன அர்த்தமே யாகும். சிலை, உலோகம் முதலிய விக்கிரகங்களில் சாளக் கிராமத்தில் நித்திய வாசம் செய்கிறார் என்று பொருள் சாள என்றால் பொதுவாய் மரம் என்று பொருள் கிராமம்

என்றால் சமூகம் எனது பொருள் ஆக சாளக்கிராமம் என்பதற்கு மரங்களுடைய சமூகம் என்று நலம் பொருள் கொள்ளலாம்.

77. ஓம் சுகத்ருக்கோசராய ஸ்ரீ வேங்கடேசாய நம

வியாச பகவானின் புத்திரரான சுகர் பரமசிவனிடமிருந்து பிரம்மஞானம் பெற்று சித்தியடைந்து உலகம் முழுவதையும் பிரம்ம ரூபமாகவே கண்டுகளித்தார் அவர் ஒரு நாள் சூர்ய மண்டலத்தை உத்தேசித்து ஆகாயத்தில் சென்றபோது வியாசர் அவரைக் கூப்பிட்டார். சூர்யபகவான் சுகரைப்பார்த்து 'புத்திரசன்னிதி இல்லாதவனுக்கு நற்கதி கிடையாது எனவே நீர் தலை கீழாக பூலோகம் சென்று பித்ருக்களின் கடனை தீர்த்த பிறகு வருமென்று சொன்னார். இதைக்கேட்ட சுகர் தலை கீழாக உள்ள தன்னுடைய நிழலை தன்னைப்போல் ஒரு உருவமாய்ச் செய்து அந்த சயாசுகரைப் பார்த்து 'நீ பூலோகம் சென்று என்னுடைய தகப்பனாரான வியாசருக்கு புத்திரனாக இருந்து நீயும் புத்திர சந்தானம் உண்டு பண்ணி பிறகு பிரம்மலோகமடைய கடவாய்' என்று நியமித்து சூரிய மண்டல வழியாய் நற்கதியடைந்தார். அவர் ஒரு சமயம் வேங்கடாசல மாகாத்மியத்தை கேட்டு பத்ம சரகின் கரையில் விசேஷமாய் தபசு செய்து அங்கு தன் பெயரால் ஒரு கிராமத்தை சுருஸ்டித்து அக்குளத்திலுள்ள தாமரைப் புஷ்பங்களின் தனங்களால் 108 பிராமணர்களை ஆறுகோத்திரங்களில் ஸ்ருஷ்டி செய்து அவர்களுக்கு பிரம்ம வித்தையை உபதேசித்து பிரம்ம உத்ஸவத்தில் அவர்களுடன் சேர்ந்து பெருமாளை எழுந்தருளப் பண்ணும் கைங்கர்யத்தை அவர்களைக் கொண்டு நடத்தி வைத்தார்.

78. ஓம் நாராயணார்திதா சேஷஜனத்ருக் விஷயாய ஸ்ரீ வேங்கடேசாய நம

நாராயணன் என்கிற பிராம்மணரால் பிரார்த்திக்கப்பட்டவராய்க் கொண்டு எல்லா ஜனங்களின் கண்களுக்குப் புலப்படும் வகையில் சேவை செய்யும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

நாராயணன் எனது பெயருள்ள ஒரு பிராம்மணன் திருமலைக் காணும் பொருட்டு புஷ்கரணியில் தபசு மேற்கொண்

டான். அப்போது எல்லா வகை பழங்களும் அவனுக்குக் கிடைத்து வந்தன. அதிக சக்தியுள்ள மிருகங்கள் சிறிய மிருகங்களைக் கொல்லாமல் இருந்து வந்தன. இறுதியில் பகவான் அவர்களுக்குத் தரிசனமானார். வரம் என்ன வேண்டும் என்று திருமால் கேட்க அதற்கு பிராம்மணன் பிரபுவே என்னை மாதிரி மற்ற எல்லா ஜனங்களும் உம்மைக் காணும் பொருட்டு கடினமான தபக மேற் கொள்வது அரிது எனவே அனைவரும் காணும் பொருட்டு இம்மலையில் அர்ச்சாவதாரத்தில் எழுந்தருள வேண்டும் என வேண்டினான். எனக்கு இன்று நீர் காட்சியளித்தன் அடையாளமாக இன்று முதல் இம்மலை என் பெயரால் 'நாராயணாத்ரி' என அழைக்கப்பட வேண்டும் என வேண்டினான் இறைவனும் அவனுடைய வேண்டுகோளை அங்கீகரித்தார்.

79. ஓம் மிருகயாரஸிகாய ஸ்ரீ வேங்கடேசாய நம

வேட்டையாடுவதில் வேட்கையுள்ள ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் பெருமாள் ஒரு சமயம் விஷ்வக்சேனரைப் பார்த்து புன்சிரிப்புடன் 'நேசரே! நான் இம்மலையில் வேட்டையாட எண்ணியுள்ளேன் ஆதலால் சரங்க சேனைகள் உடனே சித்தமாகட்டும் என்று கட்டளை இட்டார். உடனே வில், பாணம் முதலியவற்றோடு வேட்டைக்குப் புறப்பட்டார். காட்டில் சிங்கம், யானை முதலியவைகளை வேட்டையாடி அழித்தார் காட்டிலுள்ள வேடர்கள் பலர் பெருமாளை வந்து சேவித்தார்கள். இது தவிர புராணம் என் வராகம் என்ற புராணத்தில் பத்மாவதியை விவாகம் செய்யும் முன் பெருமாள் ராஜபுத்திர வேடத்தில் வேட்டையாடிக் கொண்டு பத்மாவதியின் உத்யான வனத்தை அடைந்ததாய் கதையுண்டு.

80. ஓம் விருஷபாஸுரஹாரிணே ஸ்ரீ வேங்கடேசாய நம

விருஷபன் என்கிற அசுரனை சங்கரித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

திருமலைக்குத் தெற்கே சிவபக்தன் விருஷபன் என்கிற அசுரன் சாதுக்களை ஹிம்சை செய்துகொண்டு வசித்து வந்தான்: திடீரென்று ஒரு நாள் பெரிய மலை தோன்றவே அந்த மலையைத் தோற்றுவித்தவின் மேல் யுத்தம் பண்ண அங்கு வருகிறான் 'வேடன்' உரு உள்ள திருமாலிடம் போர் புரியத் துணிகிறான், இருவருக்குமிடையே போர் கடுமையாக

மூண்டது இறுதியில் திருமால் சக்ராயுதத்தைக் கொண்டு அசுரனின் சேனையை வதைத்தார். அசுரன் திருமாலை அடையாளங்கண்டு கொண்டு சக்கராயுதத்தால் மாண்டு விட்டால் நற்கதி கிடைக்கும் எனக்கருதி இறைவனிடம் தன்னைக் கொல்லும்படி வேண்டினான். இறைவனும் அவனது விருப்பப்படி அவனைக் கொன்று மோட்சமளித்தார். இம் மலைக்கு கிருதயுகத்தில் விருட்ச பாசலம் என்றும், திரேதா யுகத்தில் அஞ்சனா சலமென்றும், திவாபர யுகத்தில் சேஷா சலம் என்றும் கலியுகத்தில் வேங்கடாசலம் என்றும் பெயர் வழங்கப்படுகிறது. இப்படி விருஷபாசுரனை கொன்றவனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் பொருளாகும்,

81. ஓம் அஞ்ஜனா கோத்ரபதயே ஸ்ரீ வேங்கடேசாய நம

அஞ்சன மலைக்கு அரசனான ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் பொருளாகும்.

திரேதாயுகத்தில் கேசரி என்று ஒரு அசுரன் இருந்தான், புத்திரபேறு அடைய அவன் சிவனிடம் தபசு செய்தான், 'உனக்கு புத்திர பாக்கியம் கிடையாது அதலால் ஒரு பெண் பிறக்கும்படி அனுகிரகம் செய்கிறேன். அப்பெண்ணுக்கு நீ கோரியபடி உத்தமமான ஒரு புத்திரன் ஜனிப்பான்' என்று வரமளித்தார். அந்த பெண்ணுக்கு அஞ்சனை என்று பெயரிட்டு வளர்த்து வந்தான் கேசரி என்கிற வானரனுக்கு மணம் செய்து வைத்தனர். அஞ்சனாதேவி குழந்தை வேண்டி திருமலையில் ஆகாய கங்கையில் ஏழு வருடம் தபசு செய்தாள் வாயு பகவான் ஒவ்வொரு நாளும் பழத்தை ஆகாரமாக அவளுக்குக் கொடுத்தான், ஒரு நாள் பார்வதியும், பரமசிவனும் அம்மலையில் ஏகாந்தமாய் உலா வந்து கொண்டு இருக்கும் போது அவர்கள் எதிரில் வானர மிதுனம் தங்களுக்குள் உடலுறவுக் கொண்டதைப் பார்த்த பார்வதி நாமும் அந்த வானர ரூபத்தை எடுத்து அனுபவிப்போம் என்று கூற சிவனும் சம்மதிக்கவே அவர்களின் தேஜஸ் பூமியில் சிதறி விட்டது. வாயு பகவான் அதை எடுத்து வந்து அஞ்சனா தேவிக்கு கொடுத்தான். அவள் வழக்கம் போல பழம் என்று புசித்து விட்டாள் பிறகு அவள் கர்ப்பம் தரித்து. ஆஞ்சனேயன் என்ற குழந்தையைப் பெற்றெடுத்தாள் அவனே சுக்ரீவ மந்திரியாய் இருந்து ஸ்ரீ ராமனுக்கு அனேக உதவிகளைச் செய்தவன் ஆக ஆஞ்சனாதேவி இம்மலையில் தபசு செய்து லோகோத்தரனான பிள்ளையைப் பெற்றபடியால் இம்மலைக்கு அஞ்சனாசலம் என்று பெயர் வந்தது.

82. ஓம் விருஷபாசலவாஸிநே ஸ்ரீ வேங்கடேசாய நம

விருஷபாசலம் எனப்படும் திருமலையில் வசிக்கும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

மேற்குறிப்பிட்டபடி பெருமாளுடைய சக்ராயுதத்தால் தனக்கு மரணத்தை அவ்விருஷபாசுரன் வேண்டும் போது மற்றொருவரனையும் பிரார்த்தித்ததாக தேவர்களுடைய சக்ரத்தால் அடியேனுக்கு இம்மலையில் மரணம் நேர்ந்ததற்கு அடையாளமாக இன்று முதல் இம்மலை என் பெயரால் 'விருஷபாசலம்' என்று வழங்கபட வேண்டும் என்று வேண்டினான். பகவானும் கோரிக்கையை ஏற்றார்.

83. ஓம் அஞ்ஜனாஸுததாத்ரே ஸ்ரீ வேங்கடேசாய நம

அஞ்சனைக்கு அருமைத்தனயனை அளித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பதாகும்.

வாயுவின் உதவியினாலும் சிவனுடைய சம்பந்தத்தாலும் அஞ்சனைக்குப் புத்திரன் ஜனித்தான் இப்படியிருக்க ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளை அஞ்சனைக்குப் புத்திரனை அளித்தவன் என்று எப்படி இங்கு அனுசந்திக்கக் கூடும் என்று சந்தேகிக்க வேண்டாம். குரத்தி வடிவத்தில் வந்த தர்ம தேவதை சீனிவாசனே ஆதலால் அவருடைய உபதேசத்தின் பேரிலேயே இம்மலையில் அஞ்சனை சித்தி பெற்று புத்திரனை அடைந்தாலும் சீனிவாசனே இப்படித்திர உத்பத்திக்கு முக்கியக் காரணம் ஆக எப்படியும் அவளுக்குப் புத்திரப்பேறு உண்டானதில் சீனிவாசனுக்கே முக்கியமான பங்கு என்பதை உத்தேசித்தே இத்திருநாமத்தில் சீனிவாசனே அச்சனைக்குப் புத்திரனை அளித்தவனென்று சொல்லப்படுகின்றது. இப்படி அஞ்சனைக்குப் புத்திரனை அளித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். என்பது இத்திருநாமத்தின் பொருளாகும்.

84. ஓம் மாதவீயாக ஹாரிணே ஸ்ரீ வேங்கடேசாய நம

மாதவன் என்கிற பிராம்மணனுடைய பாவங்களைப் நீக்கிய ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

வேங்கடமலைக்குத் தெற்கில் நந்தனம் என்கிற பட்டணத்தில் புரந்தன் என்று ஒரு பிராம்மணன் இருந்தான் அவனுடைய மகன் பெயர் 'மாதவன்' மாதவனுக்குப் பாண்டிய தேசத்துப் பெண் ஒருத்தியை மணம் முடித்தனர். ஒரு நாள் மாதவன் தன் மனைவியாகிய சந்திரிலேகையை போகத்திற்கு அழைத்தான். அது பகல் வேளையாக இருந்ததினால் அவள் சம்மதம் தெரிவிக்காமல் ஆற்றங்கரைக்கு வரச்சொன்னார், இருவரும் ஆற்றங்கரையில் இருக்க அழகான வேறு பெண்ணை மாதவன் கண்டான். உடனே மாதவன் தன் மனைவியை நோக்கி இப்போது வேண்டாம் நீ வீட்டுக்குச் செல் என்று சொல்லி அனுப்பி விட்டான். அந்த அழகானப் பெண்ணுடன் உடலுறவுக் கொள்ள பல வகை மொழிகளைக் கூறி அவளை அடைந்தான் குந்தளை என்கிற அந்த சண்டாளப்பெண் மீன், மாமிசம் முதலானவைகளைக் கொடுத்து அவனைத் தன்னிடம் வைத்துக் கொண்டாள். சில நாட்களுக்குப்பின் இறந்து விட்டாள். அவளது பிரிவால் தாங்காத மாதவன் பைத்தியம் பிடித்தவனைப் போல் சுற்றி அலைந்து திருமலை யாத்ரீகர்களுடன் கபில் தீர்த்தத்தில் நீராடி மலையில் ஏற ஆரம்பித்ததும் சாபங்கள் நீங்கி பழைய உருவத்தை அடைந்தான் உடன் வந்த யாத்ரீகர்கள் இவனுடைய வரலாறு கேட்டறிந்து உன்னுடைய இந்த கோரமான பாவங்களைக் கொளுத்தியதால் இம்மலைக்கு 'வேங்கடாசலம்' என்று பெயர் விளங்கட்டும் என்று சொல்லி போனார்கள்

85. ஓம் ப்ரியங்கு ப்ரியபட்சாய ஸ்ரீ வேங்கடேசாய நம

86. ஓம் ச்வேத கோலவராய ,,

87. ஓம் நீல்தேனுபயோதாராஸே கதேஹோத் பவாய ,,

88. ஓம் சங்ரப்ரியமித்ராய ,,

89. ஓம் சோள புத்ரப்ரியாய ,,

பிரியங்கு என்கிற தினை தானியத்தை தனக்கு இஸ்டமான உணவாகக் கொண்ட ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். வெண்பன்றி உருவம் கொண்ட ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். காணம் பசுக்களுடைய பால் தாரையின் அபிஷேகத்தால் வெளிக் கிளம்பிய திருமேனியையுடைய

ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். ருத்திரனுக்கு விருப்பமான நண்பனான ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் சோள தேசத்தரசன் மைந்தனுக்கு விருப்பனான ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் வெளிப்பாடாகும்.

இந்த ஐந்து திருநாமங்களும் ஒரே கதையை அனுசரித்து அமைந்துள்ளனவாதலால்· இவைகளை ஒன்றாய்ச் சேர்த்தே அனுபவிப்பது சரியானது.

ஒரு காலத்தில் சோள தேசத்தரசன் ஒருவன் வேட்டையாடுவதற்கு காடுகளில் சுற்றி அலையும் போது தனஞ்செயன் என்ற சர்பராஜனின் பெண்ணை தற்செயலாய் கண்டு அவளிடம் மோகம் கொண்டான் காந்தர்வ விதியாய் இருவரும் மணம் முடித்தனர். அவள் கர்ப்பம் தரித்து மகனைப் பெற்றாள். ஐந்து வயதில் அவன் தன் தகப்பனாரைப் பார்க்க விரும்பினான். சோள தேசத்தரசன் சம்மதித்தான். தன் தகப்பனாரிடம் சென்றான். முதலில் அந்த அரசன் சற்று தயக்கம் காட்டினார். ஆகாச வாணி தோன்றி அந்த சிறுவனுடைய வரலாற்றையும், பலன்களையும் எடுத்துச் சொல்லி அவனை ஏற்கும்படிச் செய்தது. அரசனும் அந்த சிறுவனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்தான். தானும் நாகக் கன்னியும் சந்தித்த அந்த இடத்தில் ஒரு பட்டணத்தை அமைத்து அந்த இடத்தை ராஜ தானி ஆக்கினான்.

ஒரு நாள் இந்த அரசனுடைய ஆட்சிக்குட்பட்டவர்களுள் 'இடையர்' என்ற குலத்தவர்கள் வந்து அரசே நாங்கள் தினமும் பால் குடங்களை ஏந்திக் கொண்டு மலைப் பிரதேசங்களைக் கடந்து வருகையில் குறிப்பிட்ட ஓர் இடத்திற்கு வந்ததும் குடங்கள் பிளந்து இரண்டாகி பால் முழுவதும் புற்றில் சேர்ந்து விடுகின்றன என்று சொல்ல, அன்று இரவில் அரசனுடையக் கனவில் ஒருவன் தோன்றி தான் திருமாலால் அனுப்பப்பட்டவன் என்றும், என்னுடன் வந்தால் திருமாலின் விமானத்தையும், மலையையும் காணலாம் என்றும் சொன்னான். கோபாலர்கள் சொன்ன வார்த்தைக்கும், கனவுக்கும் சம்மந்தம் உள்ளதை உணர்ந்து, புற்றை அடைந்து பாலால் கரைத்து பெருமாளை வெளிப்படுத்த வேண்டும் என்று உரைத்தார்கள். அச்சமயம் வேங்கட

மலையில் வசிக்கும் வேடன் ஒருவன் தோன்றி என்னுடைய புலத்தை தினமும் வெள்ளை பன்றி அழித்து வந்தது. இதற்காக என் மைந்தனைக் காவல் வைத்தேன். நான் தேன் கொண்டு வரச்சென்றேன். திரும்பி வருகையில் என் மைந்தன் அத்தினை களை உண்பதைக் கண்டு கோபத்தால் கொல்ல நினைத்தேன். அப்போது வேடன் தோன்றி 'உன் பக்திக்கு மெச்சின பெருமாள தினை தானியத்தை அமுது செய்து சாப்பிட்ட மிச்சத்தையே உன் மைந்தன் சாப்பிடுகிறான் ஆதலால் தோஷம் இல்லை. என்றது. உடனே அரசன் மந்திரிகளை அழைப்பித்து ஆயிரம் குடங்கள் பாலைக் கொண்டு வரச் செய்தான். வேடனுடன் சென்ற அரசன் வெள்ளைப்பன்றியையும் விமானத்தையும் பார்த்தான். இரண்டும் புற்றுக்கு நேராகச் சென்றதும் மறைந்து விட்டன.

வேடன் மறைந்த பன்றியைக் குறித்துச் சொல்ல (விஷ்ணு) விமானமும் இவருடையதே ஆதலால் புற்றைத் தோண்டினால் திருமாலைக் காணலாம் என்றான். ஆயிரம் பாற்குடங்களால் புற்றைக் கரைத்த மாத்திரத்தில் அங்கு பெருமாளைக் கண்டு வணங்கி நின்றான். இப்படி கபிலைப் பசுவின் பாலால் கரைக்கப்பட்ட புற்றிலிருந்து தோன்றிய பெருமாள் ''ராஜ புத்திரனே உன்னுடைய பக்தியை மெச்சினேன். உனக்கு என்ன வரம் வேண்டும் என கேட்க 'பிரபுவே நீங்கள் இந்த உருவத் துடன் இங்கே எழுந்தருளி எல்லா ஜனங்களுக்கும் அனுக் கிரகம் செய்ய வேண்டும் என்று சொன்னார். பகவானும் அவன் வேண்டுகோளை அங்கீகரித்தார்.

பிறகு இந்த அரசன் நான்முகன் ருத்திரன், இந்திரன் முதலிய சர்வ தேவர்களையும் வரவழைத்து உத்தம பிரா மணர்களைக் கொண்டு சீனிவாச பகவானுக்கு திவஜா ரோஹண பூர்வமாய் பிரம்ம உத்ஸவத்தை நடத்தி வைத் தார். இதுவே சோள ராஜபுத்திரனின் சுருக்கமான வரலாறா கும்.

90. ஓம் ஸுதர்மிணீ ஸுசைதார்ய ப்ரதாத்ரே
ஸ்ரீ வேங்கடேசாய நம

சக்ரவர்த்தி மஹாராசன் சீனிவாச பகவானுக்கு பிரம்ம மோத்ஸவம் நடத்தி வைத்த பிறகு கிருஷ்ண சர்மா என்கிற

அந்தணன் மனைவியுடனும், குழந்தையுடனும் அரசனைக் காண வந்தான். தான் காசி புண்ணியஸ்தலத்திற்குப் போக வேண்டும் என்பதால் பச்சிளங் குழந்தையையும், என் மனைவி யான ஸுதர் மினியையும் தங்களது மேற்பார்வையில் இங்கு தங்கும்படி அனுமதிக்க வேண்டும் என்று வேண்டினான். அரசனும் இசைவு தெரிவித்தான். அரசன் அந்த பெண் மணிக்கும், குழந்தைக்கும் தனியே வீடு அமைத்துக் கொடுத்து ஆறு மாதத்திற்குரிய உணவுப் பண்டங்களையும் கொடுத்து உதவினான். பின்னர் அரசன் தன் அரசுப் பணிகளில் ஈடு பாடு செலுத்தியதின் காரணமாக அவர்களை நினைவில் கொள்ளவில்லை. ஆறுமாதம் கழிந்த பிறகு அந்தணன் அரச ரிடம் வந்து தன் மனைவியையும், குழந்தையையும் ஒப்படைக்கு மாறு வேண்டினான் அந்தணன் கேட்டவுடன் அரசனுக்கு அவளது நினைவு வந்தது, அவளைக்கண்டு ஆறு மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டதையும், உணவுப்பண்டம் ஆறு மாதங்களுக்கு மட்டுமே அளித்ததையும், அவளை வெளியே வரக்கூடாது என்று கட்டளை இட்டதையும் நினைவுக்கு வந்தது. உடனே தனது பணியாட்களை அனுப்பி நலன் விசாரிக்கும்படி கட் டளையிட்டான். வேலைக்காரன் சென்று பார்த்தபோது அவளும், குழந்தையும் இறந்து பல நாட்கள் ஆகின்றன போல் உள்ளது. இருவரும் எலும்பும் தோலுமாய் உள்ளனர் என்று சொன்னான் உடனே அரசன் மனம் நொந்து துக்கித்து 'ஓ பிராம்மணரே உமது மனைவியும், குழந்தையும் இப்போது தான் திருமலை சென்றுள்ளார்கள். அங்கு சீனிவாசனைத் தரிசித்து விட்டு வீடு திரும்புவார்கள் எனவே ஒரு நாள் பொறுத்தருள்க என்று சொன்னான். உடனே அரசன் திரு மலைக்கு சென்று சீனிவாசனிடம் சாஸ்ட்டாங்கமாய் விழுந்து நடந்ததை எடுத்துச் சொல்லி இந்த பேராபத்திலிருந்து என்னைக் காப்பாற்ற வேண்டும் என்று கதறி அழுதான்.

'அரசே பயப்படவேண்டாம். கிருஷ்ண சர்மா காசிக்குப் போவதற்கு முன்பு என்னிடம் உத்தரவு பெற்றே போனான் அவருடைய மனைவியும் புனிதயானவள் மேலும் என்னிடம் பக்தியாய் இருப்பவள் அவாகளுடைய உயிர்கள் இன்னும் யமனைப் போய சேரவில்லை என்னுடைய சரீரத்திலேயே வைத்திருக்கிறேன். என்று சமாதனப்படுத்தி விஷ்வக்ஸேசனைப் பார்த்து 'அஸ்தி கூடம்' என்ற புண்ணிய தீர்த்தத்திலிருந்து நீரைக் கொண்டு வந்து பிணங்களை அபிஷேகம் செய்தால் உயிருடன் எழுவார்கள் என கட்டளையிட்டார் பகவானின்

கட்டளையைச் செய்தபிறகு இவர்கள் உயிர் பெற்று விட்டார்கள்.

91. ஓம் மதுகாதிநே ஸ்ரீ வேங்கடேசாய நம

மது என்கிற அசுரனை அழித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

நான்முகனுடைய இடர்களைப் போக்க பகவான் மீன் உருவம் எடுத்து பாதாளம் சென்று 'மது' என்கிற அசுரனை கொன்று வேதத்தை மீட்டு வந்த சரிதம் இத்திருநாமத்தில் பேசப்படுகிறது.

92. ஓம் கிருஷ்ணாக்ய விப்ரவேதாந்த தேசிகத்வ ப்ரதாய ஸ்ரீ வேங்கடேசாய நம

கிருஷ்ண சர்மா என்கிற பிராம்மணனுக்கு வேதாந்தாசார்யத்வம் என்கிற பதத்தை அளித்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

பெருமாள் ஸதர்மிணியின் உயிரையளித்து அவளையும் குழந்தையையும் காப்பாற்றின போது நான்முகன் ருத்திரன் முதலிய தேவர்களும் அக்காட்சியைக் காண வேங்கடமலைக்கு வந்தார்கள் என்று சொன்னோம். அப்போது பகவானை கிருஷ்ணசர்மாவும் விசேஷமாய் ஸ்தோத்திரம் செய்து வணங்கி நின்றான். அச்சமயத்தில் பகவான் சக்ரவர்த்தியைக் கூப்பிட்டு, அரசனே! இந்த கிருஷ்ண சர்மா என்கிற பிராம்மணனுக்கு ஈடானவன் இவ்வுலகில் கிடையாது. என்னிடம் பக்தி செய்வதிலும், சாஸ்திரங்களில் பேசப்பட்ட நியமங்களைச் சரிவர அனுஸ்டிப்பதிலும் இவன் மிகவும் தேர்ந்தவன் இவன் வரும் பிறவியில் வேத அர்த்தங்களை உலகில் விசேஷமாய் பரவச் செய்து அந்த பிறவியின் முடிவில் என் மோட்சத்தை அடையப் போகிறான் இவ்வாறு பகவான் அந்த கிருஷ்ண சர்மாவை அனுக்ரகித்தார்.

93. ஓம் வராஹாசல நாதாய ஸ்ரீ வேங்கடேசாய நம

வராகமலைக்கு அதிபதியான ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

பகவான் வராக ரூபம் எடுத்து இந்த கல்பத்தின் ஆரம்பத்தில் பூமியை பாதாளத்திலிருந்து எடுத்து வந்து அதன் நிலையில் நிறுத்தின பிறகு, தான் பக்தர்களை அனுக்கிரகிப்பதற்காக இந்த பூலோகத்திலேயே இக்கல்பம் முடியும் வரை வசிக்கவேண்டுமென விரும்பி வைகுண்ட லோகத்திலிருந்து தன்னுடைய கிரீடா பர்வதத்தைக் கருடன் மூலமாய் வரவழித்து இந்த ஸ்வர்ணமுகி நதிக்கரையில் நிலை நாட்டினார். அதுவே இன்று வேங்கடமலையாக விளங்குவது பகவான் அன்று எடுத்த வராக ரூபத்துடனே இன்றளவும் இம்மலையில் பக்தர்களுக்கு அருள் புரிகின்றான்.

94. ஓம் பலபத்ராய ஸ்ரீ வேங்கடேசாய நம

பகவான் என்கிற சொல்லின் பொருள் ஞானம், பலம், செல்வம், வீரியம், சக்தி, தேஜஸ் என்பதாகும். இவைகளுள் ஞானமும் பலமும் முதன்மையானவை இந்த இரண்டு குணங்களும் ஆதிசேடனிடமும், பலராமனிடமும் காணப்படுகின்றன. சீனிவாசன் எவ்வளவு துஸ்டனாய் இருந்தாலும் தன்னை வேண்டிக் கொண்டால் அவனுடைய குணத்தைக் காட்டாமல் கோரிய பலனைக் கொடுப்பதால் சீனிவாசனை பலராமனாக அனுசந்திப்பதில் அதிக பொருத்தம் உண்டு. இப்படி பலராமனைப் போல் எல்லோருக்கும் நன்மையையே விளைவிக்கும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன் என்று இத்திருநாமத்தின் பொருளாகும்.

05. ஓம் திரிவிக்ரமாய் ஸ்ரீ வேங்கடேசாய நம

திரிவிக்ரமாவதாரமெடுத்து மூன்றடி அளந்த ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

வேண்டியவன், வேண்டாதவன், உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்றில்லாது பாகுபாடின்றி மூவுலகங்களையும் தன்னுடைய திருவடியால் அளந்து முத்திரை இட்டு தன்னுடையதாகச் செய்துக் கொண்ட பெருமை திரிவிக்கிரமாவதாரத்திற்கு தனித்தது என்றும் காரணத்தினால் வேதங்களில் பல இடங்களில் இத்திரு அவதாரம் புகழப்பட்டுள்ளது.

96. ஓம் மஹதே ஸ்ரீ வேங்கடேசாய நம

மிகப்பெரியோனான ஸ்ரீவேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

'மகாந்' என்றால் மிகப் பெரியவன் என்று பொருள் பெருமாளுடைய திவ்ய மங்கள விக்ரெங்களுள் திரிவிக்ரமனுடைய திருமேனி மிகவும் பெரியது தயை என்கிற பகவானின் உயர்ந்த குணமே இங்கு 'மகான்' என்று பேசப்படுகின்றது. மேலும் இந்த 'மகாத்' என்ற பதமும் பிரம்ம என்ற பதமும் பெருமாளின் ஸ்வரூபத்தினுடைய மகத்துவத்தையும், கல்யாண குணங்களுடைய பெருமையையும் சொல்லும்.

97. ஓம் இருஷீகேசாய ஸ்ரீ வேங்கடேசாய நம

சர்வ சேதனர்களுடைய எல்லா இந்திரியங்களையும் நியமிப்பவனான ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

கிருஷீகம் என்றால் இந்திரியங்களுக்குப் பெயர். எல்லோருடைய புலன்களும் அநதந்த செயல்களில் ஈடுபடுவது பரம புருஷனின் சங்கல்பத்தால் ஏற்படுவதால் அவன் கிருஷிகேசனாகிறான். இது தவிர பகவான் செய்யும் ஜகத் ஸ்ருஷ்டி முதலிய கல்யாண குணங்களும் கிருஷிகேச பதத்திற்குப் பொருளாகலாம் என்று ஆகம சாஸ்திர வசனங்களைக் கொண்டு ஸ்ரீ தேசிகன் தாத்பர்ய சந்திரிகையில் நிஷ்கர்ஷித்துள்ளார். இப்படிப்பட்ட உயர்வு பரபிரம்ம சொரூபியான நம் திருவேங்கடவனிடமும் உள்ளது என்பதே இத்திருநாமத்தின் பொருள்.

98. ஓம் அச்யுதாய ஸ்ரீ வேங்கடேசாய நம

அச்சுதன் எனப்படும் ஸ்ரீ வேங்கடேசனை சரணமடைகிறேன்.

எவ்வகையிலாவது தன்னை நாடி வந்தவர்களை நழுவாதபடி தான் இறங்கி வந்து அவர்களைக் காப்பாற்றுகிறான் என்பது இங்கு அனுசந்திக்க வேண்டிய குணம், பகவானுடைய இந்த குணத்தையே ஆழ்வார்கள் அதிகமாய் அனுபவித்தார்கள். இந்த உலகுகளுக்கெல்லாம் ஈசுவரனை பகவான் ஆச்ரிதவாத்சல்யத்தால் சர்வ தோஷங்களுக்கு இருப்பிடமான ஆச்ரிதனுடைய உடலில் உள்ளே வந்து கட்டை விரலளவில் உருவம் எடுத்து நிற்கிறான். இவ்வளவு தோஷமுள்ள சரீரத்தில் தான் வந்து நிற்கும் போதும் அத்தோஷங்களைப்

பார்த்து வெறுப்படைவதில்லை. என்றப்படி பேசும் உப னிஷத்துக்களே கீழ் கூறிய ஆழ்வார்களுடைய அனுபவத்திற்கு மூலமாம்.

99. ஓம் நீலாத்ரி நிலயாய ஸ்ரீ வேங்கடேசாய நம

நீலாத்ரி எனப்படும் வேங்கட மலையில் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

நீலன் என்கிற வானரன் இம்மலையில் நித்யவாசம் செய்தான். ஆதலால் இம்மலைக்கு நீலகிரி என்று பெயருள்ளது. ஸ்ரீராமன், ஸுக்ரீவன், அனுமான், அங்கதன் ஜாம்பவான்

நீலன் முதலிய வானரர்களுடன் இராவணவதத்திற்காக நிச்சயமாக மலையிலிருந்து புறப்பட்டு வரும் வழியில் இந்த அஞ்சன மலையில் அஞ்சனா தேவியின் வேண்டுகோளின்படி வ்வானர்களுடன் ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் கொஞ்ச காலம் வசித்ததாய் கூறப்படுகிறது. அச்சமயத்தில் இம் மலையை நீலாத்ரி என்று அழைக்கப்பட்டதாம். இப்படி பகவான் வானர ஜாதியில் பிறந்த நீலனுக்கும், தன்னுடைய பிரத்னத்தைப் பாராமல் சாட்சாத்காரத்தை அளித்ததால் அவருடைய குணநலன்கள் இந்த நீலனுடைய சரிதத்தில் விளககப்படுகிறது. இத்துடன் யார் தபசு செய்தாலும் விரைவில் சித்தியளிக்கக் கூடிய மகிமை வாய்ந்தது இம்மலை என்பதும் இங்கு குறிப்பிடலாம்.

100. ஓம் க்ஷீராப்தி நாதாய ஸ்ரீ வேங்கடேசாய நம

பாற்கடலில் பள்ளிகொண்டுள்ள ஸ்ரீ நாத ரூபியான ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன். இப்படிப்பட்ட வியூக ரூபத்தில் பெருமாள் கிராப்தியில் வசிப்பதற்கு முக்கிய நோக்கம் யாதெனில் வைகுண்டத்திற்குப் போக முடியாதவர் களும் தங்களுடைய குறைகளைப் போக்கிக்கொள்ள நேரில் பகவானை தரிசித்து அவரிடம் விண்ணப்பித்துக் கொள்ளவே யாம். ஆகையாலேயே ஸ்ரீ கிருஷ்ணவதாரம் ஏற்படுவதற்கு முன்பு பசு உருவில் வந்த பூமி தேவியும், நான்முகனும் தேவர் களும் இந்த பாற்கடலில் நாதனிடம் வந்து தங்கள் குறையை முறையிட்டு அந்த பகவானிடமிருந்து நற்பயன்களை

யடைந்ததாய் பாகவதத்தில் கூறப்பட்டுள்ளது. இம்மாதிரியே இராமாவதாரத்திற்கு முன்பும் தேவர்கள் சிரப்தி நாதனை சரணமடைந்ததாக போஜராஜன் தனது இராமாயன சம்புவில் வர்ணித்துள்ளான். ஆக சம்சாரிகளான சேதனர்கள் தங்களுடைய இன்னல்களைப் போக்கிக் கொள்ள சிராப்தி நாதனை சரணமடைவதென்பது தொல் வழக்கமென்றும் அதற்காக தரித்துள்ளான் என்பதாகும்.

### 101. ஓம் வைகுண்டாசலவாஸிநே ஸ்ரீ வேங்கடேசாய நம

வைகுண்டாசலம் எனப்படும் ஸ்ரீ வேங்கட மலையில் நித்ய வாசம் செய்து வரும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

இவ்வேங்கட மலைக்கு வைகுண்டாசலமென்று பெயர் ஏற்பட பல காரணங்கள் உள்ளன. வராகப்புராணத்தில் முக்கியமாய் சொல்லப்பட்டக் காரணமாவது-பகவான் வராக ரூபமெடுத்து இந்த கல்பாரம்பத்தில் பூமியை பாதாளத்தி லிருந்து எடுத்து நிறுத்தியவுடன் இப்பூலோகத்திலேயே ஓரிடத்தில் தான் பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி இந்த கல்பம் முடியும் வரையில் வசிக்கவேண்டும் என நினைத்து வைகுண்ட லோகத்தில் தன்னுடைய கிரீடாபர்வதத்தைக் கருடன் மூலமாய் வரவழைத்து இந்த ஸ்வர்ணமுகி நதிக் கரையில் ஆரம்பித்து இம்மலையில் ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் மகாலட்சுமியுடன் வாழ்ந்து வருகிறார். வைகுண்டத் திலிருந்து கொண்டுவரப்பட்ட பர்வதம் எனவே இதற்கு வைகுண்டாசலமென்று பெயர் வந்தது.

### 102. ஓம் முகுந்தாய ஸ்ரீ வேங்கடேசாய நம

'முகுந்தன்' எனப்படும் ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடை கிறேன். முகுந்தன் என்றால் மோட்சம் அளிப்பவன் என்ப தாகும். விசிஸ்டாத்வைத சித்தாந்தப்படி மோட்சமாவது வைகுண்டம் எனப்படும். உத்தம லோகத்திற்குச் சென்று சர்வ கர்மங்களும் தொலைந்த ஜீவன் பகவானுக்கு சமமாய் எட்டு உத்தம குணங்களை அடைந்தவனாய் பரிபூர்ண பிரம்ம அனுபவம் பெற்று அவ்வனுபவத்தின் போக்கு வீடாக திவ்விய தம்பதிகள் என்பப்படும் லட்சுமி நாராயணர்களுக்குப் பரம ப்ரீதியுடன் கைங்கர்யம் செய்வதேயாகும். பரிபூரண ப்ரீதி எனப்படுவது சித்-அசித் எனப்படும் இந்த உலகம் முழுவதும்

பகவானுக்கு சரீரமாய் நிற்கும் நிலையையும், பகவான் அவைகளுக்கு ஆத்மாவாய் நின்று அவைகளைத் தன் அதீன மாக்கி ஆளுகிற நிலையையும் நேரில் கண்டு அந்த பிரம்மத் தின் பெருமையையும் கல்யாண குண சேஷ்டிதாதிகளையும் அனுபவிப்பதேயாகும். இப்படிப்பட்ட மோட்சத்தை அளிப்ப தற்கு நாம் செய்யும் பக்தி பிரபக்திகள் எனப்படும் உபாயங் கள், சர்வாத்மா தகுந்ததென்று சொல்ல முடியாததால் பரம புருஷனே தன்னுடைய பரம கருணையால் அந்த மோட்சத்தை அளிப்பதால் அவனே உபாயமாகவும் ஆகிறான் ஆதலால் மோட்சத்தை அளிக்கக்கூடிய முக்கியமான உபாயம் கிருஷ்ண ரூபியான நம் திருவேங்கடமுடையானே ஆதலால் அவ்வேங்க டேசனை இங்கு முகுந்தன் என குறிப்பிடப்படுகிறது.

## 103. ஓம் அனந்தாய ஸ்ரீ வேங்கடேசாய நம

உபனிஷத்துக்கள் பிரம்மத்தை அனந்தம் என்று பேசுகிறது அந்தம் என்றால் முடிவு அதாவது அளவு அதில்லாதது அனந்தம் ஒவ்வொரு வஸ்துக்களுக்கும் மூன்று விதமான அளவு உண்டு. 1. குறிப்பிட்ட தேசத்தில் இருக்கும் 2. குறிப்பிட்ட காலத்தில் இருக்கும் 3. குறிப்பிட்ட பொருள் வாய்த்தாயிருக் கும். பிரம்மம் எனப்படும் ஜகத்காரணமான பொருள் இவ் விதமான மூன்று அளவுகளின்றி எந்த தேசத்திலும் எந்த காலத்திலும் எல்லா வஸ்துவாயுமிருக்கும். எல்லா காலத்திலும் இருக்கும் என்பதால் நித்யம் அழிவில்லாதது என்று சித்திக் கும். எல்லா வஸ்துவாயுமிருக்கும் என்பதால் அந்த பிரம்மம் எல்லா வஸ்துக்களிலும் உள்ளே பிரவேசித்து ஆத்துமாவாய் நின்று அவ்வஸ்துக்களை நியமிக்கிறது என்பது சித்திக்கும் இது பரம புருஷன் ஒருவனுக்கே உள்ளது. இதுவே அவன் சர்வ வஸ்துவாய் நிற்கும் நிலை, சர்வவஸ்துவாய நிற்கும் நிலையாவது சர்வாந்தர் யாமியாய் நிற்கும் நிலையேயாம், ஆக தேசபரிச்சேதம், காலபரிச் சேதம், வஸ்து பரிச்சேதம் எனப்படும் மூன்றுவித அளவுமில்லாமல் திரிவிதபரிச்சேதர் ஹிதனாய் இருப்பதே அனந்தன் என்கிற பதத்திற்குப் பொருள் இப்படிப்பட்ட பரப்பிரம்மத்தை அனுபவிப்பதே பரிபூரண ப்ரம்மானுபவம் இந்த அனந்தத்வம் என்கிற குணம் பகவானு டைய திவ்ய ஆத்ம ஸ்வரூபத்திற்கு சேர்ந்தது. இப்படிப் பட்ட பரப்பிரம்மம் திருவேங்கடமுடையோனே.

## 104. ஓம் விரிஞ்சாப்யர்திதா நீதஸௌம்ய ரூபாய ஸ்ரீ வேங்கடேசாய நம

நான்முகனால் ஆராதனைச் செய்யப்பட்டு அழகான ரூபநத்தை அடைந்துள்ள ஸ்ரீ வேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

சங்கரன் என்கிற அரசன் பகவானின் தரிசனம் வேண்டி வேங்கடமலையில் நீண்ட நாட்களாய் தபசு செய்தான் அதே காலத்தில் அகஸ்திய மஹர்ஷியும் புஷ்கரணியில் தபசு மேற்கொண்டார். ஒரு நாள் இறைவன் இவர்களுக்கு தரிசனமானார். இச்செய்தியறிந்த நான்முகன், சிவன் ஆகியோர் பகவானைத் தரிசிக்க இங்கு வந்தார்கள். அப்போது பகவான் விஸ்வரூபத்தில் தரிசனமானார். நான்முகன் கண்டு மிகவும் பயந்தான், பல தலைகள், பல கைகள், கோரைப் பற்கள், வாயிலிருந்து நெருப்பு சுவாலைகள் கக்கிக் கொண்டிருப்பதால் விளங்குபவர்களுக்கு பயங்கரமாய் இருந்தது. அப்போது நான்முகன் அருகில் சென்று அழகான ரூபம் எடுக்கும்படிக் கேட்டுக்கொண்டார். பின்னர் இறைவனும் அவர்களுடைய வேண்டுகோளை ஏற்று அழகான ரூபத்தில் வேங்கடமலையில் நிலை பெற்றார் என்பது இத்திருநாமத்தின் வரலாறு ஆகும்.

105. ஓம் ஸுவர்ணமுகரீஸ்னாதமனுஜ பீஷ்ட தாயிநே ஸ்ரீ வெங்கடேசாய நம

சுவர்ண முக நதியில் நீராடியவர்களுக்கு சகலவிதமான கோரிக்கைகளையும் பூர்த்தி செய்பவனான ஸ்ரீவேங்கடேசனைச் சரணமடைகிறேன்.

பகவான் அழகிய ரூபமெடுத்து தன்னை நாடிவந்த பக்தர்கள் கேட்ட வரத்தை அளித்து வந்தான். அவ்வமையம் அகஸ்தியர் வந்தார். நீர் வெகு காலம் இம்மலையில் தபசு செய்தாய். என்ன வரம் வேண்டும் என கேட்க எனக்கு உன்னுடைய பாதாரவிந்தங்களில் அஞ்சலமான பக்தி ஒன்றைத் தவிர வேறு யாதும் வேண்டாம். மேலும் இந்த சுவர்ணமுகி நதியில் நீராடி உன்னை யார் சேவிக்கின்றார்களோ அவர்கள் கோரிய பலன்கள் பலதாயினும் அவைகளை நீ அளிக்க வேண்டும் மேலும் வரும் கலியுகத்தில் குறைந்த ஆயுஸ்ஸும், குறைந்த ஞான சக்திகளுடைய மனிதர்கள் கடினமான தபசுகளை மேற்கொண்டு உம்மைக் காண்பது அரிது எனவே நீரே இந்த அழகான உருவத்துடன் இம்மலையில் நித்திய வாசம் செய்து மக்களுக்கு அருள்வாயாக இதுவே என் கோரிக்கை என வேண்டினார். பகவானும் அப்படியே செய்தார்.

## 106. ஓம் ஹலாயுத ஜகத்தீர்த சமஸ்தபலதாயிநே ஸ்ரீ வேங்கடேசாய நம

ஹலாயுத தீர்த்தத்தில் நீராடியவர்களுக்கு உலகிலுள்ள எல்லா தீர்த்தங்களிலும ஸ்னானம் செய்தால் எவ்விதமான பலன்கள் கிடைக்குமோ அப்பயன்களை அளிக்கும் ஸ்ரீ வேங்க டேசனைச் சரணமடைகிறேன். வேங்கடமலையில் முக்கிய 68 தீர்த்தங்களில் ஹலாயுத தீர்த்தம் என்றும் ஹாலாயுத தீர்த்தம் என்றும் இரண்டு தீர்த்தங்கள் உள்ளன. மேலும் இம்மலையில் 66 கோடி தீர்த்தங்கள் உள்ளனவென அவற்றில் 1008 தீர்த்தங்கள் முக்கியமானவை என்றும் அவற்றிலும் 108 தீர்த்தங்கள் சிறந்தவை. அவற்றிலும் 68 தீர்த்தங்களே ஜ்ஞானே வைராக்கியங்களையும் அளிப்பதால் மிக மிக முக்கிய மானவை என்றும் காரணம் கூறுகிறது. அதில் ஹலாயுத தீர்த்தத்தின் பெயரும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதில் நீராடினால் உலகில் உள்ள அனைத்து தீர்த்தங்களிலும் ஸ்னானம் செய்த பலன் கிடைக்கும் ஹலாயுதன் என்கிற பலராமன் ஜலத்திலுள்ள சர்வபுண்ய தீர்த்தங்களில் நீராடின தால் அவருக்கு சமஸ்த பலன்களையும் அளித்தவன் நம் ஸ்ரீ நிவாசனே என்றும் இத்திருநாமத்திற்கு அர்த்தம் சொல்ல லாம்,

## 107. ஓம் கோவிந்தாய ஸ்ரீ வேங்கடேசாய நம

கோவிந்த சப்தம் பூமியைப் பெற்றவன் என்கிற பொருளில் வராகப் பெருமாளையும் சொல்லும் அவ்வவதாரத்தில் பாதா ளத்தில் மூழ்கி போன பூமியை வெளியில் எடுத்து வந்தார். அப்படியே இது கண்ணனையும் சொல்லும் அப்போது பசுக்கள் ரட்சணம் செய்பவன் என்று பொருள். சமுத்திரத் தில் மூழ்கிய பூமியை வெளியில் எடுத்த சமயத்தில் ஹராக ரூபியான உன்னால் அடையப்பட்ட கோவிந்தன் என்கிற உன்னுடைய திருநாமம் மறுபடி இப்போது கோவர்தன மலையை எடுத்து ஆயர்களையும் பசுக்களையும் காத்த சமயத் தில் பிரகாசத்தை அடையக்கடவது என்று தேவேந்திரன் கண்ணனைப் பார்த்துச் சொல்லி கோவிந்தன் என்கிற திருநா மத்துடன் 'பட்டாபிஷேகம் செய்து வைத்தான் என்று சொன் னார். ஆக கோவிந்தன் என்கிற பதம் வராகப் பெருமானை யும், கண்ணனையும் சொல்லுமென்று தீர்ந்தது, வேங்கட மலையில் இந்த இரண்டு மூர்த்திகளையும் ஒருங்கே நாம்

இன்று சேவிக்கிறோம். இம்மலை வராகப்பெருமாளுடைய தாகவே இருந்து வராகச்சத்திரம் என்று பெயர் பெற்றது. இது தவிர பாகவத்களில் உத்தம ஸ்தனம் வகிக்கும் பிரகலாதனும் தன் தகப்பனால் தன் உயிருக்கு ஆபத்து நேர்ந்த சமயத்தில் 'கோவிந்த' நாமத்தை உச்சரித்துப் பிணி நீங்கப் பெற்றான். அப்படியே திரௌபதியும் கோவிந்தனைச் சரணாகதியடைந்து தனக்கு ராஜசபையில் துச்சாஸனனால் நேர்ந்த பேராபத்திலிருந்து விடுப்பட்டாள்.

ஆண்டாளும் தன் காதலை ஸ்ரீ கோவிந்தனுக்கே அர்ப்பணம் செய்து அவனுடைய கைங்கர்யத்தையே எப்போதும் வேண்டுகிறாள்.

'கொம்மைமுலைகள் இடர்தீர கோவிந்தற்கோர்
குற்றேவல்
இம்மைப்பிறவி செய்யாதே இனிபோய்ச்
செய்யும் தவம் தான் என்! நாச். 132

இற்றைப்பறை கொள்வான் அன்று நான் கோவிந்தா
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உந்தன்னோடுத்
தோமேயாவோம்
உனக்கே நாமாந்ச் செய்வோம்-திருப்-29

என்றவாறு ஆக தொன்றுதொட்டு இன்றளவும் எல்லா பக்தர்களாலும் பரம பக்தியுடன் அனுசந்திகப்பட்டு அவரவர்கள் கோரிய பலன்களை அளித்து வருவது இந்த கோவிந்த சப்தமாதலால் அதற்கு அர்சாஸமாதியில் முக்கியப் பொருளான சீனிவாசனையும் சேத்திராதிபதியானவராக மூர்த்தியும் சரணடைகிறேன் என்பது இத்திருநாமத்தின் பொருள்.

### 108. ஓம் ஸ்ரீநிவாஸாய ஸ்ரீ வேங்கடேசாய நம

சீனிவாசன் என்கிற திருநாமமுடைய ஸ்ரீ வேங்கடேச ... சரணமடைகிறேன்.

ஸ்ரீ நிவாசன் என்கிற பதத்திற்கு மகாலட்சுமியானவள் ... கணமும் விடாமல் எப்போதும் எந்த பெருமாளிடத்தில் சிக்கிறாளோ அந்த பெருமாள் என்று பெயர். இந்த சீனிவாசன் என்கிற திருநாமத்திற்குத் தனி மதிப்பு உண்டு.

மகாலட்சுமி, ஸ்ரீ என்கிற திருநாமத்திற்கு ஏற்ப ஜீவன்கள் ஆச்சர்யப்படுபவளும், குறைகளை கேட்பவளாயும், இவைகளைப் பகவானிடத்தில் உரைப்பவளாயும், பக்தர்களுடையப் பாவங்களைப் நீக்குபவளாயும் கைங்கரியச் சம்பந்தபட்டக்குணங்களை உண்டு பண்ணுபவளுமாயிருக்கிறார். இப்படிப்பட்ட ஆறுகுணங்களுடைய மகாலட்சுமியின் நித்ய இருப்பிடமாய் திகழ்வது சீனிவாசனே ஆகும்.

முதல் திருநாமம் 'வேங்கடேச' என்பது கடைசியானது 'சீனிவாசா' என்ற முதலாவதால் பக்தர்களின் சர்வ பாவங்களையும் போக்கும் தன்மையும், கடைசியதால் சர்வ பலன்களையும் அளிப்பதும் தானே பலமாய் நிற்கும் நிலையும் உரைக்கப்பட்டதாயிருக்கிறது. பகவானுடைய இந்த இரண்டு நிலைகளை விளக்க வந்தனவே நடுவிலுள்ள எல்லா திருநாமங்களையும் சொல்லலாம். இப்படி சர்வ வேதாந்த நூல்களிலும் புகழப்படுபவனும் தயாரூபிணியான ஸ்ரீ மகாலட்சுமியால் அலங்கரிக்கப்பட்ட திருமார்புடையவனுமான சீனிவாசனைச் சரணமடைகிறேன் என்பது இத்திருநாமத்திற்குரிய பொருள்.



**VAINAVA VARAN** *by:* **J. Manuel Price: Rs. 35/-**



**J. மனுவேல்**

முனைவர் ஜா. மனுவேல் அவர்கள் சித்தூர் மாவட்டத்தில் (ஆந்திர மாநிலம்) ஆமூதாலா என்ற சிற்றூரில் பிறந்தவர். இவரது பெற்றோர் திரு. ஜான், திருமதி. பாப்பம்மாள் ஆவர். இவர்தன் தொடக்கக் கல்வியை சொந்த கிராமத்தில் படித்து தன்னுடைய உயர்கல்வியை தீனபந்துபுரம் மற்றும் அம்மையார்குப்பம் போன்ற சிற்றூர்களில் முடித்தார். திருத்தணி அரசுக் கல்லூரியில் மேல்நிலைக் கல்வியைப் பயின்று வேலூர் மூத்துரங்கம் அரசுக் கல்லூரியில் இளங்கலைப் (பி ஏ.) பயின்று பட்டப் பெற்றார். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் முதுகலையில் தமிழைச் சிறப்புப் பாடமாக பயின்று அதில் எம். பிஃல் மற்றும் முனைவர் பட்டங்கலைப் பெற்றார். தமிழ், ஆங்கிலம் தவிர தெலுங்கு, கன்னடம், ஹிந்தி போன்ற மொழிகளில் தேர்ச்சி உண்டு நாட்டுபுறப் பாடல்களில் அதிகம் ஈடுபாடு கொண்டவர் கிராமத்துப்பாணியில் நாட்டுப்புறப் பாடல்கலைப் பாடும் திறன் உடையவர். ஒப்பாரி மனுவேல் என்று மக்களால் புகழப் பெற்றவர் குழந்தைப் பாடல்கள் படைப்பதில் ஆர்வம் மிக்கவர் இசையில் அதிக ஈடுபாடு உள்ளமையால் கர்நாடக இசையில் பட்டயம் பெற்றவர்.